

# இலக்கிய அருமைகள்

டாக்டர் இலக்குமி மீனாட்சி சுந்தரம்



ஜெயபக்தி பதிப்பகம்

# இலக்கிய அரும்புகள்

முனைவர் இலக்குமி மீனாட்சிசுந்தரம்
(இந்திய ஆய்வியல் துறை, மலாயாப் பல்கலைக்கழகம்)

மதிப்புக்குரிய கம்பன் அடிசூடி
பழ. பழனியப்பன் அவர்களுக்கு
நூலாசிரியரின் அன்பளிப்பு.

அன்புடன்,
M.S. ஸ்ரீலக்ஷ்மி,
சிங்கப்பூர்.
5/1/13.




ஜெய பக்தி பதிப்பகம்
28 & 30 Wisma Jaya Bakti, Jalan Cenderuh Dua,
Batu 4, Jalan Ipoh, 51200 Kuala Lumpur.
Tel: 6219399 (5 Lines) Fax: 6219585

# வாழ்த்துரை

## எல்லாமும் பெற்று வாழ்க!

பொற்குணம் என்ப தொன்றும்,
பொறுமையே என்ப தொன்றும்,
நற்படிப் பென்ப தற்கு
நல்லசான் றென்ப தொன்றும்,
கற்பவர்க் கொளிவி ளக்காய்க்
கமழ்வதாய் அமைந்த தொன்றும்,
இற்பிறப் பென்ப தொன்றும்
இலக்குமி உருவில் தோன்றும்!

தீந்தமிழ் தெளியக் கற்ருர்.
சீர்தூக்கி இலக்கி யத்தை
ஆய்ந்திடும் திறமை பெற்ருர்.
ஆங்கில அறிவும் பெற்ருர்.
நாம்தினம் நயந்து கற்கும்
மலாயில்நல் லறிவும் பெற்ருர்.
மாந்தருள் பெண்ணுக் கேற்றம்
மாண்புறப் படிப்பால் பெற்ருர்!

நலந்தரும் தமிழில் ஏற்றம்
நாள்தொறும் பெற்று வாழ்க!
பலகலைத் துறையில் தேர்ச்சி
பாங்குடன் பெற்று வாழ்க!
மலையக மொழியில் ஆய்வும்
மலர்ந்திடச் செய்து வாழ்க!
இலக்குமி டாக்டர் வாழ்வில்
எல்லாமும் பெற்று வாழ்க!

மு. துரைசாமி,
மாச்சாங்.

# என்னுரை

இலக்கியம் ஒரு பூஞ்சோலை! இதில் நுழைந்து கலை வண்டாய்ப் பறந்து பல்வகை மணம் நுகர்ந்து தேன் எடுப்பது சுவையான அனுபவம்! இவ்வனுபவத்தைத் தருவது இலக்கிய ஆராய்ச்சி. மலேசியத் தமிழிலக்கியத்தைத் தேடுவார் இலர், திறனுய்வு செய்வாரிலர் என்றெல்லாம் எழுத்தாளர்கள் ஏக்கத்துடன் புலம்பும் சொற்கள் என் செவிகளில் விழாமலில்லை. இவ்வெழுத்தாளர் பெருமக்களின் ஏக்கங்களைப் போக்க இந்நூல் ஒரு மருந்தாக அமையும். மருந்து கசக்கும், ஆயின் நலஞ்செய்யும்! அதுபோல 'இலக்கிய அரும்புகள்' என்னும் இந்நூல் மலேசியத் தமிழ் இலக்கியப் பயணத்தில் அரும்பிநிற்கும் துறைகளை இனங்காட்டுவதாய் - எதிர்கால இலக்கியச்சிந்தனைக்கு உரமூட்டுவதாய் அமையும் என நம்புகிறேன். சில கசப்பான உண்மைகளையும் கூறவேண்டிய கடப்பாடு திறனுய்வாளர் என்ற முறையில் எனக்குண்டு!

உண்மையை உரைக்க அஞ்சக்கூடாது. இலக்கியத்துறையில் இத்தகு அஞ்சாமை அவசியம் என எனக்குத் தோன்றியதால் - இலக்கிய வளர்ச்சியை - எதிர்காலத் தமிழ்ச் சமுதாயத்தைக் கருத்தில்கொண்டு மனந்திறந்து பல கருத்துக்களைக் கூறியுள்ளேன். அவை காய்தல் உவத்தலின்றிக் கனிந்தவை. ஒருபாற் கோடாத நடுநிலையால் பிறந்தவை.

இலக்கிய அரும்புகளின் முதற்பாகமே உங்கள் கரங்களில் தவழ்கின்றது. இது மலையகத் தமிழ் இலக்கியப் பயணத்தின் 'மைல்கல்லாக' அமைய வேண்டும் என்பது என் பேரவா!

இலக்கிய அரும்புகள் இதழ் விரிக்கத் தொடங்குமுன் தமிழுணவையும், தமிழுணர்வையும் ஊட்டிய என் பெற்றேரையும், இந்நாட்டு இலக்கியத்திற்குச் சேவை செய்ய எனக்குப் பல்காலும் உறுதுணைநின்ற கணவரையும் நன்றியோடு என் நெஞ்சம் நினைக்கின்றது. உடன்பிறவாமலே எனக்குற்ற சோதரராம் கவிஞர் மாச்சாங் துரைசாமிக்கும், எனக்குப் பல செய்திகள் வழங்கிய எழுத்தாளர் பெருமக்களுக்கும் நனிநன்றி!

என்னுடைய இலக்கிய முயற்சி ஜெயபக்தி பதிப்பகத்தின் உரிமையாளரான திரு. செல்வராஜூ அவர்களின் தமிழ் ஈடுபாட்டாலும், நல்லுள்ளத்தினுலுமே நல்லதொரு நூலாக உருவெடுத்திருக்கின்றது. இன்முகத்தோடு உதவிய அவருக்கு 'நன்றி' என்ற சொல்லால் மட்டும் என்னுடைய நன்றியைப் புலப்படுத்திவிட முடியாது! இந்நூலைச் செம்மையான முறையில் தட்டச்சு செய்துகொடுத்த திரு. குழந்தைவேலு அவர்களுக்கும் நனிநன்றி.

இலக்கிய அரும்புகள் விரிந்து மணம்பரப்பத் துடிக்கின்றன! நான் தடையாக நிற்க வேண்டாமல்லவா?

இப்படிக்கு

முனைவர் இலக்குமி மீனுட்சிசுந்தரம்,
இந் திய ஆய்வியல்துறை,
மலாயாப் பல்கலைக்கழகம்.

# பதிப்புரை

இலக்கிய அரும்புகள் என்னும் இந்நூல் மலேசியத் தமிழ் இலக்கியத்துறையில் அரும்பி நிற்கும் துறைகளை இனங்காட்டி அவை வளர்ந்து மணம் பரப்பத் துணைபுரியும் அரிய நூலாகும். இலக்கிய இலக்கணங்களில் ஆழ்ந்த புலமையும் தோய்ந்த நெஞ்சமும் கொண்ட முனைவர் திருமதி இலக்குமி மீனுட்சிசுந்தரம் அவர்கள் இந்நூலாசிரியர். மலையகத் தமிழ்ச் சமுதாயத்தின்பாலும், மலையகத் தமிழ் இலக்கிய வளர்ச்சியின்பாலும் பெருநாட்டம் கொண்டவர். இந்நாட்டு இலக்கியங்களை நடுவுநிலை நின்று ஆராய்ந்து அவர் எழுதிய ஆய்வுக்கட்டுரைகளை நூலாக வெளியிடுவதில் பேருவகை அடைகிறோம். மலையகத் தமிழ் இலக்கியத்துறைக்குப் பயனுடைய அரிய பல கருத்துக்களை இந்நூலின் வழி ஆசிரியர் கூறியுள்ளார். முகையவிழ்ந்து மணம் பரப்பத் துடிக்கும் இலக்கிய அரும்புகள் இலக்கிய மணத்தையும், இலக்கிய இன்பத்தையும் வாரிவழங்கும் என்பதில் ஐயமில்லை. தமிழின்பந் துய்க்க விழையும் வாசகப் பெருமக்களுக்கு இந்நூல் உற்ற துணைவன். ஆய்வாளர்க்கும் மாணவர்க்கும் அரிய கையேடு. பயன்பெறவேண்டியதும், தமிழ்நூல்களை வாழவைப்பதும் வாசகர் கடமை என்பதனை நினைவூட்டுகிறோம்.

இப்படிக்கு,

கு. செல்வராஜூ
உரிமையாளர்,
ஜெயபக்தி பதிப்பகம்.
*21-10-1991*

# வரலாற்று நாவல்கள்

திரைகடலோடியும் திரவியம் தேடச்சென்ற தமிழர்கள் வயிற்றுப்பசியைத் தணித்துக்கொண்டதோடன்றித் தாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் வாழ்க்கைக்கு வேண்டிய கலைகளை வளர்க்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இங்ஙன் வளர்ந்த கலைகளுள் ஒன்று இலக்கியக்கலை. மக்கள் வாழ்வினின்று முகிழ்ப்பதால் இவ்விலக்கியக்கலை ம்க்கள் வாழ்வைப் பிரதிபலிக்கும் ஆடியாகவே இலங்குகின்றது. காலத்தின் தேவைக்கேற்ப வெவ்வேறு வடிவங்கொள்ளுவதும் இலக்கியத்தின் இயல்பே. இவ்வகையில் இருபதாம் நூற்றாண்டின் மிகச் சிறந்த ஊடகமான உரைநடையின் மூலம் இலக்கியம் வெவ்வேறு வடிவம் பெறுகின்றது. நாவல், சிறுகதை, நாடகம் போன்ற உரைநடைப் படைப்பிலக்கியங்கள் மலேசிய மண்ணில் தோன்றியுள்ளன.

**மலேசியாவில் நாவல் இலக்கியம்:**

சிறுகதையும், கவிதையும் மலையக மண்ணில் ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடியுள்ளமை வெள்ளிடைமலையே! ஆயின் இத்துறைகளின் வளர்ச்சியோடு நாவல்துறையின் வளர்ச்சியை ஒப்பிடுவது, பெரியோரின் வளர்ச்சியைச் சிறுகுழந்தையின் வளர்ச்சியோடு ஒப்பிடுவதற்கு ஒப்பாகும். நாவல்துறையின் வளர்ச்சி தத்தித் தவழும் குழந்தையின் நிலையையே நினைவூட்டுகிறது. வளர்ச்சி என்பது வெறும் எண்ணிக்கையை மட்டும் குறிக்காமல் இலக்கியத்தரத்தையும் உள்ளடக்கியுள்ளது. இவ்விரு அளவுகோல்களைக் கொண்டு அளவிட்டால் மலேசியாவில் புதினத்துறையின் மந்தநிலை தெற்றெனப் புலனாகும்.

புதினங்களின் கருப்பொருளை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வகைகளாகப் பகுக்கலாம்: சமூக நாவல்கள், வரலாற்று நாவல்கள், கருத்தமைவு நாவல்கள், வட்டார நாவல்கள், துப்பறியும் நாவல்கள் என நாவல்களில் பல்வகை உண்டு. மலேசியாவில் *1917*-இலிருந்தே

நாவல் இலக்கிய வகை தோன்றினும் இதன் எண்ணிக்கை மலேசிய விடுதலைக்குப் பின்னரே அதிகரித்தது. ஏறத்தாழ எழுபத்திரண்டு ஆண்டுக் கால இடைவெளியில் நூறு நாவல்கள் கூட வெளிவரவில்லை. வெளிவந்த புதினங்களுள்ளும் சமூகப் புதினங்களே மிகுதி. வரலாற்றுப் புதினங்களின் எண்ணிக்கை இரண்டு மட்டுமே.

மலேசியாவில் புதினத்துறை வளராமைக்குரிய காரணங்களைக் கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்தலாம்.

1. எழுத்தாளர்கள் எழுத்தை முழுநேரத் தொழிலாகக் கொள்வதில்லை. வயிற்றுப்பாட்டுக்கு வேறு தொழிலைக் கொண்டுள்ள இவர்கள் ஓய்வு நேரங்களிலேயே எழுதி வருகின்றனர்.

2. சிறுகதை, கவிதை ஆகிய துறைகளில் அடிக்கடி போட்டிகள் நடத்தப்படுகின்றன. பரிசுத்தொகையும் கணிசமான அளவில் (குறைந்த பட்சம் ஆயிரம் வெள்ளி) கொடுக்கப்படுகின்றது. ஆயின் நாவல்போட்டி அடிக்கடி நிகழ்வதில்லை. பரிசுத்தொகையும் குறைவே.

3. எவ்வித இலக்கியப் படைப்பாயினும் வாசகர்களின் ஆதரவைப் பொறுத்தே வளரமுடியும். இவ்வடிப்படையில் நாவல்களுக்கு ஆதரவு தரும் வாசகர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு.

4. மலேசிய நாட்டைப் பொறுத்தவரை இலக்கிய வளர்ச்சிக்கு உயிர்நாடியாய் விளங்குவன நாளிதழ்களே. இந்நாளிதழ்களும் தமிழக எழுத்தாளர்களின் படைப்பை விலை கொடுத்து வாங்கி வெளியிடுவதுண்டு. ஆயின் உள்நாட்டுப் படைப்புக்களுக்கு எவ்விதச் சன்மானமும் கொடுத்து ஊக்குவிப்பதில்லை.

5. திறனாய்வு முயற்சிகள் பெருகப் பெருக, இலக்கியமும் விரைவில் வளரும். ஆயின் மலேசிய நாட்டு எழுத்தாளர்களில் பெரும்பாலோர் தங்களின் படைப்பில் குறைகள் இருப்பதைத் திறனாய்வாளர்கள் சுட்டிக்காட்டின் ஏற்பதில்லை. "திறனாய்வாளருக்கு என்ன தெரியும்? நான் எழுதியதைத் தானே அவர் ஆய்வு செய்கிறார்? படைப்பாற்றல் என்னிடம் அல்லவா உண்டு?" என்ற ஆணவப்போக்கு தலைதூக்கி நிற்கிறது. திறனாய்வாளர் காய்தல், உவத்தலின்றிச் செய்யும் நடுநிலையான திறனாய்வைக்கூட, வேண்டுமென்றே குறை கூறுவதாய்க் கருதுகின்றனர்.

மேற்காட்டிய காரணங்கள் மலேசியாவில் நாவல்துறை வளராமைக்குரிய தடைகளுள் பொதுவானவை. இவை வரலாற்று நாவல்களுக்கும் பொருந்தும். எனினும் வரலாற்றுப் புதினங்கள் பெருகாமைக்குரிய சிறப்புக் காரணங்களையும் வரையறுத்துக் கூறவியலும். 'மலேசியத் தமிழ் நாவல்கள்' என்ற நூலில் முனைவர் ம.மதியழகன், மலேசியப் புதின ஆசிரியர்கள் தமிழகப் புதின ஆசிரியர்களின் திறமையோடு போட்டியிட இயலாமையைக் காரணமாகக் காட்டியுள்ளார். மேலும் வரலாற்றுப் புதினங்கள் எழுதுதற்குக் காலமும் பக்கமும் அதிகமாதலானும் மலேசியத் தமிழ் நாவலாசிரியர்கள் வரலாற்று நாவலை எழுத முன் வரவில்லை என்று கருத்துரைப்பர்.1 மலேசியத் தமிழ் நாவல்களுள் ஓரிரு நாவல்கள் தவிர எஞ்சிய அனைத்தும் குறுநாவல்களே. இதனை நோக்க முனைவர் ம.மதியழகனின் கருத்து ஏற்புடையதே.

வரலாற்றுப் புதினம் எழுத விழையும் நாவலாசிரியர்கள் கைக்கொள்ளவேண்டிய பின்னணிகள் குறித்துச் சில அறிவுரைகளையும் வழங்கியுள்ளார் ம.மதியழகன். அவர் மலேசிய எழுத்தாளர்களுக்குப் பரிந்துரைக்கும் பின்னணிகள் ஐந்து. அவை வருமாறு:

1. மலேசியாவோடு சங்ககாலத் தமிழர்கள் கொண்ட வாணிபத் தொடர்பு.
2. சோழர் காலத்தில் கடாரம் கொண்ட போர்த்-தொடர்பு.
3. ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் தமிழகத்தி-லிருந்து தமிழர்கள் கங்காணிகளால் மலேசியா-வுக்குக் கொண்டு வரப்பட்ட நிகழ்ச்சி.
4. சப்பானியர் காலத்தில் சயாமிற்கு மரண இரயில் பாதை போடப்பட்ட நிகழ்ச்சி.
5. முதல், இரண்டாம் உலகப்போர்கள் மலே-சியாவை அலைக்கழித்த செய்தி.2

மேற்காட்டப்பட்ட ஐந்தினுள் முதலிரண்டைத் தவிர எஞ்சியவை மலேசிய எழுத்தாளர்களால் ஏற்கெனவே கையாளப்பட்டிருப்பதனைக் கருத்தில்கொண்டு, கைலாச-பதியின் கூற்றுப்படி 3 அவற்றைச் சமகால வரலாற்று நாவல்கள் என்கிறுர் ம.மதியழகன்.4 முதலிரண்டைத் தவிர எஞ்சியவை மூன்றும் சமூகப்பிரச்னைகள். இப்பிரச்னைகள் சமகாலப்பிரச்னைகளாயிருப்பினும், உண்மைச் சம்பவங்-களாயிருப்பினும் இவற்றைச் சமூகநாவல்கள் என்ற வகைப்-பாட்டினுள் அடக்குவதே சாலப் பொருந்தும். சமூக நாவல்கள் சமகால நிகழ்வுகளை வெளிக்காட்டுவன என்பது உண்மையேயாயினும், சமூக நாவல்கள் கதை கூறும் போக்-கும் வரலாற்றுநாவல்கள் கதை கூறும் போக்கும் வேறுபடு-வன. தமிழகத்தில் வரலாற்று நாவல்களுக்கு வித்திட்ட கல்கியின் 'பொன்னியின் செல்வன்' என்ற புதினம் வர-லாற்றுப் புதினமாகும். ஆயின் அவருடைய மற்றொரு நாவலான அலையோசை சமூகப்புதினமாகும். அலை-யோசையில் கல்கி, தன் காலத்து முக்கியப் பிரச்னைகளுள் ஒன்ருன இந்திய சுதந்திரப் போராட்ட நிகழ்வை மைய-மாய்க் கொண்டு நாவலை உருவாக்கியுள்ளார். கல்கியின், மேற்கூறப்பட்ட இரு நாவல்களுக்கும் உள்ள அமைப்பு வேறுபாடே சமூக நாவலுக்கும் வரலாற்று நாவலுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெள்ளிதின் விளக்கும்.

முற்கூறப்பட்ட கருத்துக்களை அடியொற்றி மலேசியாவில் வரலாற்று நாவல்கள் எழாமைக்குரிய சிறப்புக் காரணங்களைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

1. மலேசியத் தமிழ் நாவலாசிரியர்களின் கண்ணோட்டம் மிகமிகக் குறுகியது. ஏறத்தாழத் தொண்ணூறு விழுக்காட்டிற்கும் மேலாக நாவலாசிரியர்கள் தோட்டப்புறம் என்ற குறுகிய எல்லைக்குள்ளேயே நின்று, அவண் எழும் சிக்கல்களையே நாவலுக்குக் கருப்பொருளாக்குகின்றனர். தோட்டப்புறம் என்ற களத்தைக் கடந்து, கடந்தகாலக் களங்களைப் பற்றிய சிந்தனை எழ மறுக்கின்றது.

2. உண்மையான சரித்திர நிகழ்வுகளைச் சான்றுடன் காட்டி எழுதும் துணிவு எழுத்தாளர்களிடையே இல்லை. மேலும் அப்படியே துணிந்து எழுத முன்வரினும் அரசு அதனை ஏற்குமா? அரசிற்குப் புறம்பாகச் சொல்கிறோமோ? என்று அஞ்சுகின்றனர். இதனால் வரலாற்று நாவல்ககள் பெருக வாய்ப்பில்லை.

3. 'வரலாற்று நாவல்கள் பிறப்பதற்கான சூழல்களை தோதாத்ரி என்பார் விளக்கும்போது அவை சமூகத்தின் மிகவும் நெருக்கடியான காலகட்டங்களில் மக்களின் உணர்வு கொந்தளித்து நிற்கும் நிலையில் தோன்றும்' என்பர். 5

4. மேற்கூறப்பட்ட நிலையைச் சாதாரணமாக எல்லா எழுத்தாளர்களாலும் காட்டவியலாது; நாவலெழுதும் திறம் கைவரப்பெற்றோருக்கே - சிறந்த நாவலாசிரியர்களுக்கே இயலும் என்று கா. சிவத்தம்பி கூறுகிறார்.

"அன்றாட வாழ்க்கையிலே தொழிற்படும் சமூக சக்திகளை இனங்கண்டறிந்து இலக்கியத்துட் புகுத்துவது எல்லா இலக்கியக்காரராலும் செய்யப்படக்கூடிய ஒன்றன்று."6

5. வரலாற்று நாவல் எழுத விரும்பும் நாவலாசிரியர்கள் நிறையப் படிக்க வேண்டும்; வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல இடங்களையும் நுட்பமாகப் பார்த்து வரவேண்டும்; வரலாற்றின்பால், வரலாற்று நாயகர்கள்பால் நாவலாசிரியனுக்கு ஈடுபாடு இருக்கவேண்டும். இவ்வளவு சிரமங்களையும் எதிர்நோக்கும் துணிவுடைய மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள் இன்மையாலும் வரலாற்று நாவல்கள் அதிகம் எழவில்லை.

6. எழுத்தாளர்கள் 'பொருள்முதல்வாதி'களாகி, வாசகர்களின் விருப்பத்திற்கு - 'பசிக்கு' இரை போடுகின்றனர். இதனால் வரலாற்று நாவல்கள் அதிகம் தோன்றவில்லை.

மேற்கூறிய காரணங்களினால் மலேசியாவில் வரலாற்று நாவல்கள் தோன்றாமைக்குரிய சூழ்நிலைகளைத் தெள்ளிதின் அறியலாம்.

**வரலாற்று நாவல்களின் செல்வாக்கு:**

வரலாற்று நாவல் என்றால் அரசன், அரசியைப் பற்றிய கதையைக் கொண்டிருக்க வேண்டும் என்றே பலர் மயங்குகின்றனர். உண்மையில், வரலாறு என்பது என்ன? என்பதனை அழகுற விளக்குவர் பேராசிரியர் நம்பியாரூரன்.

"ஒரு தனிமனிதனது செயல்களையோ அல்லது ஒரு குறிப்பிட்ட நாட்டு மக்களது செயல்களையோ முறைப்படி வெளியிடும் கலையே வரலாறாகும். மக்கள் எந்தச் சூழ்நிலையில்

வாழ்ந்தனர்; அச்சூழ்நிலைக்கேற்ப எந்தெந்த வகையில் செயல்பட்டனர் என்று கூறுகிறது. இச்செய்திகளையறிந்து பின்வரும் மக்கள் தங்களது வாழ்வின் குறிக்கோளை மனத்தில் கொண்டு இன்ன வகையில் செயல்பட்டால் இன்னது நிகழும் என்றறிந்து நடக்கின்றனர். இப்படி வரலாறு மனிதனுக்கும் நாட்டிற்கும் ஒரு வழிகாட்டியாகப் பல படிப்பினைகளைத் தன்னுட்கொண்டு விளங்குகிறது."7

இப்பண்புகளைக் கொண்டிலங்குவது வரலாற்று நாவல் என்று விளக்குவதும் பொருந்துவதே. வரலாற்று நாவல் என்று குறிப்பிடும்பொழுது அது வெறும் அரசியல் நிகழ்வை மட்டும் குறிக்காது, சமுதாயம், நாகரிகம், பண்பாடு ஆகியவற்றின் வரலாற்றையும் விளக்குவதாக அமையவேண்டும். நாவலாசிரியன் விருப்பு வெறுப்பற்ற நடுநிலையாளனுக, பரந்த மனப்பான்மை கொண்டவனுக, உண்மையை உணர்த்தும் உறுதிகொண்டவனுக இருப்பின் வரலாற்று நாவல்களைச் செம்மையாய்ப் படைக்க முடியும்.

வரலாற்று நாவல்களைச் 'சரித்திரநாவல்கள்' என்றும் சாற்றலாம். இச்சரித்திரநாவலை 'அற்புத நவீனகம்' என்றழைப்பர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. இவர் கருத்துக்கு விளக்கம் தருகையில் கி.வா. ஜகந்நாதன்,

"அசாதாரண நிகழ்ச்சிகளும் அற்புதங்களும் நிரம்பிய தொடர்நிலைக் கதைகளை ரோமான்ஸ் என்றும், சாமானிய மனிதப் பண்புகளையும் நிகழ்ச்சிகளையும் கொண்ட இவை உண்மையாக நடக்கத்தக்கவை என்று நினைக்கும் கதைகளை யதார்த்தமான நாவல்கள் என்றும் பிரித்துச் சொல்வார்கள். ரோமான்ஸை அற்புத நவீனகம் என்றும், நாவலை இயற்கை நவீனகம் என்றும் அமரர் வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகின்ருர். சரித்திர நாவலை அற்புத நவீனகம் என்று குறிப்பிடுகின்ருர்."8

என மொழிகுவர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை சரித்திர-நாவலை அற்புதநவீனகம் என்று பெயரிட்டழைப்பது முற்றிலும் பொருந்தாது. ஆனல் அவர் அவ்வாறு அழைப்பதிலிருந்து வரலாற்று நாவலுக்குரிய பண்பை அறிந்துகொள்ள முடிகின்றது. வரலாற்று நாவல் உண்மை வரலாற்றைக் காட்டுவதோடு நின்றுவிடாமல், ரோமான்ஸைப் போலக் கற்பனைக்கூறும் அதில் கலந்திருக்க வேண்டும் என்ற கருத்தைத் தெளிவுறுத்துகின்ருர். இவண் இ. எம். போர்ஸ்டர் என்ற ஆங்கிலத் திறனாய்வாளரின் கருத்தும் நினையத்தகும்.

> "நாவலாசிரியன் வரலாற்றில் காணுது ஆழ்ந்து கிடக்கும் வாழ்க்கையை எடுத்துச் சொல்ல வேண்டும். விக்டோரியா மகாராணியைப் பற்றி வரலாறு கூறுவதை நாமறிவோம். ஆனல் வரலாற்று நாவலாசிரியர் நாமறியாத புதிய விக்டோரியா மகாராணியைப் படைத்துக் காட்டவேண்டும்."*9*

இதனல் வரலாற்று நாவல் என்பது, வால்டர் ஸ்காட் கருதுவது போல அற்புதங்களையும் இயல்பையும் இணைப்பதாகும்.*10*

வரலாற்று நாவலில் கற்பனை கலந்திருக்க வேண்டும் என்பதற்காகக் கதை முழுமையும் கற்பனையாக அமையக்கூடாது. உணவில் உப்புக் கலப்பது போல வரலாற்று நாவலில் கற்பனையும் அளவோடு அமையவேண்டும். கற்பனைக்கதைக்கும் வரலாற்று நாவலுக்கும் இடையே உள்ள பெரும் வேறுபாட்டை இ.எம். போர்ஸ்டர் கீழ்க்கண்டாங்கு தெளிவுறுத்துவர்.

> "கற்பனைக் கதையில் பேர்களையும் தேதிகளையும் தவிர எல்லாம் உண்மையானவை; வரலாற்றில் பேர்களையும் தேதிகளையும் தவிர மற்றவற்றில் ஒன்றும் உண்மையானவையல்ல."*11*

இப்பகுதியினுல் வரலாற்று நாவல்களுக்கு உண்மை நிகழ்ச்சிகள் அடிப்படை என்பது தெளிவாகின்றது.

வரலாற்ருசிரியனுக்கும் வரலாற்று நாவலாசிரியனுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்து கொள்வதன் மூலமும் வரலாற்று நாவல்களின் பண்பை நாம் தெளிவுபடுத்திக் கொள்ள இயலும். வரலாற்ருசிரியன் உள்ளதைப் பதிவு செய்கிருன். வரலாற்று நாவலாசிரியனே புதிதாகவும் படைக்கிருன்.

வரலாற்று நாவல்களைச் செயலைத் தலைமையாகக் கொண்ட புதினங்களாக - நிகழ்ச்சிப் புதினங்களாக (*Novel of actions*) மூயிர் என்பவர் கருதுகிருர்.

> "வரலாற்று நாவல்கள் ஒரு வகையில் செயலைத் தலைமையாகக் கொண்ட நாவல்களே. ஆகவே பல நிகழ்ச்சிகள் காரணகாரியத் தொடர்புடையனவாக நடந்து, இடையே சிக்கல்களை உண்டாக்கி நம்முடைய ஆவலைத் தூண்டுகின்றன. போர்களை வருணிப்பதற்கும், வீரர்களின் வீரத்தைக் கோலஞ் செய்வதற்கும், அரச வாழ்க்கையைச் சித்திரிப்பதற்கும், அந்தப்புர வாழ்வை விவரிப்பதற்கும் வரலாற்று நாவல்கள் இடங்கொடுக்கின்றன. மற்ற நாவல்களுக்கு அந்த வாய்ப்பு இல்லை."12

வரலாற்று நாவல், சமூக நாவல் என்ற இரண்டும் சமூகத்தைப் பற்றியே பேசினுலும் இருவித நாவல்கள் காட்டும் சமூகத்திற்கும் வேறுபாடு உண்டு. வரலாற்று நாவல் கடந்தகால வரலாற்றை மையமாய்க் கொண்டது. ஸ்காட் கருதுவது போலச் சரித்திரநாவல் குறிப்பிட்ட கால மக்களின் வாழ்க்கை முறைகளையும், பழக்கவழக்கங்களையும் விளக்கிக் காட்டும் கருவியாக இருக்கவேண்டும். ஆயின் சமூகநாவல் என்பது சமூகப்பிரச்னைகளை - எழுத்தாளன் காலத்திலெழுந்த சமூகச் சிக்கல்களைக் கொண்டு எழுதப்-

படுவதாகும். சுருங்கக்கூறின் வரலாற்று நாவல் கடந்தகாலச் சமுதாயத்தைப் பிரதிபலிப்பது. சமூக நாவல் நடப்பியல் முறையில் நிகழ்காலச் சமூகத்தைப் பிரதிபலிப்பது. கல்கி தமிழக வரலாற்றை எவ்விதம் அணுகினுர் என்பதைச் சிவகாமியின் சபதம் என்னும் நாவலின் முன்னுரை புலப்படுத்தும்.

> "அப்படியென்ருல் அந்தக் காலத்தில் தமிழகத்தின் பண்பாடும் சமூக வாழ்க்கையும் எவ்வளவு மேம்பட்டிருக்க வேண்டும்! அத்தகைய மேம்பாட்டை ஒரு சமூகம் அடைய வேண்டுமாஞல் அதற்கு எத்தனே நூற்ருண்டுகளுக்கு முன்ஞலிருந்து அச்சமூகத்தில் கலேயும் கல்வியும் நல்லரசாட்சியும் நல்லொழுக்கமும் வளர்ந்திருக்க வேண்டும். இதையெல்லாம் நினேக்க நினேக்கப் பண்டைத் தமிழ்நாட்டில் வாழ்ந்த நம் மூதாதையர்களிடம் பக்தியும் மரியாதையும் பொங்கி வளர்ந்தன. தமிழகத்தின் பழம்பெருமையைப் பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் உண்மையென்பது மட்டுமல்ல; இதுவரை உண்மையைக் குறைத்துச் சொல்லியே வந்திருக்கிருர்கள்."13

கல்கியின் இக்கூற்று தமிழக வரலாற்றின்பால் அவருக்கிருந்த ஈடுபாட்டைக் காட்டுவதோடு, இத்தகு ஆழ்ந்த ஈடுபாடு ஒவ்வொரு வரலாற்று நாவலாசிரியனுக்கும் இருக்க வேண்டியதன் இன்றியமையாமையையும் உணர்த்துகிறது.

வரலாற்று நாவல்களில் காலப் பின்னணி இன்றியமையாதது. காலவமு வரலாற்று நாவல்களில் இடம்பெறக் கூடாது. தாமஸ் ஹார்டி என்பார், "அசாதாரணம் என்பது நிகழ்ச்சிகளிலே இருக்க வேண்டுமேயன்றிப் பாத்திரங்களில் இருக்கக்கூடாது"14 என்பர். தமிழ் வரலாற்று நாவல்களில் கற்பனேப் பாத்திரங்களும் உண்டு. எடுத்துக்காட்டாக ஆயனர், சிவகாமி ஆகியோரைக் குறிப்பிடலாம்.

**வரலாற்று நாவல்களின் செல்வாக்கு:**

வரலாற்று நிகழ்ச்சிகள் என்புச் சட்டகம் போல அமைந்துள்ளதனுல் அதன்மேல் வரலாற்று நாவலாசிரியன் கதையின் கட்டுக்கோப்பை எழுப்பி வரலாற்று நாவலே உருவாக்குகிருன். மேலும் ஒரு நாட்டின் வரலாற்றைப் புதினமாக்குவதன் மூலம் நாட்டு வரலாற்றின்பால் ஈடுபாட்டையும், மக்களுக்கு அரசியல், பண்பாடு, மொழியுணர்வு ஆகியவற்றின்மீது பற்றுதலேயும் உருவாக்க இயலும். ஆகவே தான் வரலாற்று நாவல்களுக்குத் தனிச் செல்வாக்கு உண்டு.

**மலேசியாவில் வரலாற்று நாவல்கள்:**

மலேயக மண்ணில் இற்றைநாள் வரை மலர்ந்துள்ளவை இரு வரலாற்று நாவல்கள் மட்டுமே! இவ்விரண்டும் குறுநாவல்களே. மலேசியத் தமிழ் வரலாற்று நாவல்களுள் முதலாவதாக வெளிவந்த சிறப்புடையது 'ஆடும் மஞ்சள் ஊஞ்சல்' என்னும் நாவல். இந்நாவலே எழுதியவர் ப.சந்திரகாந்தம் என்பவராவார். இந்நாவல் கோலாலும்பூர் கலே இலக்கியப் பண்ணேயின் வெளியீடாகும். 1985இல் இந்நாவல் வெளிவந்தது.

மற்ருெரு வரலாற்று நாவல் திருமதி. சு. கமலா எழுதிய 'தீமலர்' என்பதாகும். இந்நாவல் சமூகக்கலேமாமணி சா.ஆ. அன்பானந்தன் இலக்கியப்பரிசு வாரியம் நடத்திய குறுநாவல் போட்டியில் முதற்பரிசு பெற்றதாகும். 1987இல் வெளியிடப்பட்டது.

மலேசியாவின் வரலாற்றுக் கருவூலம் என்று சிறப்பித்துக் கூறத்தக்க வகையில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது மலாக்கா மாநிலமாகும். வரலாற்று நிகழ்ச்சிகளேயும், வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களேயும் தன்னகத்தே கொண்டிலங்குவது மலாக்கா. இத்தகு சீர்மிக்க மலாக்கா வரலாற்றைப் பின்னணியாய்க் கொண்டு எழுந்தவை மேற்கூறப்பட்ட இரு நாவல்கள். மலாக்காவின்

வரலாறு மலேசியாவின் வரலாறுகும். 'செஜாரா மலாயு' என்ற மலேசிய வரலாற்று நூலைத் தமிழில் ராம. சுப்பையா மொழிபெயர்த்து 'மலாக்கா மன்னர்கள் வரலாறு' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்.

## ஆடும் மஞ்சள் ஊஞ்சல் - திறனாய்வு:

*கரு:*

மலாக்காவின் முதல் மன்னனான பரமேஸ்வரா காலத்தில் தோன்றிய மலாக்கா அரசு அகமட்ஷா ஈறாக ஒன்பது சுல்தான்களைப் பெற்றிருந்தது. பரமேஸ்வராவின் பரம்பரையில் வந்த மன்னன் - எட்டாவது மன்னன் மஹ்மூட்ஷா. இவனே மலாக்காப் பேரரசின் வீழ்ச்சிக்கு வழிகோலியவன். இவனைப் பற்றிய நிகழ்ச்சிகளே கதைக்குக் கருவாக அமைந்துள்ளன. ஒன்பது சுல்தான்களைப் பற்றிய செய்திகளும் இந்நாவலில் இடம்பெறுகின்றன.

*பாத்திரங்கள்:*

ஆடும் மஞ்சள் ஊஞ்சலின் தலைவன் மஹ்மூட்ஷா. ஒன்பது சுல்தான்கள், மலாக்காவின் மாண்புமிகு அமைச்சர் துன்பேரா மற்றும் மலாக்காவின் தளபதியும் பெருவீரனுமாகிய ஹங்துவா, மஹ்மூட்ஷாவின் மையலுக்குக் காரணமாகிய பேரழகி துன் பாத்திமா ஆகியோர் இந்நாவலில் இன்றியமையாப் பாத்திரங்கள் ஆவர்; உண்மையான வரலாற்று மாந்தருமாவர். மலாக்காவின் பொற்காலத்தை உருவாக்கிய - இருபத்தோராண்டுகள் மிகச் சிறப்பாக ஆட்சி செய்த மன்சூர்ஷா மற்றும் நான்கு சுல்தான்களிடம் நாற்பத்திரண்டு ஆண்டுகள் முதலமைச்சராகப் பணியாற்றிய துன்பேரா; மலாக்காப் பேரரசின் தளபதி ஹங்துவா ஆகியோர் இந்நாவலில் சிறப்பாகப் போற்றப்படுகின்றனர்.

நாவலின் பெயர்ப்பொருத்தம்:

உலகவரலாற்றினைச் சிறப்புறச் செப்பும் ஏடுகளினுல், பல நாட்டு மன்னர்களின் அழிவுக்கு மண்ணுசை, பொன்னுசை, பெண்ணுசை என்ற மூன்றுமே காரணமானதை அறியலாம். இவ்வகையில் மலாக்காவின் அழிவுக்கு மஹ்மூட்ஷா கொண்ட பெண்ணுசையயே காரணம் என்பதைத் தலைப்பு நமக்குக் குறிப்பாக உணர்த்துகிறது. மலேசியாவின் அரசவண்ணம் மஞ்சள் நிறம். மலாக்காவின் அரசவண்ணமும் இந்நிறமேயாம். அரியணை மீதமர்ந்து ஆட்சிசெய்யும் மன்னன், மஞ்சள் ஊஞ்சலில் அழகு நங்கையருடன் ஆடியதன் விளைவு பேரரசே அழிந்தது. ஒவ்வோர் அழகிய பெண்ணுடனும் மஞ்சள் ஊஞ்சலில் ஆடிய மன்னன் மஹ்மூட்ஷா, துன் பாத்திமா என்ற பேரழகியுடன் - பிறன்மனைவியுடன் (துன் அலியின் மனைவி) ஆடினுன். இதனுல் மலாக்காப் பேரரசு ஆட்டங்கண்டது. உலகியல் வழக்கில் சாவுடன் போராடிக் கொண்டிருப்பவர் ஒருவரின் உயிரை 'உயிர் ஊசலாடுகிறது' என்று சொல்வதுண்டு. அதுபோல அழிவுப்பாதையை நோக்கி மலாக்காவை இட்டுச்சென்ற மஹ்மூட்ஷாவின் செயலை 'ஆடும் மஞ்சள் ஊஞ்சல்' என்ற தலைப்பு உருவக நயத்துடன் விளக்குகிறது. நாவலாசிரியரின் திறமைக்கு இத்தலைப்பே நல்ல சான்ருகும். நாவலின் மையக்கருவை - பெண்ணுசையில் சிக்கித் தானும் அழிந்ததோடன்றிப் பேரரசையும் அழிக்கக் காரணமாகிய மஹ்மூட்ஷாவின் செயலை நன்முறையில் இத்தலைப்பு விளக்குவது மிகப்பொருத்தமானதே.

நாவலின் குறை:

மலேசியத் தமிழ் எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்கவர் ப.சந்திரகாந்தம். இவர் மலேசிய வரலாறு முழுமையும் சொல்லிவிடவேண்டும் என்ற துடிப்பில் ஒன்பது சுல்தான்களைப் பற்றிய வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறியுள்ளார். நிகழ்ச்சிகள் ஏராளமாக இடம்பெற்றுள்ளமையால் வெறும் சம்பவக்கோர்வையாகவே இந்நாவல் அமைகிறது. அமரர்

தண்டாயுதம் கூறியபடி 'வரலாறு இருக்கின்றதே தவிர நாவல் இல்லை'15 என்ற கருத்து இந்நாவலுக்கும் பொருந்துவதே. கற்பனை நிகழ்ச்சிகளைக் கலந்திருப்பதாக நாவலாசிரியர் முன்னுரையில் கூறியிருப்பினும் உண்மை நிகழ்ச்சிகளின் எண்ணிக்கை அதிகமானதால் கற்பனை நிகழ்ச்சிகள் அவற்றுள் உருத்தெரியாமல் அடங்கிவிடுகின்றன. சுருங்கக் கூறின் ஆடும் மஞ்சள் ஊஞ்சல் என்ற நாவலைப் படிக்கும் உணர்வின்றி, 'செஜாரா மலாயு' என்ற வரலாற்று நூலைப் படிப்பதான உணர்வே தோன்றுகிறது. விளக்கமாகச் சொல்லப்புகுந்தால் நாவல் என்ற கலைவடிவத்தை - இலக்கிய வடிவத்தை இப்புதினத்தில் காண இயலவில்லை. இதற்குக் காரணம் கற்பனை குறைந்து காணப்படுவதேயாம். இந்நாவலுக்கு முன்னுரை வழங்கிய புலவர் மு. சேதுராமனும் இக்கருத்தினரே.

> "வரலாறும் கற்பனையும் பாலும் சீனியும் போன்று அமைய வேண்டும். சீனி குறைந்தால் சுவை குறையும். அதிகமானாலும் பாலின் சுவையைக் கெடுத்துவிடும். இந்நூலில் சீனி கொஞ்சம் குறைவாகவே அமைந்து பாலைப் பாதுகாக்கிறது."16

ஆயினும் வரலாற்று நாவல் துறையில் கன்னிமுயற்சியான படைப்பு இந்நாவல் என்ற கருத்தை உளங்கொண்டால் நாவலின் குறை பெரிதாகத் தெரிவதில்லை. ஓர் ஊருக்குச் செல்லும் பாதையை முதன்முதலாக அமைப்பது அரிதான செயலாகும். ஆனால் அப்படி அமைக்கப்பட்ட பாதையில் குறை காண்பதும், குறைகளை நீக்கிச் செப்பனிட நினைப்பதும் எளிதானவை. எனவே வரலாற்று நாவல் என்ற துறையில் புதியபாதை கண்ட பெருமை ப.சந்திரகாந்தத்தையே சாரும். இப்பெருமையைக் கருத்தில்கொண்டு இவர் நாவலைப் படித்தால் மேற்காட்டப்பட்ட குறை மங்கிவிடும்.

## தீ மலர் - திறனுய்வு:

கரு:

ப.சந்திரகாந்தத்தைப் போல அனைத்து வரலாற் நிகழ்ச்சிகளையும் கதைக்குக் கருவாகக் கொள்ளாது, துஎ பாத்திமா; மஹ்மூட்ஷா ஆகிய இருவருடன் தொட புடைய நிகழ்ச்சிகளையே கதைக்குக் கருவாகக் கொண்டு ளார் நாவலாசிரியர். குளத்தில் ஒரு கல்லை எறிந்தால் வட் அலைகள் சிறிதாகத் தோன்றிப் பின்னர் விரிவடைவ போலக் குறிப்பிட்ட சில நிகழ்ச்சிகளைப் படைத்து அவ றின் மூலம் கதையை விரிவாக்கியுள்ளார் கமலா. இ ருடைய கதைத்திறனுக்கு - கதையமைப்பின் வெற்றிக் கற்பனையும் ஒரு காரணமாகும்.

நாவலமைப்பு:

நாவலில் கரு, சிக்கல், வளர்ச்சி, உச்சநிலை, வீழ் அல்லது முடிவு என்ற ஐந்து கூறுகளும் அமைய வேண்டு இவ்வைந்தும் தீமலர் நாவலில் செவ்வையாய் அமைந்து துன் முத்தாகீரின் மகள் துன் பாத்திமா. துன் பாத்தி துன் அலியை மணக்கிருள். துன் பாத்திமாவின் குடும்பமு துன் அலியின் குடும்பமும் உறவாக அமைந்திருப்பினு பகைமை பாராட்டின. இப்பகைமையும் மேற்கூறிய தி மணத்தால் விலகியது. துன் பாத்திமாவைத் துன் அ திருமணம் புரிந்ததை மன்னன் மஹ்மூட்ஷா வெறுக்கிரு துன் பாத்திமாவைத் தான் அடைய எண்ணுகிருன். இவ்வ நிகழ்ச்சிகளும் நாவலின் சிக்கல்களாம். இவை நாவ நேரடியாகவும் மறைமுகமாகவும் கூறப்பட்டுள்ளன.

> "அழகுக்கு அடிமையாகி ஆட்டங்கண்ட சாம்ராஜ்யங்களின் வரிசையில் தன் ஆட்சியும் சேரப்போகின்றது எனத் தெரிந்திருந்தால் ஆரம்பத்திலேயே தன் முறைகெட்ட ஆசையைக் கிள்ளி எறிந்திருப்பாரோ என்னவோ"17

"பாத்திமா! நீ சொன்னதைப் போல் நான் ஒன்றைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேன்."18

"திருமண விழாவுக்கு வந்த மன்னர் முகத்தில் வழக்கத்துக்கு மாருகக் கடுமை தெரிந்தது. அது மட்டுமல்ல; அவர் உன்னைப் பார்த்த பார்வை கூடச் சரியில்லை. பிறகு சாப்பிடாமல் கூடப் போய்விட்டாராம்."19

"ஒரு வேளை உன்னை எனக்கு மணம் செய்து கொடுத்தது அவருக்குப் பிடிக்கவில்லையோ"20

என வரும் பகுதிகள் நாவலின் சிக்கலை அழுத்தமாகத் தெளிவுறுத்துகின்றன. சிக்கல் வளர்கிறது. நாவலிடையே துன் பாத்திமாவின் சகோதரன் துன் ஹசானின் குற்றங்கள் காட்டப்படுகின்றன. நியாயம் கேட்டுவந்த வணிகர்கள் ஆற்ருமையுடன் செல்கின்றனர். இந்நிகழ்ச்சிகள் சிக்கலை வளர்த்துப் போராட்டத்திற்கு இட்டுச் செல்கின்றன. துன் முத்தாகிர் மீது குற்றம் சுமத்தப்பட்டதால் மன்னர் தூக்குத்தண்டனை வழங்குகிருர். பிறகு துன் பாத்திமாவைத் திருமணம் புரிகிருர். இது நாவலின் உச்சநிலை. போர்த்துகீசியர் மலாக்கா மீது படையெடுக்க மஹ்மூட்ஷா அரியணை துறந்து, தன் மகனை அரசனுக்கித் துன் பாத்திமாவிடம் அவனை ஒப்படைத்துவிட்டுச் செல்கிருர்; தன் தவற்றை உணர்கிருர். தீ மலர் என்ற நாவலில் நாவலுக்கு இன்றியமையாக் கூறுகள் ஐந்தும் சிறப்புற அமைந்துள்ளன. நாவலாசிரியர், ஆர்வமூட்டும்பகுதிகள் (*Suspence*) பலவற்றைக் கையாண்டு நாவலின் விறுவிறுப்புத்தன்மை கெடாமல் அமைத்துள்ளார். ஒவ்வோர் அத்தியாயத்திற்கும் தலைப்புக்கள் கொடுத்துள்ளார் ஆசிரியர். இத்தலைப்புக்கள் கதையமைப்பை விளக்குமுறச் செய்கின்றன.

*நாவலின் பெயர்ப்பொருத்தம்:*

*நாவலின் தலைப்பினை விளக்கும் வகையில் நாவலாசிரியர் உரையாடல்களை அமைத்துள்ளார்; ஆசிரியரே விளக்கமும் தருகிறார்.*

*"என் பாத்திமா பனிமலர் என்றால் அமைச்சர் மகள் பாத்திமா ஒரு தீமலர்"21*

*துன் அலி தன் மனைவியைப் பாராட்டிப் பேசும்பொழுது தீமலராகத் துன் பாத்திமா மாறவிருப்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார் நாவலாசிரியர். மற்றோரிடத்தில் நாவலாசிரியர் தலைப்பை விளக்குவதைக் காணலாம்.*

*"இதுவரை தனக்குள்ளாகவே மௌனமாக எரிந்து கனன்று கொண்டிருந்த அந்த மலர் முதன்முதலாகப் பிறரைச் சுட்டது."22*

*நாவலாசிரியர் நாவலின் முன்னுரையில் தீமலர் உருவான விதத்தைத் தெளிவுபடுத்துகிறார். இதனாலும் நாவலின் தலைப்புப் பொருத்தத்தை அறிகிறோம்.*

*". . . . . மலாக்காவை ஆட்சிபுரிந்த மன்னர் மஹ்மூட்ஷாவை மையமாகக் கொண்டு இக்கதை பின்னப்பட்டது என்றாலும் இதற்கு ஆதாரமாகத் திகழ்பவள் - தூணாக நிற்பவள் என்னவோ துன் பாத்திமா தான்! அந்தத் தேன்மலர் தீமலராக்கப்பட்ட கதைதான் இது"23*

**நாவலின் சிறப்பு:**

மலேசியாவில் வெளிவந்துள்ள இரு வரலாற்று நாவல்களுள் 'தீமலர்' என்ற இப்புதினம் சிறப்பு வாய்ந்தது. இதற்கான சில காரணங்களை முந்திய நாவலோடு ஒப்பிடு-கையில் பெறமுடியும். அவை வருமாறு:

1. நாவலில் வரலாற்றுச் சம்பவம் மாறுமல் கற்பனை விரவியுள்ளதால் நாவல் வாசகர்-களின் உள்ளத்தைக் கவர்கிறது.
2. வரலாற்று நாவலின் பண்புகட்கு இயைய வெறும் அரசியல் வரலாருக மட்டும் அமையாமல் பண்பாடு, சமுதாயம் போன்ற பிற செய்திகளும் இடம்பெற்றுள்ளன.
3. நெஞ்சில் நிலைக்கும் பாத்திரப்படைப்புக்-களைக் கொண்டிலங்குகிறது.
4. ஆசிரியரின் வருணனைத்திறத்துக்கும், தெளிந்த நீரோடை போன்று கதை சொல்-லும் ஆற்றலுக்கும் இந்நாவல் சிறந்த சான்-ருகிறது.

**நாவல் உணர்த்தும் செய்திகள்:**

நாட்டு வரலாறு கதைக்குக் கருவாக அமைய, அர-சியல் செய்திகள் மட்டுமன்றிச் சமுதாயம், பண்பாடு பற்றிய செய்திகளையும் இந்நாவலில் 'ஊடும்பாவுமாகக்' காண்-கிறேம். அரசியல் துறையில் என்றுமே ஊழல் உண்டு என்பதனை இந்நாவல் சுட்டத் தவறவில்லை. ராஜலிங்க முதலியார் என்ற இந்திய வணிகர் துன் ஹசானிடம் கூறும் சொற்கள் அரசியல் ஊழல்களை அம்பலப்படுத்துகின்றன.

> 'தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. தாங்-கள் மனம் வைத்தால் . . . . . மன்னரிடம் கூறி' வாக்கியத்தை முடிக்காமல் தலையைச் சொறிந்-தார்"24

என்ற பகுதி அரசியலில் சீர்கேடுகள் நிலவியதைக் காட்டும். அவையில் குற்றங்கள் விசாரிக்கப்பட்ட முறையையும் (ப.50) ஆசிரியர் சுட்டுவர்.

மலாய்ப்பண்பாட்டிற்கும் இந்தியப்பண்பாட்டிற்கு-மிடையே பெரும்பாலான ஒற்றுமைக்கூறுகள் உள்ளன என்பது பலரும் ஏற்கும் பரவலான உண்மை. ஆகவே ஆசிரியர் தமிழ்ப்பண்பாட்டுக் கூறுகளை மலாய்ப் பண்-பாட்டுக் கூறுகளாகவே காட்டியுள்ளார். பருவமுற்ற இளம்-பெண்ணும் இளைஞனும் சந்தித்துக்கொள்ள மலாய்ச் சமூகம் இடந்தருவதில்லை போன்ற செய்திகளைக் காட்டியுள்ளார். பணியாட்கள் பலர் இருப்பினும் குடும்ப உறுப்பினர்-களுக்குத் தானே உணவு பரிமாறவேண்டுமென நினைப்பவள் துன் பாத்திமா என ஆசிரியர் காட்டியுள்ளமை தமிழ் மரபின் தாக்கமாக உள்ளது.

*பாத்திரப்படைப்பு:*

துன் பாத்திமாவின் பாத்திரப்படைப்பு மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளது. அநீதி கண்டு அடர்த்தெழும் அஞ்சாமையை அவளிடம் காண்கிறோம். வரலாற்று மாந்தர்களையும் சில கற்பனை மாந்தர்களையும் படைத்து நாவலின் சுவை குன்றாமல் செய்துள்ளார் ஆசிரியர்.

*முடிவுரை:*

பிரான்சிஸ் ஸ்டாட்டர்டு என்ற மேனாட்டறிஞர் கூறிய கருத்தினை வரலாற்று நாவலாசிரியர்கள் மனங்கொள்ள வேண்டும்.

> "வரலாற்று நாவலை எழுதுவதற்கு இரண்டு கூறுகள் தேவை. வரலாற்று உண்மைகளிலும் வரலாற்று உணர்வுகளிலும் ஈடுபாடும், அவற்றைப் பற்றிய கோட்பாடும் ஒருவர்க்குத் தேவை. மேலும் தனிப்பட்டவரது வாழ்வில் முக்கியத்துவம் பற்றிய ஆர்வமும் அறிவும் தேவை"25

என்ற கருத்து மலேசியாவில் வரலாற்று நாவல்கள் பெருகு-வதற்கு உறுதுணையாக அமையும்.

## மேற்கோள் விளக்கம்

1. ம. மதியழகன், மலேசியத் தமிழ் நாவல்கள், ப-47.
2. மேலது, பக். 47-48.
3. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம், பக். 254-256.
4. ம. மதியழகன், மலேசியத் தமிழ் நாவல்கள், ப-46.
5. எஸ். தோதாத்ரி, தமிழ் நாவல் - சில அடிப்படைகள், ப-99.
6. கா. சிவத்தம்பி, இலக்கியமும் கருத்து நிலையும், ப-18.
7. நம்பியாரூரன், பெரியபுராணச் சொற்பொழிவுகள், பக். 46-47.
8. அகிலன் (ப.ஆ), வளரும் தமிழ் இலக்கியம், "வரலாற்று நாவல்களின் நோக்கமும் பயனும்" கி.வா. ஜகந்நாதனின் கட்டுரை.
9. E.M. Forster, *Aspects of the novel*, P-53.
   *"And it is the function of the novelist to reveal the hidden life at its source: to tell us more about Queen Victoria than could be known, and thus to produce a character who is not the Queen Victoria of history"*
10. அகிலன் (ப.ஆ), வளரும் தமிழ் இலக்கியம், கி.வா.ஜ. கட்டுரை. நூலாசிரியரின் விரிவுரைக்குறிப்பு.
11. E.M. Forster, *Aspects of the novel*, P-53.
    *"In fiction everything is true; except names and dates; In history nothing is true except names and dates"*
12. அகிலன் (ப.ஆ), வளரும் தமிழ் இலக்கியம், ப-19.
13. கல்கி, சிவகாமியின் சபதம், முன்னுரை.
14. அகிலன் (ப.ஆ), வளரும் தமிழ் இலக்கியம், கி.வா.ஜ. கட்டுரை
15. இரா. தண்டாயுதம், நாவல் வளம், ப-76.
16. புலவர் மு. சேதுராமன், ஆடும் மஞ்சள் ஊஞ்சல், அணிந்துரை.
17. சு. கமலா, தீமலர், ப-14.

*18. மேலது, ப-34.*
*19. மேலது, ப-34.*
*20. மேலது, ப-35.*
*21. மேலது, ப-20.*
*22. மேலது, ப-100.*
*23. மேலது, முன்னுரை.*
*24. மேலது, ப-48.*
*25. Francis Hovey Stoddard, The evolution of English Novel, P-87.*

# திறனாய்வு முயற்சிகள்

இருபதாம் நூற்றாண்டில் உலகமொழிகள் அனைத்திலும் உரைநடையே மிகுதியான செல்வாக்குப் பெற்றுள்ளது. படைப்பிலக்கியத் துறையின் பயனுடை ஊடகமாக உரைநடை திகழ்கிறது. நாவல், நாடகம், சிறுகதை போன்று கட்டுரையும் படைப்பிலக்கியத்தின் ஒரு வகையே. இக்கட்டுரை இலக்கியக்கட்டுரை பயணக்கட்டுரை, நகைச்சுவைக் கட்டுரை, ஆய்வுக்கட்டுரை, கல்வெட்டு ஆராய்ச்சிக் கட்டுரை எனப் பல்திறத்தன. இவ்வகைகள் அனைத்தும் கட்டுரையின் மையப்பொருளை அடியொற்றி எழுந்தனவேயாம்.

**ஆய்வு - சொல்விளக்கம்:**

ஆய்வு என்னும் சொல் ஆராய்ச்சியைக் குறிப்பது. ஏதேனும் ஒன்றை மிக்க கவனத்தோடும் விடாமுயற்சியோடும் நுட்பமாய்த் தேடுவது ஆய்வு அல்லது ஆராய்ச்சி எனப்படும். இச்சொல் *Research* என்னும் ஆங்கிலச்சொல்லின் பொருளைக் குறிப்பதாகும். ஆராய்ச்சி எது? என்பதனைத் தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான இளம்பூரணர்,

> "ஒரு பொருளைக் குறித்து அதன் இயல்பு எத்தன்மைத்து என ஆராய்தல் எனினும், தெரிதல் எனினும், தேர்தல் எனினும், நாடல் எனினும் ஒக்கும்"*1*

என விளக்குவர். அறிவின் அடிப்படையில் சான்றுகள் மூலமாக உண்மையைக் காண மேற்கொள்ளப்படும் முயற்சியை ஆய்வு எனலாம்.

ஆராய்ச்சி அல்லது ஆய்வு என்னும் அருங்கலை மேனாட்டார் தொடர்பால் வந்தது; தமிழில் ஆராய்ச்சியே இல்லை என்று அறியாமையால் மொழிவாரும் உளர். இன்று நம்மிடையே உள்ளது போலத் தனியே 'திறனாய்வுநூல்'

அன்று இல்லையே தவிரத் திறனாய்வுக்கோட்பாடுகளும், திறனாய்வுசெய்யும் முறைகளும் தமிழரிடையே பழங்காலந்தொட்டே இருந்தன. ஆராய்ச்சி, ஆய்வு ஆகிய சொற்கள் பழந்தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. இவற்றை ஆராய்ச்சி நெறிமுறைகள் என்னும் நூலில் விளக்கமுறக் காணலாம்.2 தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களுக்கும் சிலப்பதிகாரம் போன்ற பழந்தமிழ் இலக்கியங்களுக்கும் உரைகண்ட உரையாசிரியர்களின் பணி திறனாய்வு அடிப்படையினதே. ஆகவே தமிழுக்குத் திறனாய்வுக்கலை புதிதன்று.

**திறனாய்வு - விளக்கம்:**

ஆய்வு, திறனாய்வு ஆகிய இவ்விரண்டும் ஒரு பொருளனவே. இத்திறனாய்வுக்கலை பற்றி மேனாட்டறிஞரான ஜான்சன்,

> "திறனாய்வு என்பவள் முயற்சி, உண்மை என்ற இருவருக்கும் தோன்றிய முதல்மகள். பிறந்தவுடன் இப்பெண் நடுவு நிலைமை என்னும் தாதியால் மெய்யறிவு என்னும் அரண்மனையில் வளர்க்கப் பெறுகிறாள்."3

எனக் குறிப்பிடுவர். அறிஞர் ஜான்சனின் கருத்துப்படி மேற்கொள்ளப்படுவதே தகுதிமிக்க திறனாய்வாகும். இத்திறனாய்வைக் காய்தல், உவத்தல் அகற்றித் (நடுவுநிலைமையோடு) துலாக்கோல் போல் சமன்செய்து சீர்தூக்கி மேற்கொள்ளவேண்டும். விருப்போடு ஆராயப்புகுந்தால் நூலின்கண் உள்ள குற்றங்கள் புலப்படா. வெறுப்போடு ஆராயப்புகுந்தாலோ நூலின்கண் உள்ள குணங்கள் புலப்படா. ஆகவேதான் நடுவுநிலைமை திறனாய்வுப்பணிக்கு மிகவும் இன்றியமையாததாகிறது. இக்கருத்தினையே சீவகசிந்தாமணி,

> "வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
> தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்"4

என இயம்பும்.

**திறனாய்வின் நோக்கமும் பயன்பாடும்:**

"உள்ளுவதெல்லாம் உயர்வுள்க"5

என வள்ளுவன் வகுத்த நெறி திறனாய்வுக்கும் பொருந்துவதே! வேலை வாய்ப்புக்களைப் பெறுவதற்காக மட்டும் ஆய்வுசெய்வது உயர்ந்த ஆய்வாகாது. இலக்கிய உலகுக்குத் தெரிவிக்கவேண்டிய உண்மைகளை வெளிப்படுத்தும் ஒரு கருவியாக - உண்மையான இலக்கிய ஆர்வத்தின் வெளிப்பாடாகத் திறனாய்வு திகழ்தல் வேண்டும். திறனாய்வாளனின் இலக்கிய ஆர்வத்தை அளக்கும் அளவுகோலாக மட்டுமின்றி மற்றோருடைய இலக்கிய ஆர்வத்தைத் தூண்டும் தூண்டுகோலாகவும் இலங்குகிறது.

திறனாய்வு ஒரு நல்ல நூலை - தரமான இலக்கியப் படைப்பை இனங்காட்டுகிறது. பல புதிய ஆய்வுப்புலங்களையும் அவற்றில் மேற்கொள்ளப்பட வேண்டிய ஆய்வு முயற்சிகளையும் நமக்கு அறிவிக்கின்றது. இத்திறனாய்வுப் பணியின் பயன்பாட்டை முனைவர் தமிழண்ணல்,

> "ஆய்வு என்பது தொடரோட்டம் (Relay race) போன்றது; ஒலிம்பிக் விளக்கை எடுத்துச்செல்வது போன்றது. முன்னவர் விட்ட பகுதியிலிருந்து தொடங்கவேண்டும். முன்னவர் ஓடிய பாதையிலேயே ஓடுவது தவறாகும். அவர் வந்து தொடுமிடம் நாம் தொடங்குமிடம்"6

என்று அழகிய பொருத்தமான உவமையின் மூலம் விளக்குகிறார். இதனால் ஒரு பொருளைப் பற்றி ஆய்வு செய்யத் தொடங்கும்போது அத்துறை பற்றிய வளர்ச்சியை முழுவதுமாகக் கண்டறியத் திறனாய்வு பயன்படுகிறது.

ஓரிலக்கியத்தை - நல்லிலக்கியத்தைப் பலர் அறியச்செய்யும் முயற்சியைப் போன்றே தரமான எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தவும் திறனுய்வு பயன்படுகிறது. சிற்சில வேளைகளில் மூலநூலைப் படிக்க இயலாதபோது நமக்குத் தோன்ருத்துணையாய்ப் பயன்படுபவை திறனுய்வுகளே. கம்பராமாயணம் போன்ற பேரிலக்கியங்களை முழுவதுமாகக் கற்க இயலாதோர் கம்பர்ாமாயணத் திறனுய்வுகளைக் கற்றுப் பயன்பெறுகின்றனர். எனவே திறனுய்வு மூலநூல்களைப் கற்பதற்கும் வழிவகுக்கின்றது.

படைப்பிலக்கியங்களில் உள்ள நிறைகளைச் சுட்டிக் காட்டும் வேளையில் இலக்கியகர்த்தா மகிழ்வது போன்று அவ்விலக்கியங்களில் உள்ள குறைகளைக் குறிப்பிட்டுச் சொல்லும்போது அவற்றைத் தவிர்த்துச் செம்மையான படைப்புக்களை வெளிக்கொணரவும் எழுத்தாளனுக்கு உறுதுணையாவது திறனுய்வே.

இலக்கியத் திறனுய்வும் ஓர் இலக்கிய வகையே. இலக்கியத் திறனுய்வு நடுவுநிலைமை பிறழாது மேற்கொள்ளப்படும் வேளையில் இலக்கியத்தகுதியைப் பெறுகிறது என்பர் அ.ச.ஞானசம்பந்தன்.

> "இலக்கியத் திறனுய்வும் ஓர் இலக்கியமாகலாம். ஒரு நூலைத் திறனுய்வு செய்யப் புகுந்த நூல் அம்மூலநூலை நாம் கற்கத் தூண்டவேண்டும். மூலநூலைப் பற்றி அறிய நம்மை அது தூண்டினுலும் தூண்டாவிட்டாலும் நடுவுநிலைமை பிறழாமல் எழுதப்பட்டிருந்தால் அத்திறனுய்வாளன் கருத்தைக் கூறுகின்றமையின் அதுவும் ஓர் இலக்கியமென்றே கூறவேண்டும். இக்கருத்தைப் பழந்தமிழர் நன்கு உணர்ந்திருந்தனர். அதனுல்தான் போலும் பழைய இலக்கியங்களை அடுக்கிக் காட்டும் வரிசையில் 'தெள்ளு பரிமேலழகர் செய்த உரையும்' (உமாபதி சிவம்) என்று கூறிச் சென்ருர்கள்"7

இக்கருத்துக்கியைய இலக்கியத்தினுல் பெறும் பயன்களை இலக்கியத் திறனுய்வும் தருவதனுல் இலக்கியத்திறனுய்வும் ஓர் இலக்கியவகையே என்பது பெறப்படும். மேலைநாடுகளில் திறனுய்வு நூல்களுக்கே திறனுய்வுகள் வெளிவருவதும் இவ்வடிப்படையிலன்ருே?

*திறனுய்வாளனின் தகுதி:*

இலக்கியத்தினைத் திறனுய்வு செய்வது சிலர் நினைப்பது போல எளிதான செயலன்று. படைப்பிலக்கியங்களைப் படைப்போர், படைப்பிலக்கியங்களை உருவாக்குவது பிரசவவேதனைக்கு ஈடானது என்பர். இவ்வேதனை போன்றதே இலக்கியத் திறனுய்வும்! திறனுய்வின் அருமையை உண்மையான திறனியே உணர்வான் - அறிவான். நுண்மாண் நுழைபுலம், கூர்ந்து நோக்கும் திறன், சொல்லவந்த கருத்துக்களைச் சுருக்கமாக, தெளிவாக, செறிவாக எழுதும் ஆற்றல் ஆகிய தகுதிகள் திறனுய்வாளனுக்கு இருத்தல் வேண்டும். ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பொருளைப் பற்றிய ஆழமான அறிவும், அப்பொருளிடத்து அன்பும் இருத்தல் வேண்டும். சிறந்த திறனி 'ஒருபாற் கோடாத' சிறந்த சான்ருேன். நடுவுநிலை பிறழாத நன்னெறியாளனுகத் திறனி இருக்கவேண்டும் என்பர் ஆர்னுல்டு.*8*

*விமரிசனமும் திறனுய்வும்:*

விமரிசனம் செய்வதற்கும் திறனுய்வு செய்வதற்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. விமர்சிப்பவன் மிகச் சாதாரண வாசகனுகக் கூட இருக்கலாம். ஆனுல் ஆய்வு செய்பவன் திறனி. ஓர் இலக்கியம் எந்த அளவுக்குத் தன்னைக் கவர்ந்தது என்ருே அல்லது எந்த அளவிற்குப் பயன்பட்டது என்ருே விமர்சகன் கூறுவான். ஆயின் திறனியோ ஒரு பொருளைப் பொருள்மயமாக நின்று படைப்பிலக்கியத்தின் நோக்கம், படைப்பாளனின் திறமைகள், படைப்பிலக்கியம் படைக்கப்பட்ட பாங்கு, அவ்விலக்கியத்தின் குறைநிறைகள், அப்படைப்பிலக்கியத்தின் உத்திகள் எனப் பல கோணங்-

களில் துருவித் துருவி ஆராய்ந்து முடிவு சொல்லுவான். விமரிசகனுக்கு விருப்பு வெறுப்புகள் இருக்கலாம். விரும்பிய எழுத்தாளரை வானளாவப் புகழ்வதும்; விரும்பாத எழுத்தாளரை அளவுக்கு மீறிப் பழிப்பதும் ஆகிய இயல்புகள் விமர்சகனிடம் உள. ஆயின் திறனிக்கு இத்தகைய விருப்பு-வெறுப்புகள் கிடையா. விமர்சகன் காணவியலாத புதிய உண்மைகளைத் திறனியே படைத்துக் காட்டுவான். ஐயங்களைப் போக்கும் தெளிந்த அறிவு காரணமாகப் புதுவழி காட்டும் பொறுப்பு திறனிக்கு உண்டு. ஆகலின் விமர்சனமும் திறனாய்வும் வேறுபட்டவை என்பது அங்கைநெல்லி.

**திறனாய்வின் வகைகள்:**

விளக்கமுறைத் திறனாய்வு, பகுப்புமுறைத் திறனாய்வு, ஒப்பீட்டுமுறைத் திறனாய்வு, வரலாற்றுமுறைத் திறனாய்வு எனத் திறனாய்வு பலதிறப்படும். ஒரு நூலை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு அதனை மட்டும் முழுமையாகப் பல கோணங்களில் ஆய்வு செய்வது விளக்கமுறைத் திறனாய்வாகும். 'ஆய்ந்தாராய்ந்து' என்னும் சொற்றொடருக்குப் பரிமேலழகர் தரும் விளக்கம் போன்று பலமுறைகளில், பல படிநிலைகளில், பலகாலும் ஆராய்வது விளக்கமுறைத் திறனாய்வாகும். விளக்கமுறைத் திறனாய்வினுள் பாராட்டுமுறைத் திறனாய்வும் அடங்கும். ஒரு நூலின் நயங்களையும், சிறப்புக்களையும் மட்டும் கூறி ஏனையவற்றை விட்டுவிடுவது பாராட்டுமுறைத் திறனாய்வாகும். ஆயின் பாராட்டு ஒன்றை மட்டும் தெரிவிப்பது முழுமையான ஆய்வாகாது.

பரந்த, பெரிய ஆய்வுப்புலத்தை எடுத்துக்கொண்டு அதனைப் பல முறைகளில் பகுத்து ஆய்வது பகுப்பாய்வாகும். சங்க இலக்கியங்களைத் திணைவாரியாக, கருப்பொருள் வாரியாக, கூற்று வாரியாக, மாந்தர் (தலைவன், தலைவி, தோழி) வாரியாக ஆய்வு செய்வது பகுப்புமுறைத் திறனாய்வு அல்லது பகுப்பாய்வு எனப்படும்.

இரு துறைகளை ஒப்பிட்டும் உறழ்ந்தும் ஆய்வு செய்வது ஒப்பாய்வாகும். ஒப்பிட்டு ஆய்வு செய்யப்படும் இரு துறைகளுக்கும் ஒரு வித இயைபு இருக்கலாம்; அல்லது வேறுபாடுகள் இருப்பினும் வேற்றுமைக்குள் ஒற்றுமை காண விழைவதும் ஒப்பாய்வின் அடிப்படையாக அமையலாம். இவண் இலக்கியம் பற்றி அரிசுடாட்டில் கூறும் கருத்து நினையத்தக்கது.

> "இலக்கியம் உலகப் பொதுவானது; எனவே தனிப்பட்டவற்றைக் கருத்திற் கொள்ளும் வரலாற்றை விட இது தத்துவ ரீதியானது."9

எனவே உலகப்பொதுமைப்பண்பு நிரம்பிய இலக்கியங்களை ஒப்பிட்டு ஆய்வதும் ஒப்பாய்வுத்துறையில் காணலாகும் வளர்ச்சி நிலையாகும். ஆய்வுமுறைகளில் அறிவியல் அணுகுமுறைகளைக் கையாள்வதற்கு ஒப்பாய்வுத்துறை ஏற்புடையது. இலக்கியத்தின் தனித்திறனை மதிப்பிடும் ஆய்வு முயற்சிகளைக் காட்டிலும் பரந்த நிலையில் இலக்கியத்தின் பொதுமைப்பண்பை - உலகளாவிய உயர்நோக்கை மதிப்பிடும் ஒப்பாய்வுமுறை சிறந்ததாம். ஆய்வாளன் இருதுறையறிவும் பெற்றிருப்பின் இத்தகைய ஒப்பாய்வுகளை மேற்கொள்ளலாம்.

> "அரைகுறையாகக் கற்றவர்களிடையே எவ்வளவு வேறுபாடு இருந்தாலும் கற்றுத்தேர்ந்தவர்களிடையே அவ்வளவு வேறுபாடு காணேம்; உயர்ந்த கலைஞர்களிடையேயும் அவ்வளவு வேறுபாடு காணேம்; அதனுல்தான் எந்தக் காலத்தில் எந்தச் சூழலில் தோன்றியவர்களாக இருந்தாலும் உயர்ந்த கலைஞர்கள் ஒரே தன்மை உடையவர்களாகத் தோன்றுகிறுர்கள்"10

என அறிஞர் மு.வரதராசனுர் மொழிகுவர். இவ்வடிப்படையில் இலக்கியத்தின் 'ஒருலக மனப்பாங்கைக்' காட்டும் ஒப்பாய்வு ஒப்பற்றதாம்.

வரலாறு என்பது கடந்தகால நிகழ்ச்சிகளின் தொகுப்பாகும். இந்நிகழ்ச்சிகளை ஆராய்ச்சி உணர்வோடும் மெய்ம்மைகளோடும் எழுதும்போது அது வரலாற்றாய்வு எனப்படுகிறது. அறிவாராய்ச்சித்துறையில் இத்துறையும் பரந்துபட்டதாகும். அனைத்துத்துறைகளுக்கும் இம்முறை பொருந்தும். ஓர் ஆய்வுப்புலத்தின் வளர்ச்சி நிலைகளைக் கண்டறிவதும் வரலாற்றுமுறை ஆய்வேயாம்.

**ஆய்வு நாகரிகம்:**

திறனாய்வு செய்யுங்கால் இன்னின்னவை செய்யத்தக்கன; இன்னின்னவை செய்யத்தகாதன என விதித்தும் விலக்கியும் ஆய்வறங்களைக் கூறியுள்ளனர் அறிஞர் பெருமக்கள். (காண்க - 'தமிழியல் ஆய்வு' - ஆசிரியர்கள் : தமிழண்ணல் இ. முத்தையா) ஆத்திசூடி அறவாழ்க்கைக்கென ஔவையார் அருளிய நீதிநூல் ஆகும். இந்நூல்போல ஆய்வு வாழ்க்கைக்கென ஆய்வறங்களை 'ஆய்வுசூடி' எனத் தந்துள்ளனர் இவ்வறிஞர் பெருமக்கள். இவ்வாய்வறங்களைப் பின்பற்றுவதே ஆய்வு நாகரிகமாம். இருப்பினும் சில ஆய்வறங்கள் பசுமரத்தாணிபோல் ஆய்வாளர்கள் நெஞ்சங்களில் பதித்துக்கொள்ள வேண்டியவையாகும். பல நூல்களின் சுருக்கமோ, பல கட்டுரைகளின் சுருக்கமோ ஆய்வுரையாகாது. பிறர் கருத்துக்களைத் தம் கருத்துக்களாக்கிக் கொள்ளும் உரிமை ஆய்வாளனுக்குக் கிடையாது. இதனை விளக்குகையில் மிகப் பொருத்தமான உவமையொன்றினைக் கையாள்வர் அறிஞர் தமிழண்ணல். "சோரம்போய்ப் பெற்ற குழந்தையைத் தன் குழந்தையாகக் கூறுவதை ஒக்கும்"11 என்ற இவ்வுவமை கருத்துத்திருடர்களை வாள் போல் அறுக்கும் தகையது. கருத்துத் திருட்டு தவிர்க்கப்பட வேண்டியதன் அவசியத்தையும், செம்மையான, நேர்மையான ஆய்வின் தேவையையும் கருதிச் சில உருவகங்களை 'ஆய்வு நரிகள்', 'ஆய்வுக்கிளிகள்', 'ஆய்வுப்பூனைகள்', 'ஆய்வுப்புலிகள்' என்று எள்ளற்சுவைபட மொழிகுவர். மேற்கோள்கள் பல இருப்பின் ஆய்வுரையாகாது என்பதும் மனங்கொளவேண்டிய உண்மையாம்.

**மலேசியாவில் திறனாய்வு முயற்சிகள்:**

'மலேசியத் தமிழ் இலக்கியம்' என்ற துறையின் வளர்ச்சி மிக அண்மைக் காலத்ததுதான். மலையக இலக்கிய முயற்சிகள் பெரும்பாலும் தொடக்ககாலத்தில் தமிழகத்தையே சார்ந்திருந்தன. ஈழத்தில் தமிழிலக்கியம் வளர்ந்தது போன்று இவண் இலக்கியங்கள் வளர்தற்கு - பெருகுவதற்கு வாய்ப்புகள் குறைவு. ஆயினும் இலக்கியப் பெருமரத்தின் பல்வேறு கிளைகளுள் கவிதையும், சிறுகதையுமே வளமாக வளர்ந்திருக்கின்றன. மற்றக் கிளைகள் ஊட்டம் குறைந்து காணப்படுகின்றன. ஒரு நாட்டின் இலக்கிய வளர்ச்சிக்கு அல்லது ஒரு மொழியின் இலக்கிய வளர்ச்சிக்கு உரமாக அமைபவை இலக்கியத் திறனாய்வுகளே. திறனாய்வுகள் பெருகின் இலக்கியங்களும் பெருகும். முன்னர்க் காட்டிய-படி இலக்கியத் துறையின் சில பகுதிகள் மட்டுமே வளர்ந்திருக்கச், சில பகுதிகள் 'சவலைக் குழந்தைகளாக' அமையப் பல காரணங்கள் உள. அவற்றுள் தலையாயது தக்க திறனாய்வுகள் தோன்றாமையே.

கவிதை, சிறுகதை என்னும் இரு துறைகளின் பெரு-வளர்ச்சிக்கு அத்துறைகளில் பெருகியுள்ள திறனாய்வுகளே தக்க காரணமாகும். மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு - தற்கால இலக்கிய வகைகளின் வளர்ச்சிக்கு அமரர். முனைவர் தண்டாயுதம் அவர்களின் பங்கு அளப்பரியது. இலக்கியத் திறனாய்வாளர் என்ற முறையில் அவர் வழங்கிய ஆய்வுரைகளும், அணிந்துரைகளும், கருத்தரங்குகளில் அவரால் வாசிக்கப்பட்ட கட்டுரைகளும் இன்னோரன்ன பிறவும் கவிதை, சிறுகதைப் பயிர்களுக்கு உரமாகி, வேலி-யாகிக் காத்தன. மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் - திறனாய்வுத் துறையில் முத்தமிழ்வித்தகர் முருகு சுப்பிர-மணியன், புலவர் மு. சேதுராமன், இர.ந.வீரப்பன், முனைவர் ரெ.கார்த்திகேசு, திருமதி லோகநாயகி ஆகியோரும் குறிப்-பிடத்தக்க பணியாற்றியுள்ளனர்.

மேற்குறிப்பிட்ட அனைவருடைய திறனாய்வுக் கட்டுரைகளில் சிற்சிலவே அச்சில் வெளிவந்துள்ளன. ஆயினும் மலேசியத் தமிழ் இலக்கியங்களின் எண்ணிக்கையை நினையுங்கால் அவற்றுக்குரிய திறனாய்வுகள் குறைவே. இந்நிலைக்குப் பல காரணங்களைக் கூறலாம்.

1) படைப்புக்களுள் நூல் வடிவம் பெறுவன குறைவு. பத்திரிகைகளில் வெளிவருவன 'ஆய்வுப் பொருளாகக்' கருதப்படவில்லை.

2) படைப்பிலக்கியவாதிகள் தங்கள் படைப்புக்களில் திறனாய்வாளர்கள் குற்றங்குறைகள் கூறினால் ஏற்றுக்கொள்வதில்லை. பாராட்டுக்களில் ஆழ்ந்த பற்றுக்கொண்டிருக்கக் கூடிய மனநிலையே அதிகமாக எழுத்தாளர்களிடம் காணப்படுகிறது.

3) தமிழ் நூல்களைப் படிக்கும் வாசகர்கள் மிகக் குறைவாக உள்ளனர்.

4) தமிழறிந்தோரும் தமிழ்நூல்களை அலட்சியப்படுத்தும் போக்கு.

5) தமிழ் மக்களிடம் இலக்கிய உணர்வு குறைவு.

6) சொல்லப்படும் கருத்தை விடச் சொல்பவருக்கே முக்கியத்துவம் கொடுப்பது; இன்னார் சொன்னால் ஏற்பது; இன்னார் சொன்னால் ஏற்பதில்லை என்ற போக்கும் மக்களிடையே நிலவுகின்றது. (எ.கா. திறனாய்வாளர் சொல்லும் கருத்தை விட அரசியல்வாதியின் கருத்தை இலக்கியத்துறையில் மதிப்பது)

மேற்காட்டப்பட்ட காரணங்கள் அனைத்தும் நடப்பியல் சூழலில் மிகவும் பொருத்தமான காரணங்கள். இந்நிலை தொடருமாயின் திறனாய்வுகள் பெருகா. அவ்வாறே திற-

ளுய்வுகள் வந்தாலும் அவையும் பாராட்டுமுறைத் திறளுய்வுகளாகவே அமையும். பாராட்டுமொழிகள் எழுத்தாளர்களுக்கு ஊக்கத்தைக் கொடுக்கமுடியுமே தவிர உண்மையில் தரமான இலக்கியத்தை உருவாக்க வழிவகுக்கா. 'வெண்திரையில் விழுந்த கரும்புள்ளி போலச்' சிறந்த திறனிக்கு ஓரிலக்கியத்தின் குறைகளும் தெளிவாகத் தெரியும். திறனி எழுத்துக்களைத்தான் ஆராய்கின்ருனே தவிர எழுத்தாளனை ஆராய்வதில்லை. எழுத்தாளனைப் பற்றிய ஆராய்ச்சி (எழுத்தாளனின் சொந்த வாழ்க்கை) திறனிக்குத் தேவையுமில்லை. ஓர் எழுத்தாளனிடம் தீய குணங்கள் இருக்கலாம். அத்தீய குணங்களைப் பற்றிய ஆய்வு திறனிக்குத் தேவையில்லை. எழுத்தாளனின் எழுத்துலக வாழ்க்கை தான் திறனிக்கு ஆய்வுப் பொருளேயன்றி எழுத்தாளனின் சொந்த வாழ்க்கையன்று. எனவே எழுத்தாளர்களைப் பற்றித் திறனிகள் குறை சொல்வதில்லை - அதாவது எழுத்தாளர்களின் படைப்புக்களில் உள்ள குறைகளையே சுட்டிக்காட்டுகின்றனர் என்ற உண்மையைத் தெளிவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

எழுத்தாளன் திறமையானவனுயிருந்து அவனிடம் இருக்கும் சிறிய குறைகளைச் சுட்டிக்காட்டுவதால் எழுத்தாளரின் திறமைக்கு ஊறு நேர்வதில்லை. குறைகளைச் சுட்டிக்காட்டுவதனுல் இனிவரும் படைப்புக்களில் குறைகளைத் தவிர்க்கவேண்டும் என்ற நல்லெண்ணத்தை எழுத்தாளர்களின் மனங்களில் விதைக்கிருன் திறனி. இதன் மூலம் தரமான இலக்கியங்கள் உருவாக வழிவகுக்கிருன். திறனி காய்தல், உவத்தல் அகற்றி நடுவுநிலையோடு ஆராய்பவனுயிற்றே? 'காமம் செப்பாது கண்டது' மொழிபவனன்ருே திறனி? அவ்வாருயின் அவனுடைய திறனுய்வுகளில் நடுவுநிலைமை தானே மிளிரும்?

மலேசிய இலக்கியத்துறையில் முன்னர்க் காட்டிய அறிஞர்களின் பெருமுயற்சியால் திறனுய்வுத்துறை துளிர்விடத் தொடங்கிய நிலையை அறியலாம். திறனுய்வுத்துறையின் வளர்ச்சியை இரு நிலைகளில் பகுத்து மதிப்பிடுவது எளிது; பொருந்துவதுமாகும்.

*1)* அறிஞர்களின் ஆய்வு முயற்சிகள்
*2)* ஆய்வு மாணவர்களின் ஆய்வு முயற்சிகள்.

**அறிஞர்களின் ஆய்வு முயற்சிகள்:**

முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியன் தமிழ்நேசனின் ஆசிரியராக இலக்கியப் பணியாற்றியமை மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் 'கல்வெட்டாக' வாழும் தகுதி உடையது. அன்னாரின் இலக்கியப்பணி மறக்கற்பாற்றன்று. தரமான இலக்கியங்கள் உருவாக அவருடைய அரும்பெரும் முயற்சியும், ஊக்குவிப்பும், திறனாய்வுப்பணியும் தலையாய காரணங்கள். புலவர் மு.சேதுராமனும் மலேசியத் தமிழ் இலக்கிய உலகம் நன்றியுடன் நினைவுகூரப்பட வேண்டியவரே!

தமிழ் கற்ற அறிஞர்கள் மலேசியத் தமிழ் இலக்கிய உலகிற்கு வழங்கிய இலக்கியக்கொடை காலத்தால் அழியாத காவியங்கள்! அமரர் இரா. தண்டாயுதம்; அமரர் ந.வீ.செயராமன் ஆகிய இருவரும் விருப்பு வெறுப்பின்றி மலேசியத் தமிழ் இலக்கியங்களைச் சீர்தூக்கி ஆராய்ந்து எண்ணற்ற ஆய்வுக்கட்டுரைகளை எழுதினர். அவை நூலுருப் பெற்றிருப்பின் மலேசியத் தமிழர்களும், தமிழ் இலக்கிய உலகமும் பயனடைவர் என்பது உறுதி.

எழுத்தாளர்கள் திறனாய்வுத்துறையிலேயும் ஈடுபட்டுக் குறிப்பிடத்தக்க பணியாற்றியுள்ளனர். பெரும்பாலும் எழுத்தாளர்கள் இத்துறையிலே ஈடுபடுவதனால் தங்கள் குறைநிறைகளை உணர வாய்ப்புண்டு; எனினும் விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில் கருத்துத்தெரிவிக்கும் நிலை ஏற்படுகிறது. எழுத்தாளர்கள் கருத்தரங்குகள் கூட்டி இலக்கியப்படைப்புக்களை ஆராய்கின்ற நிலையை ஓரோவழி மலேசியாவில் காணலாம். இக்கருத்தரங்குகள் அடிக்கடி நிகழ்த்தப் பெற்றிருப்பின் நாவல், நாடகம் ஆகிய துறைகளில் மந்தநிலை தோன்றியிராது. எழுத்தாளராயினும் திறனாய்வுப் பணியில் ஈடுபட்டவர்களுள் மலேசியத் தமிழ் இலக்கியத்துறையைப்

பொறுத்தவரை பேராசிரியர் இர. ந. வீரப்பனும், முனைவர் ரெ. கார்த்திகேசுவும் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

**ஆய்வுமாணவர்களின் ஆய்வு முயற்சிகள்:**

இந்நாட்டில் சில பட்டங்களுக்காக மேற்கொள்ளப்படும் ஆய்வு முயற்சிகள் இப்பகுதியில் விரிவாகப் பேசப்பெறுகின்றன. இவண் ஆய்வுப்பட்டத்திற்கெனப் பதிவு செய்த, செய்துள்ள மாணவர்களில் பெரும்பாலோர் தமிழக ஆய்வுப்புலங்களையே நாடுகின்றனர். தமிழக ஆய்வுப்புலங்களை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டாலும் அவை புதிய பார்வையுடனோ அல்லது நுட்பத்துடனோ அமைவதில்லை. அனைத்தும் 'அரைத்த மாவை அரைக்கும்' முறையிலேயே அமைந்துள்ளன. தமிழக ஆய்வுப்புலங்களை ஆய்வு செய்வதில் தவறில்லை. ஆயினும் ஆய்வுக்குவிவு (*Focusing*) வேண்டுமன்றோ? தமிழகத்தில் இவ்வாய்வுக்குவிவு சிறப்பாக அமையக் காண்கிறோம். ஆகவே ஆய்வுகள் மிகக் கூர்மையுடையனவாக அமைகின்றன. ஆயின் இங்கோ 'ஆய்வுக்குவிவு' அமைவதில்லை. மாணவர்கள் அதிகமாக உழைக்க அஞ்சுகின்றனரா? பிறர் ஆராய்ந்த தலைப்புக்களிலே அதிக நாட்டம் செலுத்தக் காரணம் என்ன? ஆய்வுக்குவிவு அமையாத நிலையில் எந்த அளவுக்கு ஆய்வுநாகரிகம் போற்றப்படுகின்றது? என்ற கேள்விகள் இயல்பாக எழுகின்றன. 'வேலையை எதிர்நோக்கிய கல்வி என்பதைப் போன்று' சிக்கலை எதிர்நோக்கிய ஆய்வுகள் இவண் உண்டா? முன் ஆய்வுகளின் வரலாற்றை முறையாக அறிய இயலாத சூழ்நிலையில் முன் ஆய்வுகளில் கூறப்பெற்ற சிக்கல்களை அறிவரா? அவ்வாறு அறியின் அன்றோ அச்சிக்கல்களையே ஆய்வுப் பொருளாக்கிப் புது உண்மைகளை வெளிப்படுத்த இயலும்? தமிழக ஆய்வுப் புலங்களை ஆய்வு செய்வதால் வேறு பயன்கள் விளையுமாயினும் மலேசியத் தமிழ் இலக்கியத்திற்கு என்ன நன்மை? என்றெல்லாம் ஆய்வில் நாட்டம் உடையோர் சிந்தித்தால் பயனுண்டு; புதிய ஆய்வுகள் - உண்மையான - நேர்மையான - தகுதியான ஆய்வுகள் உருவாக வழியுண்டு. இத்தகு ஆய்வேடுகளை உருவாக்குவதில்

ஆய்வு நெறியாளர்களுக்கும் பங்குண்டு. ஆய்வுநெறியாளர் நேரிய நெறியில் செல்லவேண்டும்; அந்நேரிய நெறியிலேயே ஆய்வுமாணவர்களையும் வழிநடத்தவேண்டும். ஆகலி-னன்றோ 'நெறியாளர்' என்ற நேரிய பெயர் வாய்த்தது. பல-ரும் ஆய்ந்த தலைப்புகளையெல்லாம் 'இத்துறையில் இது புதியமுயற்சி என்று நெஞ்சாரப் பொய் சொல்வது ஆய்வு நாகரிகமா? எனவே தமிழக ஆய்வுப்புலங்களை ஆய்வு செய்வோர் மேற்கூறிய சிந்தனைகளைச் சிந்தையில் தேக்குதல் நலம். மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவுமாறு தமிழக இலக்கியங்களோடு ஒப்பீட்டு முறையில் ஆய்வுகள் மேற்கொள்ளப்படலாம்.

ஒரு நாட்டு இலக்கியம் அந்நாட்டு மக்களாலேயே தேடுவாரற்றுக் கிடக்குமாயின் அதன் நிலை என்ன? மலேசியத் தமிழ் இலக்கியங்களுக்கும் இந்நிலையே உண்-டாகியுள்ளது. இங்குள்ள இலக்கியங்களை ஆய்வு செய்ய 'மனமில்லாதவர்கள்' மத்தியில் சில எழுத்தாளர்கள் தமிழக ஆய்வாளர்களுக்கு ஒத்துழைப்பு நல்கித் தங்களைப் பற்றிய ஆய்வுகளை வெளிக்கொணர்கிறார்கள். புகழ் நாட்டமுடைய சில எழுத்தாளர்கள் இப்படிச் செய்வதாகப் புறங்கூறினாலும் இக்கருத்தை நாம் புறக்கணிப்பதற்கில்லை. ஏனெனில் ஆய்வு முயற்சி என்பது தங்கத்தினை மாற்றுரைப்பது போலன்றோ? மலையக எழுத்தாளர்கள் தங்கள் படைப்புக்களைப் பற்றிய குறைநிறைகளை அறிய அவாவுவதும் நியாயமானதன்றோ? ஆகவே ஆய்வு செய்ய நாட்டமுடையோர் மலேசியத் தமிழ் இலக்கியங்களை நாடுவது மலேசியத் தமிழ் இலக்கிய உல-கிற்கு வளஞ்சேர்க்கும்.

மலையக ஆய்வு மாணவர்களுள் மிகச்சிலரே இந்நாட்டு இலக்கியங்களை ஆய்வுப்பொருளாக்கியுள்ளனர். 1975-ஆம் ஆண்டு வரையிலான மலேசியத் தமிழ்ச் சிறுகதைகள் பற்றிய ஆய்வு முதுகலைப்பட்டத்திற்கெனச் சமர்ப்பிக்கப்-பட்டது. இவ்வாய்வின் தொடர்ச்சியாக 1975க்குப் பிறகு வெளிவந்த மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளை 1988ஆம் ஆண்டு வரை வரையறுத்துக்கொண்டு மற்றொருவர் ஆய்வு மேற்கொண்டு வருகிறார். மலேசியத் தமிழ்க் கவிதைகளும் மற்றொரு மாணவரின் ஆய்வுப் பொருளாகியுள்ளது. இவ-

வடிப்படையில் மலாயாப் பல்கலைக்கழகத்தின் இந்திய ஆய்வியல் துறை ஆய்வுக் கருத்தரங்குகளை நடத்தியும், ஆய்வுப்பாடங்களை (*Kertas penyelidikan* அல்லது *projek penyelidikan*) அறிமுகப்படுத்தியும் ஆய்வுத்துறைக்கு அடிப்படை அமைத்துக் கொடுப்பது பாராட்டவேண்டிய முயற்சியாகும். இலக்கியங்கள் பெருகவும், அவை நிலைத்து வாழவும் இம்முயற்சி உறுதுணையாகும்.

மலேசியத் தமிழ் நாவல்களைப் பற்றி ம.மதியழகன் என்பவர் பிஎச். டி. பட்டத்திற்காக ஆய்வு செய்தார். இவ்வாய்வேடு நூலாகவும் வெளிவந்தது. ஆயின் இச்செய்தி அறியப்படா நிலையிலேயே இவண் மலேசியத் தமிழ் நாவல்களைப் பற்றிய ஆய்வு மேற்கொள்ளப்பட்டு வருகிறது. மலேசியத் தமிழ் நாவல்களுள் மலேசிய விடுதலைக்கு முன்பு வெளிவந்தவை பற்றி முதுகலைப்பட்டத்திற்கென ஒருவர் ஆய்வேடு சமர்ப்பித்தார். பிஎச். டி. பட்டத்திற்கென விடுதலைக்குப் பிறகு வெளிவந்த நாவல்களைப் பற்றி அவரே ஆய்வு செய்து வருகிறார்.

'மலையைக் கெல்லி எலியைப் பிடிப்பது' போன்று அரும் உழைப்பினால் மட்டுமே மலையக இலக்கியங்களைப் பற்றிய திறனாய்வுகளை வெளிக்கொணர இயலும். மலையகத் தமிழ் இலக்கியங்களைப் பற்றிய ஆய்வுக்களங்கள் பல உள்ளன. வருங்கால ஆய்வாளர்களுக்கு இக்களங்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய கடப்பாடு உண்டு.

**இனிச் செய்யவேண்டியவை:**

திறனாய்வுகள் பெருக வேண்டுமாயின் மலேசியத் தமிழர்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் பல உள. வாழ்க்கை வசதிகளுக்காக வெவ்வேறு துறைகளில் ஈடுபட்டாலும் தமிழர்கள் மொழித்துறையை - தாய்மொழியை மறக்கக்கூடாது. மொழியை நன்கு பேசவும், எழுதவும் கற்றுக்கொள்ளவேண்டும். நல்ல தமிழ் நூல்களைப் படித்துத் தமிழுணர்வை வளர்த்துக் கொள்ளவேண்டும். இதனால் தரமான இலக்கியங்களையும், தரமான இலக்கியத் திறனாய்வுகளையும் படிக்கத் தூண்டுதல் ஏற்படும். தரமான வாச-

கர்கள் பெருகின் திறனாய்வுக்கலேயும், இதற்கு அடிப்படை-யான இலக்கியக்கலேயும் பெருகும்; நின்று வாழும். உட-லிலே ஓர் உறுப்பு ஊனமாயின் உடலின் பயனும் அழகும் பாழ்பட்டு விடுமன்றோ? அதுபோன்றே இலக்கியத்துறை-யின் ஓர் உறுப்பான திறனாய்வுத்துறையும் ஊனமாகிவிடக்-கூடாது. இவ்வுணர்வு ஒவ்வொருவருக்கும் - இலக்கிய ஆர்-வலர் ஒவ்வொருவருக்கும் இருத்தல் வேண்டும்.

இலக்கியங்கள் காலத்தால் அழியாத காவியங்களாக, வெல்லும் இலக்கியங்களாகத் திகழவேண்டுமென்றால் எழுத்தாளன், திறனி ஆகிய இருவரின் முயற்சியும் ஒத்து-ழைப்பும் இன்றியமையாதன. இரு கை தட்டினாலன்றோ ஓசை எழும்? வாசகர்களும் தரமான ஆய்வுகளுக்கு வர-வேற்பளிக்கவேண்டும். மொத்தத்தில் இது ஒரு கூட்டு-முயற்சியேயாம். இலக்கியத்தைப் போன்ற நோக்கத்-துடனேயே எழுவதால் திறனாய்வுக்கலேயும் ஓரிலக்கிய வகையே! இக்கலேயை வளர்ப்பதில் விளம்பரநோக்கம் கூடாது. எனவே பிரித்தானியக் கலேக்களஞ்சியம் கூறும் கீழ்க்கண்ட கருத்துக்களே மலேசியத் தமிழர்கள் ஒவ்வொரு-வரும் நெஞ்சில் நிறுத்தவேண்டும்.

> "உலகில் பிறந்த நாம் சில செயல்களேச் செய்து முடிக்கவேண்டும் என்பதற்காகச் செய்கிறோம். இவை நமக்கு இன்றியமையாதவை. இன்னும் சிலவற்றை நாம் செய்யவேண்டுமெனப் பிறர் எதிர்பார்க்கின்றனர். இவை நம் கடமைகளா-கும். இவற்றைத் தவிர மேலுஞ் சிலவற்றை நாம் செய்கிறோம். இதற்கு நம் விருப்பமே காரண-மாகிறது. இவ்வாறு விருப்பின் அடிப்படையில் செய்யப்படும் பல செயல்களில் நுண்கலேகளும் ஒன்று. இக்கலேயின் விளேவு நிலேத்ததும் கலப்-பற்றதுமான முருகியல் இன்பமாம். இக்கலே ஓர் அளவுவரை முற்கூட்டிய ஆராய்ச்சி, சிந்தனே எல்லேக்குட்பட்ட தன்மை ஆகிய இவற்றால் வரையறுக்கப்படுகின்றது."11

## மேற்கோள் விளக்கம்

1. தொல்காப்பியம், இளம்பூரணர் உரை, ப-376
2. ச.வே.சுப்பிரமணியன் (ப.ஆ.) ஆராய்ச்சி நெறிமுறைகள், நூலாசிரியரின் விரிவுரைக்குறிப்பு
3. முனைவர் இலக்குமி மீனாட்சிசுந்தரம், 'மலேசியாவில் திறனாய்வு முயற்சிகள்', தமிழ்நேசன், 25. 2. 90.
4. திருத்தக்கதேவர், சீவகசிந்தாமணி, குணமாலையார் இலம்பகம், பா- 888
5. திருவள்ளுவர், திருக்குறள் - 596
6. தமிழண்ணல், ஆய்வியல் அறிமுகம், ப-39
7. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப-25.
8. *W.H. Hudson, Introduction to Literary Criticism, p.282.*
   *"The true critic must be mentally alert and flexible, keen in insihgt, quick in response to all impressions, strong in grasp of all essentials; he must, more over, as Mathew Arnold will tell us be able to see a thing as it really is and not distorted through a mist of his own idiosyncracies and prepossissions; which means that he must be entirely disinterested and free from bias of all kinds, bias of individual tastes; bias of education, bias of creed, sect, party, class, nation.*
9. ரெனிவெலாக்கு ஆஸ்டின் வாரன், இலக்கியக் கொள்கை, ப-8.
10. மு.வரதராசன், இலக்கிய ஆராய்ச்சி, ப-11.
11. *Sidney Colvin, "Fine Arts", Encyclopaedia Britannica*
   *"There are somethings which we do because we must; these are our necessities. There are other things which we do because we ought; these are our duties. There are other things which we do because we like; these are our plays. Among the various kinds of things done by men only because they like, the fine arts are those of which the results afford to many permanent*

*and disinterested delight and of which the performance calling for premediated skill, is capable of regulation up to a certain point but the point passed has secrets beyond the reach and a freedom beyond the restraint of rules.*

# மலேசிய நாடகத்துறை

நாடகம் காலத்துக்கேற்றவாறு மாறிவரும் இலக்கிய வடிவம். தொல்காப்பியர் கூறியது போன்று1 கண்ணுக்கும் செவிக்கும் இன்பந்தரும் கலைவடிவம். இக்கலைவடிவம் மலேசிய மண்ணில் வேரூன்றத் தொடங்கியது முதல் இதன் வளர்ச்சியை மூன்று காலகட்டங்களுக்குள் அடக்குவர் மா. இராமையா. இவர் கூறும் மூன்று காலகட்டங்களும் மேடைநாடக வளர்ச்சியையே சுட்டுகின்றன.

அ. *1946* முதல் *1956* வரை
ஆ. *1956* முதல் *1966* வரை
இ. *1966* முதல் *1976* வரை2

இந்நாட்டு மேடைநாடகத்துறையில் தமிழகத்தின் பங்களிப்-பும் குறிப்பிடத்தக்கது. ஆகவே மலேசிய மேடைநாடகத்-துறையின் வளர்ச்சியை இரு கோணங்களில் கணிக்கலாம்.

அ. தமிழகக்குழுக்களின் தொடர்பும் தமிழக நாடகங்களின் தொடர்பும்.
ஆ. மலேசிய நாடக்குழுக்களும், மலேசிய மண்ணில் பிறந்த நாடகங்களும்.

*தமிழகத்தொடர்பு:*

தமிழர்கள் பிழைப்புக்காக இந்நாட்டிற்கு வந்த ஆரம்பகாலத்தில் தங்களுடைய பொழுதுபோக்கிற்காகத் தங்களிடையே உள்ள வசதிகளைக்கொண்டு தெருக்கூத்துக்-களை நடித்தனர். 'தாயைப் போல பிள்ளை' என்னும் பழ-மொழி போலத் தமிழகத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்-டின் முற்பகுதி வரை தெருக்கூத்துக்கள் மக்களை மகிழ்வித்-ததைப் போன்றே இந்நாட்டிலும் தெருக்கூத்துக்களே மக்களுக்குப் பொழுதுபோக்குச் சாதனமாக அமைந்தன. மலையகத் தோட்டப்புறங்களில் கட்டக்கட்டி3 என்னும்

பெயருடன் தெருக்கூத்து தழைத்திருந்தது. ஆயின் மலேசிய நகர்ப்புறங்களில் தமிழகத்திலிருந்து வந்த நாடகக்குழுக்கள் நாடகங்களை நடித்தன. *1930*இல் வந்த மெட்ராஸ்சுகுண-விலாசசபா, அரங்கசாமிநாயுடுகுழு ஆகியவை குறிப்பிடத்-தக்கவை. அரங்கசாமி நாயுடு குழுவினருள் பலர் இந்நாட்-டிலேயே தங்கி நாடகக்குழுக்களைத் தோற்றுவித்தனர்.

தமிழக நாடக வரலாற்றில் தமிழ்நாடகத்தந்தை பம்மல் சம்பந்த முதலியாரின் நாடகப் பணி அளப்பரியது. இவர் அமைத்த சுகுணவிலாச நாடக சபை நாடகத்துறை-யில் பல மாற்றங்களைப், புதுமைகளைச் செய்தது. இச்சபை-யின் கிளைநிறுவனமாக மலாயன் சுகுணவிலாச சபை என்ற குழு இயங்கி வந்துள்ளது. *1930*லிருந்து இன்றுவரை தமிழ-கத்திலிருந்து வந்த பல நாடகக்குழுக்கள் இவண் நாடகக்-கலைக்கு நன்மதிப்பையும் வரவேற்பையும் பெற்றுத்தந்தன. மேலும் உள்நாட்டு நாடகங்கள் உருவாவதற்கும், உள்-நாட்டுக்கலைஞர்கள் திறம்பட வளர்வதற்கும் தளம் அமைத்துக்கொடுத்தன.

பாவேந்தர்பாரதிதாசன், அறிஞர்அண்ணா, கலைஞர் கருணாநிதி ஆகியோரின் புரட்சிச்சிந்தனைகள் இந்நாட்டில் பகுத்தறிவுச் சிந்தனைகளை வளர்ப்பதற்கும் - மொழிவளம் மிக்க மேடைநாடகங்கள் உருவாவதற்கும் பாலம் அமைத்-துக்கொடுத்தன. இந்நாட்டு நாடகத்துறையில் சோதனை முயற்சிகள், பல புதிய உத்திகள், ஒப்பனைத்துறை மற்றும் நாடக நுணுக்கங்கள் வளர வழிவகுத்தன. தமிழக நாடகங்-களை எதிர்பார்த்த நிலை மாறி மலேசியத் தமிழ் நாடகத்-துறை தன்னிறைவை எட்டியது. இத்தகு பெருமாற்றத்-துக்குத் தமிழ்நாட்டு நாடகக்குழுக்களின் வருகையே கார-ணம் ஆகும். சுருங்கக்கூறின் தமிழக நாடகக்குழுக்களின் மலேசிய வருகை மலேசியத் தமிழ் நாடகத்துறைக்குப் பயிற்சிக்களமாக அமைந்தது எனலாம்.

மலேசிய மேடை நாடகத்துறையின் தந்தை 'ஆழி அருள்தாசன்' ஆவார். மலேசியத் தமிழ் நாடகத்துறைக்கென்றே தம்மை அர்ப்பணித்துக்கொண்டவர் இவர். ஆகலின் 'மலேசியத் தமிழ் நாடகத்துறையின் தந்தை' என்று இவரைப் போற்றுவது சாலப்பொருத்தமே! நாடகக்கருப்பொருள், நாடகஅமைப்பு, நாடகத்தயாரிப்பு, காட்சியமைப்பு என ஒவ்வோர் அங்கத்திலும் புதுமைப்பொலிவு சேர்த்தவர் ஆழி அருள்தாசன். மலேசியத் தமிழர் கலைமன்றத்தின் தலைவராய் அமைந்து அக்குழுவிற்கு நன்மதிப்பினை உருவாக்கித் தந்தவர். இவரிடம் பயிற்சி பெற்ற கலைஞர்கள் பலர் இன்று மேடைநாடகத்துறை முற்றிலும் அழிந்துவிடாமல் காத்து வருகின்றனர். இதற்கு, அண்மையில் மலேசியத் தமிழர் கலைமன்றம் நடத்திய 'திருமுடி' இலக்கிய நாடகம் சீரிய சான்றாகும்.

*1960* முதல் *1970* வரை பீடுநடையிட்ட மலேசிய நாடகத்துறை, இன்று தத்தித் தவழும் குழந்தையின் நடைபோலாகிவிட்டது. தமிழகத்தில் திரைப்படத்தின் செல்வாக்கால் மேடை நாடகத்துறை வீழ்ச்சியுற்றது போலவே இங்கும் மேடைநாடகத்துறை வீழ்ச்சியுறத் திரைப்படச் செல்வாக்கே காரணமாயிற்று. ஆங்காங்கே ஒரு சில மேடைநாடகங்கள் அரங்கேறி வருகின்றன. *1988*இல் திரு. மணிவாசன் தயாரித்தளித்த 'காட்டிலே சில பூச்சிகள்' என்ற நாடகம் புதுஉத்திநாடகம் என்பது குறிப்பிடத்தக்கது. இது மலேசிய மேடைநாடகத்துறையில் 'மைல்கல்'லாகும்.

மலாயாக் கூட்டரசுத் தகவல் இலாகா பிரச்சாரப் பிரிவினர் பலர் தமிழ் நாடகங்களை நடத்தி வருகின்றனர். இந்நாடகங்கள், முழுமையும் அரசாங்கத்தின் கொள்கைகளையும் திட்டங்களையும் மக்களிடையே பரப்புதற்காக நடத்தப்படுபவையாகும். 'பெஸ்தா' எனப்படும் தேசியக் கலைவிழாவிலும் அவ்வப்போது நாடகங்கள் நடிக்கப்படுகின்றன.

வானொலி நாடகத்துறை:

*1921*-ஆம் ஆண்டு ஜோகூரைச் சேர்ந்த ஏ.எல். பெர்ச் என்பவர் மலேசியாவில் முதன்முதலில் வானொலியை அறிமுகப்படுத்தினார். பின்னர் *1930*-ஆம் ஆண்டு கம்பியில்லாத் தந்திக் கழகம் வாரத்திற்கு மும்முறை தமிழ் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பியது. ஆயின் இந்நிகழ்ச்சிகள் இசைநிகழ்ச்சிகளாயும், உரையாடல் மற்றும் கதை கூறும் நிகழ்ச்சிகளாயும் அமைந்திருந்தன.*4*

பின்னர் ஜப்பானியர் ஆட்சிக்காலத்தில் ஜப்பானிய வானொலி ஒலிபரப்புக்கழகம் கோலாலும்பூர், மலாக்கா, பினாங்கு, சிரம்பான் ஆகிய இடங்களிலிருந்து *1942*-இல் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பின. *1943*-இல் தமிழ் நாடகம் ஒலிபரப்பப்பட்டது. இக்காலகட்டத்தில் தமிழ் நாடகங்கள் பிரச்சாரத்தையே நோக்கமாகக் கொண்டிருந்தன.*5*

மலேசிய வானொலி நாடக வரலாற்றில் 'ரெடிப்யூசன்' *(Reddifusion)* நிறுவனத்தின் பங்கு மறவாது குறிப்பிடப்படவேண்டியதாகும். *1947*-இல் கோலாலும்பூர் வானொலி நிலையம் அமைக்கப்பட்டது. தரமான நிகழ்ச்சிகளை இந்நிலையம் ஒலிபரப்பத் தொடங்கியது. இந்நிறுவனம் தமிழகப் படைப்புக்களைக் கொண்டு மலேசியத் தமிழ் நாடகத்துறையை வளப்படுத்தியது.

*1945* முதல் *1956* வரை ஆங்கிலக் காலனித்துவ ஆட்சியிலும் 'ரேடியோ தியேட்டர்' என்ற பெயரில் ஏ. பீட்டர் என்பவரைத் தலைவராகக் கொண்டு வானொலியின் இந்தியப்பிரிவு அமைந்தது. இதன் தலைவராக பாலகிருஷ்ணன் செயலாற்றி நாடக வளர்ச்சி சிறப்புற அமையக் காரணமாயினார். மலேசிய வானொலியின் இந்தியப்பிரிவினை விரிவுபடுத்திப், பல கலைஞர்களை அறிமுகப்படுத்தித் தரமான நாடகங்களை ஒலிபரப்பினார். அன்னாரின் பணி என்றென்றும் நினையற்பாலது.

1973க்குப் பிறகு 'யூனிட் டிராமா' என்ற பகுதியின் கீழ் தமிழ் வானொலி நாடகப்பிரிவு இடம்பெற்றது. நாடக-மேடை, வானொலி நாடகம், இசுலாமிய நாடகம், சிரிப்புச்-சித்திரம், சிறுவர் நாடகம், தொடர்நாடகம் எனப் பல அங்கங்களாக வானொலி நாடகங்கள் ஒலியேறுகின்றன. பெரும்பாலான நாடகங்கள் சமுதாயக்கண்ணோட்டத்தின் அடிப்படையில் பிறந்தவை. இக்காலகட்டத்தில் ஒலியேறிய நாடகங்களின் எண்ணிக்கை மிக அதிகமாகும்; ஆயின் தரத்தில் மிகவும் குறைந்திருந்தன. ஒரு சில நாடகங்கள் விதிவிலக்காக அமைந்தன.

இப்பொழுது ஒலிபரப்பப்படும் வானொலி நாடகங்கள் தரத்தில் குறைவதற்குரிய காரணங்களை நாம் தெளிவாகக் கூறமுடியும்.

(1) மலேசிய வானொலி குறிப்பிட்ட சிலருக்கு மட்டுமே வாய்ப்புக்களை வழங்குகின்றது. இதனால் பல நல்ல நாடகங்கள் மண்ணில் மறைந்த மாணிக்கங்களாகப் புதைக்கப்படுகின்றன.

(2) நாடகத் தயாரிப்பாளர்களின் ஒருதலைப்பட்ச-மான போக்கு.

இவ்விரு காரணங்களும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்-தவை. வானொலி ஒரு தொடர்புச் சாதனமாக இருந்த-போதிலும் பலருடைய கருத்துக்கள் (நாடகங்கள் வழியே கூறப்படுபவை) சமுதாயத்தில் உள்ள அனைவரையும் சென்றுசேர்வதில்லை. மலேசிய வானொலியின் தமிழ்ப்பிரிவு சில 'குத்தகை எழுத்தாளர்களையே' விரும்புகின்றது போலும்! ஒரு சிலருடைய நாடகங்கள் அடிக்கடி ஒலிபரப்-பப்படும் நிலையை ஆராயும்போது தரமில்லாத இந்நாட-கங்களை ஒலிபரப்புவதன் காரணம் என்ன? என்று சிந்திக்க-வேண்டியுள்ளது. குறிப்பிட்ட நாடகப்பிரிவின் தயாரிப்-பாளரைத் தெரிந்து நட்புக்கொண்டிருந்தால்தான் நாடகங்-கள் ஒலியேறும் என்ற நிலை உருவாகியுள்ளது. நாடக ஆர்வலர்கள் பலர் நாடகத்துறையைப்பற்றிய இக்கசப்பான

உண்மையை வெளியிட்டதனை நாடகத்துறை ஆய்வின்போது அறியமுடிந்தது. இவ்வவலநிலை மாறினுல் பல புதிய எழுத்தாளர்கள் அறிமுகமாவர்; தரமான நாடகங்கள் உருவாகும்.

வானெலியில் ஒலிபரப்புக்குரிய நாடகங்களைத் தேர்வு செய்யும் குழுக்களிடம், அக்குழுவில் உறுப்பியம் பெற்றவர்கள் தரமான நாடகங்களைப் பரிந்துரைப்பதை விடுத்து, தங்களுக்கு 'வேண்டியவர்களின்' நாடகங்களையே பரிந்துரைக்கின்றனர். நல்ல, தரமான நாடகங்களை எழுதியிருப்பினும் தேர்வுக்குழுவில் இருப்பவர்களைத் தெரிந்திராத காரணத்தால் பல நல்ல நாடகங்கள் இனங்கண்டு கொள்ளப்படாமலேயே மறைகின்றன. இது வானெலிக்குப் பல புதிய எழுத்தாளர்கள் அறிமுகமாவதைத் தவிர்க்கின்றது.

மேலும் நாடகத்தயாரிப்பாளர்களில் பலர், புகழிலே போதைகொண்டு மயங்கித் தாங்களே கதை எழுதி, தாங்களே நடித்துப் பொருளும், புகழும் ஒரேவேளையில் ஈட்டுகின்றனர். இதனுல் நாடகம் பொருளீட்டும் கருவியாக, புகழீட்டும் கருவியாக மாறிவருகின்றது. மேலுஞ்சிலர் தமிழ் நாடகப்பிரிவு தாம் இல்லாவிடில் இயங்காது என்ற கற்பனையில் மிதக்கின்றனர்.

'தடியெடுத்தவர் எல்லாரும் தண்டல்களாவதில்லை' என்பது பழமொழி. இது நாடகம் எழுதுபவர்கள் நினைவில் பதித்துக் கொள்ளவேண்டிய புதுமொழி.

> "திறமையுள்ள ஒருவர் எழுதும் நாவலைவிட, அதே அளவுக்குத் திறமையுள்ள ஒருவர் எழுதும் நாடகம் சிறப்புக் குறைந்ததாய்விடும்."6

என ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ் என்ற மேனுட்டுத் திறனி கூறுவர். இக்கருத்தை நோக்கினுல் நாடகம் எழுதுவது எவ்வளவு அருமையுடைய செயல் என்பது அறியவரும். இந்நாட்டில் நாடகத்தைப் பற்றிய அடிப்படை அறிவில்லாதோர் கரங்-

களில் வானொலி நாடகங்கள் சிக்கித் தரமிழந்து வருகின்றன. நாடக எழுத்தாளராக விரும்புபவர் நாடகங்களைப் பற்றி அதிகமாகப் படிக்கவேண்டும்.

**தொலைக்காட்சி நாடகத்துறை:**

அன்றாட வாழ்வில் மிகுந்த முக்கியத்துவம் பெறும் தொலைக்காட்சி, நாடகக்கலையின் வளர்ச்சிக்கும் இன்றியமையாத சாதனமாக உலகெங்கும் இயங்குகிறது. மலேசியாவில் தொலைக்காட்சி நாடகங்கள் ஒளிபரப்பப்பட்ட காலத்தை இரு கூறுகளாகப் பகுக்கலாம்.

(1) முதல் காலகட்டம் - 1964 முதல் 1969 வரை
(2) இரண்டாவது காலகட்டம் - 1985 முதல் தொடங்குகிறது.7

1969 முதல் 1985 வரை இடைப்பட்ட பதினாறு ஆண்டுகளில் தொலைக்காட்சியில் நாடகங்களே ஒளியேறவில்லை என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். இதற்குரிய காரணங்களாக இரு வேறுபட்ட கருத்துக்கள் கூறப்படுகின்றன. 'அரசாங்கத்தின் மொழிக்கொள்கையும், இனக்கலவரமுமே இரு காரணங்களாகக் கருதப்படுகின்றன.8

முதல் காலகட்டத்தில் குறள்வழி, கிளைப்பாதை, தங்கம், உடன்பிறப்பு, சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் சேகர், கலாட்டாகந்தன் ஆகிய தொடர் நாடகங்கள் ஒளிபரப்பப்பட்டன. எஸ். ஆர். எம். பழனியப்பன் அவர்களின் படைப்பான உடன்பிறப்பு மிகச் சிறந்த நாடகமாகக் கருதப்படுகின்றது. நா.ஆ. செங்குட்டுவன், சி. கோன், பரஞ்சோதி, மெ. அறிவானந்தன் ஆகியோர் இக்காலகட்டத்தின் குறிப்பிடத்தக்க நாடக ஆசிரியர்கள் ஆவர். முதல் காலகட்டத்தில் பன்னிரண்டு நாடகங்களே ஒளியேறின.

இரண்டாம் காலகட்டத்தில் *1985* முதல் *1988* வரை பத்தொன்பது நாடகங்கள் ஒளியேறின. இக்காலகட்டத்தில் ஒளியேறிய அனைத்தும் சமூகநாடகங்களே. முதல்காலகட்டத்தில் ஒளியேறிய நாடகங்களை இலக்கிய நாடகம், துப்பறியும் நாடகம், சமூக நாடகம், புராண நாடகம் எனப் பலவாறு வகைப்படுத்தலாம். ஆயின் இரண்டாம் காலகட்டத்தில் நாடகத்தின் பல்வேறு வகைகளைக் காணமுடியவில்லை.

*1985*க்குப் பிறகு சமூகத்தின் குறைநிறைகளை எடுத்துக்காட்டும் நோக்குடனேயே சமூகநாடகங்கள் படைக்கப்பட்டன. நிறைகளைக் காட்டுவதினும் குறைகளைக் காட்டவே நாடகாசிரியர்கள் விரும்பினர். தமிழ்ச்சமுதாயத்தின் பெரும்பகுதியினர் தோட்டப்புறங்களில் வாழ்ந்து வருவதனுல் பெரும்பான்மையான சமூக நாடகங்கள் தோட்டப்புற வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன. தமிழரிடம் மண்டிக்கிடக்கும் சீர்கேடுகளை; எடுத்துக்காட்டாகக் குடியின் தீமை, போதைப்பொருளின் தீமை ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. விதவை மறுமணம், சமுதாயப் பணியில் இளைஞர் பங்கு ஆகிய சிந்தனைகளையும் இந்நாடகங்களில் காண்கிறோம்.

இரண்டாம் காலகட்ட மலேசியத் தொலைக்காட்சி நாடகங்களுள் தீயில் பிறந்த ஒளி என்னும் நாடகம் சிறந்த படைப்பாகும். தொலைக்காட்சி நாடகங்களிலும் பல குறைகள் காணப்படுகின்றன. பெரும்பாலும் நாடகக்கதைப்போக்கு ஒரே மாதிரியான போக்கையே (*stereotyped*) கொண்டுள்ளது. நாடகாசிரியரின் பார்வை வேறுபட்டதாக அமையுமானுல் - பரந்துபட்டதாக இருக்குமானுல் - நுட்பமுடையதாக விளங்குமானுல் மேற்குறிப்பிட்ட குறையைத் தவிர்க்கலாம். மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தைச் சித்திரிக்க விழையும் ஒவ்வொருவரும் அமரர் நா. பார்த்தசாரதியின் பொருளார்ந்த அறிவுரையைச் சிந்தையில் தேக்கிக் கொள்ளவேண்டும்.

"என்னைப் பொறுத்தவரை சமுதாயப்பார்வை மட்டும் ஓர் எழுத்தாளனுக்குப் போதாது. சமுதாய அறிவு, சமுதாய உணர்வு, சமுதாயத்தைப் பற்றிய விழிப்பு என இந்த மூன்றின் விளைவான சமுதாயப்பார்வையைத்தான் நாம் அடையவேண்டும்."9

இவ்வான்ற அறிவுரை எழுத்தாளனின் பொறுப்புக்கள் எவை என்பதனையும், அவற்றின் தேவையையும் அறிவுறுத்துகிறது. எனவே நாடகக்கலை பொருளீட்டும் கருவியாக மட்டுமே அமையக்கூடாது என்ற உண்மையையும் உணர்கிறோம்.

இவண் உள்ள தொலைக்காட்சி நாடகங்கள் திரைப்படச்சாயலைக் கொண்டிருக்கின்றன. பாடல்கள் இல்லாமல் நாடகம் சிறப்பாக இயங்க வாய்ப்புண்டு. அவ்வாறிருக்கக் காதற்காட்சிகளுக்குரிய பாடல்கள் தொலைக்காட்சி நாடகங்களில் வலிந்து புகுத்தப்படுகின்றன. திரைப்படங்களில் வசூலுக்காகச் சில காட்சிகளை வலிந்து புகுத்துவதைப் போன்றே நாடகக்காட்சிகளும் அமைகின்றன. இன்னின்ன காட்சிகளை மக்கள் விரும்புவர்; இன்னின்னவற்றை அவர்கள் விரும்பார் என்ற 'விதியை' உளங்கொண்டே நாடகக்காட்சிகளை இணைக்கின்றனர். கதையமைப்பிற்கேற்பக் காட்சிகள் அமையவேண்டுமே தவிர நாடகநேயர்களை மனங்கொண்டு அமையக்கூடாது.

"மக்களுக்கு உண்மையைச் சொல்லவேண்டும். மக்கள் உள்ளங்களில் அழுந்திக்கிடக்கும் உயர்ந்த பண்புகள் .மேலோங்கி வரும்படியாக ஊக்குவிக்கவேண்டும்."10

எனும் கருத்துக்கியையத் தொலைக்காட்சி நாடகக்காட்சிகள் அமைக்கப்படுமானால் அவை தரத்தில் உயரும்.

தொலைக்காட்சி நாடகத்திற்குரிய நடிகர்களைத் தேர்வு செய்யும்போது நல்ல தோற்றம், நடிப்புத்திறமை, உச்சரிப்-

புத்திறன், குரல்வளம் ஆகியவற்றை அடிப்படையாகக்கொண்டு தேர்வு செய்யவேண்டும். பாத்திரங்களை மனத்தில்கொண்டு நடிகர்களைத் தேர்வுசெய்தால் நாடகம் சிறப்படையும். இவ்வாறில்லாவிடில் நல்ல கதையமைப்பு இருந்தும் நடிப்புத்திறமை இல்லாத நடிகர்களால் நாடகம் வெற்றி பெறுவதில்லை. நாடக ஆசிரியர்கள் சமுதாயத்துக்குச் சொல்ல விழையும் கருத்துக்களைப் பாத்திரங்களே கூறுகின்றன. ஆகவே ஆங்கிலத்தில் "*characters are the mouthpieces of an author*" என்ற கூற்றும் எழுந்தது போலும்! நாடகத்தின் வெற்றி நடிகர்களைப் பொறுத்தே அமைவதால் நடிகர்களைத் தேர்வுசெய்யும்போது கவனமாகச் செயல்படவேண்டியதன் அவசியம் புலப்படும்.

நம் நாட்டுத் தொலைக்காட்சி நாடகங்களில் ஒரு சில நடிகர்களே திறம்பட நடிக்கின்றனர். பைரோஜிநாராயணன், மனுராமலிங்கம், மணிவாசன், ரெ. சண்முகம் ஆகியோரிடம் உயிரோட்டமான நடிப்பைக் காண்கிறோம். இவர்களைப் போன்று இன்னுஞ் சிலரிடம் நடிப்பாற்றல் வெளிப்படக் காண்கிறோம். ஆயின் பெரும்பாலான நடிகர்கள் வசனங்களை இயந்திரகதியில் பேசுகின்றனரே தவிர இடம், காலம், பொருளுக்கு ஏற்ப உணர்ச்சியோடு பேசுவதில்லை. இக்குறை நீங்கின் நாடகங்கள் சிறக்க வாய்ப்புண்டு.

நாடக நூல்கள்:

நாடகம் சாதனங்களைப் பொறுத்து வகைப்படுத்தப்படுவதுடனன்றி நடிப்பதற்குரிய நாடகம், படிப்பதற்குரிய நாடகம், படிப்பதற்கும் நடிப்பதற்கும் உரிய நாடகம் என்றும் வகைப்படுத்தப்படும். இவ்வகையான நாடகங்களை எழுதுவதற்குத் தனித்தனித் தகுதிகள் இன்றியமையாததாகின்றன. மேடைநாடகப்பயிற்சி அல்லது மேடைநாடக அனுபவம் கொண்டோரால் நடிப்பதற்குரிய நாடகங்களும்; இலக்கியப்பயிற்சியுடையோரால் படிப்பதற்குரிய நாடகங்களும் உருவாக்கப்படும். ஆயின் இவ்விருவகையான அனுப-

வங்களை உடையோர் படிப்பதற்கும் நடிப்பதற்கும் உரிய நாடகங்களை எழுதும்போது அவை கலைநயத்துடன் சிறப்புற அமைகின்றன.

நாடக நூல்களைப் படிப்போர் அவற்றைப் படித்துப் புரிந்துகொள்வது, நடிப்பதற்குரிய நாடகங்களோடு ஒப்பிடும்போது சற்று கடினமே. நடிப்பதற்குரிய நாடகங்களைக் கட்புலனும், செவிப்புலனும் உடையோர் நன்கு துய்க்கமுடியும். ஆயின் நாடகம் படிப்பவர்களுக்குக் கற்பனையாற்றல் வேண்டும். ஏனெனில் நாடகம் படிக்கும்போது தம்முடைய மனத்திரையில் நாடகக்காட்சிகளைக் கற்பனையால் நிறுத்தவேண்டும். இவ்வாற்றல் அனைவருக்கும் எளிவந்ததன்று. ஆகையால் படிப்பதற்குரிய நாடகங்களுக்கு வேண்டப்படும் முயற்சியை ஆல்டன் என்னும் திறனி அழகுற விளக்குவர்.

"கற்பனைத்துறையில் ஆழ்ந்த பயிற்சி உடையவருக்கே - படித்துப் படித்து நாடகமேடையைக் கற்பனை செய்யும் ஆற்றல் கைவரப்பெற்றோருக்கே நாடகம் படிப்பது எளிதாகும். எஞ்சியோருக்கு அது துன்பந்தரும் - உழைப்பைச் சோதிக்கும் துறையாக உள்ளது."11

படிப்பதற்குரிய நாடகங்களின் அருமைப்பாடு கருதியே மலையகத்தில் நாடக நூல்கள் அதிகமாக வெளிவந்தில. நாடக நூல்கள் மிகமிகக் குறைந்த அளவில் வெளிவந்துள்ளன. இவற்றைப் பற்றிச் சமூகக்கலைமாமணி சா.ஆ. அன்பானந்தன் கீழ்க்கண்டவாறு கருத்துரைப்பர்.

"வாசி. பாண்டியனின் உரிமைப்போர்; ஈப்போ மணிமாறனின் இலட்சியச்சுடர்; மலாக்கா மா.கு. மாணிக்கத்தின் கடமை வீரன்; பைரோஜி நாராயணனின் மாலதி; மு. பகருதீனின் இரத்தப்பேய் ஆகியவையே நானறிந்த நாடக நூல்களாகும். இவற்றுள் உரிமைப்போர் நமக்குத் தொடர்பற்ற பிரச்னையில் எழுதப்பட்-

டுள்ளது. இலட்சியச்சுடர் ஓரளவு தரமான நாடகமே. கடமை வீரனும் தன் கடமையில் ஓரளவு நிறைந்திருக்கிறுன். எனினும் இயல்பான உரையாடல் முறைகள் ஆளுக்கு ஆள் மாறுபட்டுத் தொனிப்பது பழைய முறையாகும். எனினும் அவையே நாடக இலக்கியமாக நமக்குக் கிடைத்திருக்கின்றன."12

சா. ஆ. அன்பானந்தனின் பார்வைக்குத் தப்பிய சில நாடக நூல்களும் உள்ளன என்பதை அவருடைய நாடக நூலான திருப்பம் என்ற நூலின் முன்னுரை வழியே அறிகிறோம்.

"நமது நாட்டைப் பொறுத்தவரையில் நாடக நூல்கள் மிகமிகக் குறைவாகவே (ஏறத்தாழ ஆறேழு என்கிற அளவில்தான்) வெளியிடப் பெற்றுள்ளன."13

மலேயகத்தில் அமரர் ஆழி அருள்தாசனின் மேடைநாடகங்கள் மலேசிய மேடைநாடகத்துறையில் பல புதிய சாதனைகளைப் படைத்தவை. ஆயின் அச்சாதனையாளரின் நாடகங்கள் நூலுருப்பெறுமையால் காலப்போக்கில் மறக்கப்பட்டு மறைந்துபோகும். இப்படிப் பல தரமான நாடகங்களை இழக்காமலிருக்க அவற்றை நூலுருவில் வாழவைக்கவேண்டும். நாடகக் குழுக்களும், பொருள் வசதியுடையோரும், நூல் வெளியீட்டுத் துறையில் உள்ளோரும் இம்முயற்சியில் ஈடுபட்டால் தரமான நாடக நூல்கள் பெருகும். மலேயகத்தில் வெளிவந்துள்ள நாடகநூல்களைக் கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்தலாம்.

1. காந்திமதி அல்லது கலப்புமணம் - ஆர். இராமநாதன் (1934)
2. பூமாலை - க.சேதுராமன் (1956)
3. மாலதி - பைரோஜி நாராயணன் (1967)
4. கடமை வீரன் - மா. கு. மாணிக்கம் (1968)
5. திருப்பம் - சா. ஆ. அன்பானந்தன் (1979)

6. மன(ண)க் கோலம் - நா. ஆ. செங்குட்டுவன் (1985)
7. வீரத்தின் ஈரம் - நா. ஆ. செங்குட்டுவன் (1985)
8. காவியக்கண்கள் - நா. ஆ. செங்குட்டுவன் (1990)
9. கட்டை விரல் (கவிதை நாடகம்) - கா. பெருமாள் (1979)
*10. பாலசுந்தரம் அல்லது ஜன்மார்க்க ஜெயம் - புலொலி க. சுப்பிரமணியம் (1918)

இருநூறு ஆண்டுகட்கும் மேலாக இந்நாட்டில் வாழ்ந்த தமிழர்களிடையே ஒன்பது நாடக நூல்களே வெளிவந்துள்ளன. இந்நூல்களுள் பாலசுந்தரம் அல்லது ஜன்மார்க்க ஜெயம் என்ற நூலை அமரர் தண்டாயுதம் நாவல் என்று வகைப்படுத்தித் திறனாய்வு செய்துள்ளார். ஆயின் இந்நூல் பல காட்சிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது; பாத்திர உரையாடல் மூலமாகக் கதை நடத்திச் செல்லப்படுகிறது. காட்சியமைப்பு, உரையாடல், பாத்திரங்கள் என்ற இந்த மூன்றையும் கொண்டு அதனை நாடகம் என்று கூறுவாருமுளர். ஆயின் நாடகத்திற்குரிய பண்புகள் இந்நூலில் முற்றிலும் பொருந்தியிருக்கவில்லை. ஆகலின் அதை நாடகம் என வகைப்படுத்துவது பொருந்தாது.

**கவிதை நாடகங்கள்:**

கவிதைத்துறையில் பல சாதனைகள் புரிந்தவர் கவிஞர் கா. பெருமாள். இவர் பல கவிதை நாடகங்களை வானொலியில் படைத்துள்ளார். இவருடைய கவிதை நாடகங்கள் அனைத்தும் இலக்கிய நாடகங்களாகக் கருதத்தக்கன; தமிழகக்களங்களையும், தமிழிலக்கியக் கருப்பொருள்களையும் தாங்கியவை. செஞ்சோற்றுக்கடன், நந்திவர்மன், கட்டை விரல், விக்கிரமாதித்தன், பரமேஸ்வரன், பில்கணன், மனுநீதி, இரணியன், குகன், பகை வென்ற பாசம், விடுதலை, கலாசாலை, உடன்பிறப்பு ஆகியவை கவிஞர் பெருமாளின் கைவண்ணங்கள். இவற்றுள் ஏகலைவன் வரலாற்றைக் கூறும் 'கட்டை விரல்' மட்டும் நூலுருப் பெற்றுள்ளது.

கவிஞர் தை. சே. பெ. பொன்னம்பலம் (சுங்கை சிப்புட்) பல கவிதை நாடகங்களைப் படைத்துள்ளார். ப.மு. அன்வர் 'தீன்கொடி' என்னும் இசுலாமியக் கவிதை நாடகம் எழுதியுள்ளார்.

கவிதை நாடகத்துறையில் கவிஞர் ஐ. உலகநாதனின் பணி அளப்பரியது. பல நாடகங்களை அவர் படைத்திருப்பினும் தமயந்தி என்ற நாடகம் மட்டும் நூலுருப்பெற்றது.

நாடகத்துறைக்குச் சில பரிந்துரைகள்:-

*(1)* நாடகக்கலைஞர்கள், தயாரிப்பாளர்கள், நாடகாசிரியர்கள், வாசகர்கள் ஆகியோருடைய ஒத்துழைப்பு மிகவும் இன்றியமையாதது.

*(2)* நாடகங்கள் நூலுருப் பெறவேண்டும்.

*(3)* திறனாய்வுகள் பெருகவேண்டும்.

*(4)* பத்திரிகைகளில் வெளிவரும் விமரிசனங்கள் ஒருதலைப்பட்சமாக அமையக்கூடாது.

*(5)* நாடக வளர்ச்சிக்கான பரிந்துரைகள், புதிய நுட்பங்கள் ஆகியவற்றைக் கருத்தரங்குகளின் வழி பெறவேண்டும்; நாடகக்கருத்தரங்குகள் 'உண்மையான' நோக்குடன் நடத்தப்படவேண்டும்.

*(6)* நாடகத் தயாரிப்பாளர்கள், நடிகர்கள் ஆகியோர் பயிற்சி பெறவும், நாடகத் தொழில் நுட்பங்களைக் கற்றறியவும் 'ஷா ஆலம்' என்னும் இடத்தில் பயிற்சிமையம் *(FINAS)* 'பினாஸ்' என்ற பெயரில் இயங்கி வருகிறது. இது மலாய்மொழி நாடகங்களுக்கென அமைக்கப்பட்டது. இதனைப் போன்றதொரு மையம் தமிழ் நாடகங்களுக்கென

உருவாகவேண்டும். தமிழகத்தில் செயல்பட்ட 'சேவா ஸ்டேஜ் நாடகக் கல்வி நிலையம்' போன்றதொரு அமைப்பு இந்நாட்டிற்கு இன்றியமையாததாகும். "*1988*-ஆம் ஆண்டு நாடக விழாவின்போது நாடகக் கல்லூரி இந்நாட்டில் அமையவிருப்பதாக"*14* டத்தோஸ்ரீ ச.சாமிவேலு கூறினர். இக்கல்லூரி செயல்வடிவம் பெறுமாயின் நல்ல நாடகங்கள் பெருகும். நல்ல கலைஞர்கள் பல்குவர்.

*(7)* தமிழ்நாட்டைப் போன்று ஒவ்வோராண்டும் நாடக விழா; நாடகப் போட்டிகள் நடைபெறவேண்டும். போட்டி மனப்பான்மையினுல் நல்ல நாடகங்களை உருவாக்கமுடியும். இப்போட்டி மனப்பான்மையில் பொறாமைக்கு இடங்கொடுக்கக்கூடாது.

*(8)* அனைத்திற்கும் மேலாகத் தமிழ்மக்களிடம் மொழியுணர்வு இருக்கவேண்டும். மொழியுணர்வும் மொழிப்பற்றும் இல்லாதவர்கள் மத்தியில் நாடகங்களை நடத்துவது விழலுக்கு நீர்பாய்ச்சும் முயற்சியே. இந்த வீண்முயற்சி பாரதி பாடியது போன்று,

"கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கிடில்
கைகொட்டி நகையாரோ"*15*

என்றவாறு நகைப்பிற்கு இடமாகும்.

## மேற்கோள் விளக்கம்

1. தொல்காப்பியர், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், நூற்பா *27*.
   "கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
   உணர்வுடை மாந்தர்க்கு அல்லது தெரியின்
   நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"
2. மா. இராமையா, மலேசியத் தமிழிலக்கிய வரலாறு, ப-*9*.
3. அ.மணிசேகரன், மலேசியாவில் மேடை நாடகங்கள், ப-*20*.
4. *Buku Cenderamata, Upacara perasmian Wisma Radio, Angkasapuri, Kuala Lumpur, 11 Mac 1973, m.s. 10;* இம்மேற்கோள் ச. தியாகராஜா என்ற மாணவரின் 'மலேசியாவில் வானொலி நாடகங்கள்' என்ற ஆய்வுக்கட்டுரையில் *(1988-89)* கையாளப்பட்டுள்ளது. *(அச்சேறாதது)*
5. மேலது
6. *I.A. Richards, Principles of Literary Criticism, P.231*
   *"Even a good dramatist's work will tend to be coarser than that of a novelist of equal ability. He has to make his effects more quickly and in a more obvious way"*
7. பெ. சுப்பிரமணியன், மலேசியாவில் தொலைக்காட்சி நாடகங்கள், *(அச்சேறாதது)* ஆய்வுக்கட்டுரை *(1988-89)*, ப-*2*
8. மேலது
9. அகிலன் & ராஜதுரை, வளரும் தமிழ் இலக்கியம், ப-*29*.
10. மேலது, ப-*39*.

11. *R.M. Alden, An Introduction to poetry, p.79:*
*"Since the imagination must supply the action not described in the poem itself, and since the imagination is a faculty made effective only by exercise, the reading of a drama is for the bulk of humanity a somewhat exhausting task."*
12. *சா.ஆ. அன்பானந்தன், நான் யார்?, ப-50.*
13. *சா.ஆ. அன்பானந்தன், திருப்பம், முன்னுரை, ப-7.*
14. *டத்தோஸ்ரீ ச. சாமிவேலு, சிறப்புரை, நாடகவிழா, சிவிக் சென்டர், பெட்டாலிங் ஜெயா, ஏப்ரல் 1988.*
15. *சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், ப-46.*

# சிற்றிலக்கியங்கள்

உணர்ச்சிக்குப் புலவர் தரும் கலைவடிவமே இலக்கியமாக மலர்கிறது. இவ்விலக்கியத்தை நேர் இலக்கியம் எனவும் சார்பு இலக்கியம் எனவும் வகைப்படுத்துவர் அறிஞர் மு.வரதராசன்.1 இவ்விருவகையினுள்ளும் நேரிலக்கியம் 'கலை கலைக்காக' என்னும் கோட்பாடுடையது. ஆயின் சார்பு இலக்கியம் பல்வேறு நோக்கங்களைச் சார்ந்து பிறப்பினும் இலக்கியமாக வாழும் தகுதியைக் காலப்போக்கில் பெறும். இவ்வாறு சார்பிலக்கியங்களாகக் கிளைத்தவையே சிற்றிலக்கியங்கள் என்னும் சீரிய இலக்கியங்கள்.

சிற்றிலக்கியங்கள் அளவில் சிறியவை; ஆகவே அவை சீர்மையிலும் சிறியவை என்னும் தவறான கருத்து பெரும்பான்மையான மலேசியத் தமிழர்களிடம் நிலவுகிறது. இச்சிறுமையான எண்ணம் இலக்கியப் படைப்பாளர்களிடம் இருந்ததில்லை. ஆகவே மலேசியாவிலும் சிற்றிலக்கியங்கள் பல தோன்றியுள்ளன.

> "குறிப்பிட்ட அளவுள்ள பொருள்களை எடைபோட்டுத் தகரப்பெட்டிகளில் அடைத்து ஒழுங்குபடுத்துவது போல், உணர்ச்சியை இன்ன செய்யுளில், இத்தனை செய்யுளில் என்று அடைத்து ஒருங்குபடுத்தல் முடியாது"2

என்னும் இலக்கியச்சிந்தனையோடு சிற்றிலக்கியங்களை ஆழ்ந்துநோக்கினால் அவை புலவர் பெருமக்களின் வேறுபட்ட உணர்ச்சி வெளிப்பாடுகள் என்பது தெரியவரும். கம்பர், ஒட்டக்கூத்தர், குமரகுருபரர் போன்ற பெரும்புலவர்கள் பல சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ளதையும், தமிழிலக்கிய வரலாற்றில் சிற்றிலக்கியக்காலம் எனத் தனியே வரையறுக்கத்தக்க அளவுக்கு இவை பெருகியுள்ளதையும் நோக்க இச்சிற்றிலக்கியங்கள் காலத்திற்கேற்ற வடிவங்களாகவும், புலவர்களின் புலமை வெளிப்பாடாகவும் திகழும் சிறப்புடையவை என அறுதியிட்டுக் கூறலாம்.

தமிழ்க்கவிதை மரபுகளில் ஈடுபாடு கொண்ட மலேசியத் தமிழ்க் கவிஞர்கள் சிற்றிலக்கியங்களின் சிறப்பை அறிந்து, உணர்ந்து போற்றியுள்ளனர். இவர்களின் படைப்புக்கள் தமிழ் இலக்கிய மரபையும், தமிழர் வாழ்வு மரபையும் செழிக்கச் செய்துள்ளன. இதனை அறிஞர் ந. வீ. செயராமன்,

> "மலேசியத் தமிழுலகில் 58 புலவர்கள் 23 இலக்கிய வகைகளில் 91 நூல்களைப் படைத்துள்ளனர். ஆம்! நா. வ. அரங்கசாமிதாசன் முதல் ஹாஜி ஷவ்கத் அலி ஈருக உள்ள 58 புலவர்கள் 23 இலக்கிய வகைகளில், ஆறுமுகப் பதிகம் முதலாகச் சாமிவேலர் காவியம் ஈருக உள்ள 91 இலக்கிய நூல்களைப் படைத்துள்ளனர்"3

தமிழுணர்வு நசித்துக்கொண்டுவரும் இன்றைய மலேயகத்தில் தமிழ்க்கவிதைமரபு என்னும் 'ராஜபாட்டையில்' கவிதைத்தேரேறி உலா வரும் நல்ல கவிஞர்களும் உள்ளனர். இவர்கள் சிற்றிலக்கிய நூல்களை வெளியிட்டு வருவது தமிழுணர்வும், தமிழ்ப்பற்றும் மிக்கோருக்கு இனிய செய்தியாம்.

சில உயர்கல்வி நிலையங்களில் பழங்கால இலக்கியங்களுக்கும், இக்கால இலக்கிய வகைகளான நாவல், சிறுகதைகளுக்கும் அதிகமுக்கியத்துவம் அளிக்கின்றனர். ஆயின் இடைக்கால இலக்கியங்களான சிற்றிலக்கியங்களைப் பாடத்திட்டத்தில் இணைப்பதில்லை. பழங்காலக் கவிதை மரபுகள், இடைக்காலக் கவிதை மரபுகள், இக்காலக் கவிதை மரபுகள் என்ற அடிப்படையில் பாடத்திட்டம் அமையுமாயின் தமிழ்க்கவிதை மரபுகளைக் கற்கும் மாணவர்கள் முழுமையான அறிவைப் பெறுவர். கல்விக்கூடங்களில் சிற்றிலக்கியங்களைச் சிறுமைபடைத்தவை எனக் கருதினுலுங்கூடக் கவிஞர்கள் அங்ஙன் கருதுவதில்லை. தமிழ்க்கவிதை மரபுகளை வாழவைக்கும் முயற்சியாகவே அவர்கள் இம்மண்ணில் சிற்றிலக்கியங்களைப் படைத்து வருகின்றனர்.

மலையக மண்ணில் தோன்றிய சிற்றிலக்கியங்களைப் பலவாறு வகைப்படுத்தலாம். பிள்ளைத்தமிழ், மாலை, அந்தாதி, அம்மானை, பதிகம் போன்ற வகைகளும் சிற்றிலக்கியக்கூறுகள் அடங்கிய கவிதைகளும் இவண் ஓரளவு தோன்றியுள்ளன. மேலும் இந்நாட்டில் தோன்றிய சிற்றிலக்கியங்களைப் பாடுபொருள் அடிப்படையிலும், பாடிய புலவர் என்ற அடிப்படையிலும் வகைப்படுத்த-வியலும். மலேசியப் பாடுபொருளை அடிப்படையாய்க் கொண்டு பாடப்பட்ட சிற்றிலக்கியம் என்ற வகைப்பாட்-டினுள் பத்துமலையான் பிள்ளைத்தமிழ், கோலாலும்பூர் மகா மாரியம்மன் பிள்ளைத்தமிழ் ஆகியவற்றைச் சான்றாகக் கூற-லாம். சில சிற்றிலக்கிய வகைகளுள் கருப்பொருள் மலேசி-யாவைப் பற்றியதாக அமையும்; ஆயின் பாடிய புலவர் தமிழகத்தைச் சேர்ந்தவராயிருப்பர். கோலாலும்பூர் மகா-மாரியம்மன் பிள்ளைத்தமிழ் இத்தகையதே.

மற்றுஞ்சில சிற்றிலக்கிய வகைகளுள் கருப்பொருள் தமிழகத்திற்கு உரியதாக இருக்கும். ஆயின் பாடிய புலவர் மலேசியக்கவிஞராக இருப்பார். இவ்வகைப் பாட்டினுள் மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், பாவாணர் பிள்ளைத்தமிழ் ஆகியவற்றை அடக்கலாம்.

இற்றைநாள்வரை இம்மலையக மண்ணில் 5 பிள்ளைத்-தமிழ் நூல்களும், 2 அந்தாதி நூல்களும், 3 பதிகங்களும், 2 மாலை நூல்களும் தோன்றியுள்ளன. இதனைக் காட்டும் பட்-டியலை இக்கட்டுரையின் இறுதியில் காண்க.

## தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ்:

இந்நூல் வெளியான ஆண்டு குறிப்பிடப்படவில்லை. இந்நூலைப் பற்றிய சில செய்திகளை இந்நூலின்கண் அமைந்-துள்ள சிறப்புப்பாயிரங்கள் தெரிவிக்கின்றன. இந்நூலின் ஆசிரியர் சிவானந்தன் என்பவர். மிகப்புகழ்பெற்ற மருத்து-

வர் (டாக்டர்) தம்பிப்பிள்ளை என்பவரின் வேண்டுகோட்-கிணங்க இந்நூல் பாடப்பட்டது. இந்நூலாசிரியர் மலாக்கா அருணாசலஞ்செட்டியாரின் மாணவர். நூலாசிரியர் பற்றி,

"முத்தமிழ் நாற்கவி முறையெலா முணர்ந்த
வுத்தம னருணாசலப் பெரியோன் பாற்
கற்றதோர் மாணவன்"

"செற்றமில் நண்பன் சிவானந்த னென்றுங்
கற்றவர் போற்றுங் கவிஞர் புலவனே"

எனச் சிறப்புப்பாயிர வரிகள் கூறுகின்றன.

நூல் எழுதுவதற்குத் தூண்டுகோலாய் இருந்தவர் டாக்டர் தம்பிப்பிள்ளை என்பதனை,

"கனமிகு சீர் டாக்டர்தம்பிப் பிள்ளைகவி
னுறக்கேட்பக்"

எனக் குறிப்பிடுகின்றது சிறப்புப்பாயிரம்.

இந்நூல் உருவாவதற்குப் பல்லாற்றானும் ஆக்கமும் ஊக்கமும் நல்கியவர் மலாக்கா உ. அரு. அருணாசலஞ்-செட்டியார். இவர் 'தமிழறம் பேணுந் தகைமையாளர்' எனும் விருது பெற்றவர். 'தமிழ்க்கொடி' என்ற இருவார இதழை வெளியிட்டவர். மலாயா தமிழ்ப்பண்ணை என்ற அமைப்பினை உருவாக்கி இலக்கியப்பணி புரிந்தவர். மலாயாவின் தமிழ் இலக்கிய வரலாற்றில் அன்னார் மறவாது குறிப்பிடப்படவேண்டியவர். இப்பெரியார், இப்பிள்ளைத்-தமிழின் செம்மைப் பதிப்பு உருவாகக் காரணமாய் அமைந்-தவர். இதனை நூலாசிரியர் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார்.

"எமது பாக்களிற் பிள்ளைத்தமிழைத் தனியாக எமக்கனுப்பி அதை முன்னே அச்சிடும்படி-யாகவும் அவற்றை அச்சிடும்போது மற்றைய இருநூறு பாக்களுடன், கூடியவிரைவிற் சிறப்-புப்பாயிரம் எழுதி அனுப்புவதாக எழுதிய-துடன் தமிழறம் பேணுந் தகைமையாளர் என்பது புலப்பட அச்சுச் சிலவிற் தமது பங்கு இதுவெனக் குறிப்பிட்டு $10/- அனுப்பிவைத்-தார்கள்."4

மலாக்கா அருணாசலஞ்செட்டியார் 1901 முதல் 1950 வரை வாழ்ந்தவர். தமிழகத்தில் பிறந்த அவர் 1917 - 18 ஆண்டு-களில் மலையகம் வந்தார். எனவே இந்நூல் 1917 - 18களுக்-குப் பிறகு உருவானது எனக் கூறலாம்.

பழந்தமிழ்ப்புலவர்கள் தங்களுடைய படைப்புக்களைப் பற்றிய தகவல்களைத் தாமே கூறுவதில் விருப்பமில்லாத-வர்கள். இது புலவர்பெருமக்களின் 'தன்னடக்கத்தை'க் காட்டுவதாயினும் வரலாற்றில் சில இடர்ப்பாடுகளை உரு-வாக்கியது. அதனைப் போன்றே இப்பிள்ளைத்தமிழ் ஆசிரிய-ரும் நூல் வெளியிடப்பட்ட ஆண்டைக் குறித்தாரிலர்.

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையின் இலக்கணங்கள் சிறப்புறப் பொருந்துமாறு பாடப்பட்டது இப்பிள்ளைத்-தமிழ். பிள்ளைத்தமிழ் பாடும் புலவர்கள் காப்புப்பருவத்தில் தம்முடைய விருப்பிற்கிணங்கக் கடவுளரை வேண்டிப் பாடுவர். ஆதலின் காப்புப்பருவ மரபு பிள்ளைத்தமிழுக்குப் பிள்ளைத்தமிழ் மாறுபடும். பன்னிருபாட்டியல் என்னும் நூல் காப்புப்பருவத்தில் இடம்பெறத்தக்க கடவுளர் இன்-னின்னர் எனத் தொகுத்துரைக்கும். இந்நூற்படி பதினறு கடவுளரையும் பத்துப்பாடல்களுக்குள் பாடுவது அருமை-யுடைய செயலாகும். ஆதலின் இவருள் எவரேனும் பதின்-மரைப் பாடுவது என்பது புலவர்களின் நடைமுறை மரபாக அமைந்துள்ளது. சில புலவர்கள் சிறுதெய்வங்களாகக் கருதப்படுபவற்றையும் காப்புவேண்டிப் பாடுவதுண்டு.

"திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பரிதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரன் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே"5

எனவரும் பன்னிருபாட்டியல் நூற்பாவுக்கிணங்க இந்நூலின் காப்புப்பருவம் அமைகிறது.

இந்நூலில் ஆசிரியர் பல புராணக்கருத்துக்களமையப் பாடியுள்ளார். தெய்வங்களைப் பாடும் நூல்களில் இப்புராணக்கருத்துக்கள் இடம்பெறுவது பொதுப்பண்பாகும். இந்நூலில் பல சிறப்பியல்புகள் அமையக் காண்கிறோம்.

**தமிழ்ப்பற்று:**

முருகன் தமிழ்க்கடவுள். தமிழர்களின் தெய்வம். இதனைக் கீழ்க்கண்ட பகுதிகள் விளக்கும்.

". . . . . . . தமிழோது
கொற்றனன் நாவலர் கூடிநின் றேதொழுங்
குகனே" (தாலப்பருவம் - 3)

"கற்றவர் கைதொழு தேத்திட வேவளர்" (மேலது - 4)

"பொருப்பிற் பிறந்த விளந் தென்றல்
போதக்குறுமா முனியருளும்
புனிதத் தமிழைப் புகழ்ந் தெடுத்துப்
போதின்நறவைக் கனிரசத்தைக்
கரும்பின் சாற்றைக் கலந் துலகிற்
கலையார் புலவரா னோர்க்குக்"
(முத்தப்பருவம் - 1)

"பொதியம் பிறங்கப் பிறந்த தமிழ்ப்
புலவாவானிற் புலவர்நனி
பொய்யா வாழ்விற் பொலிய வருள்
செய்யும் பெருமா னேமலர்மேல்"

(மேலது - 3)

"பகருமுத் தமிழறிஞர் பார்தனிற் போற்றுபொற்
பாதனே வருகவருக"

(வருகைப்பருவம் - 1)

இப்பகுதிகள் ஆசிரியர் கொண்ட தமிழ்ப்பற்றுக்குச் சான்றாகும்.

**தனவணிகர் (நகரத்தார்) சிறப்பு:**

நகரத்தார் ஆழ்ந்த சைவப்பற்று உடையார். ஆயினும் பிறசமயக் காழ்ப்பிலர். தொழிலுக்காக வெவ்வேறு நாடுகளுக்குச் சென்று வாழ்ந்த இச்சமூகத்தினர் அறப்பணியையும் சமயப்பணியையும் இரு கண்ணெனப் போற்றினர். கல்வி நிறுவனங்கள், அற அமைப்புக்கள் ஆகியவை இவர்களின் அறப்பணிக்கும் அறச்சிந்தைக்கும் சான்றாய் அமைவன. அவைபோன்று இவர்கள் அமைத்த கோயில்கள், மற்றும் அக்கோயில்களை நிர்வகிக்கும் திறம் ஆகியவை இவர்களின் சமயப்பற்றைத் தெள்ளிதின் புலப்படுத்தும். நகரத்தார் அமைத்த கோயில்கள் இம்மலையகத்தில் பல உள்ளன. அவற்றுள் தமிழ்த்தெய்வமாம் முருகனுக்கு அமைத்த கோயில்களே மிகுதி. 'கோயிலில்லா ஊரில் குடியிருக்கவேண்டாம்' என்னும் கொள்கை கொண்டவர்கள் நகரத்தார் பெருமக்கள். ஆகவே தாம் வாழுமிடங்களில் ஆலயங்களை எழுப்பி ஆரவாரமின்றிச் சமயத்திற்கும் தமிழுக்கும் அரும்பணியாற்றினர்.

பினாங்கில் உள்ள தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி கோவில் நகரத்தார்களால் அமைக்கப்பட்டது. இதனைப் பலவிடங்களில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

"மாட்சிமிகு தனவணிகர் போற்றுதண் ணீர்மலையில்
மருவுபர குருநாதனே"
(வருகைப்பருவம் - 5)

"நிதிமேவு பெருவணிகர் நித்தமுந் தொழுதேத்து
நீதமுருகேச வருக" (மேலது - 9)

"தாரினிற் றிகழ்கடம் பாவரிய தனவணிகர்
தஞ்சமென் றினிதுபோற்றுந்"
(சிறுபறைப் பருவம் - 7)

"வெரியனைய விடவரிக ளுமிழ்மணிக ளெழில்விளக்
கேந்தியிரு ளோட்டஞான்று
மெங்கணுந் திகழ்தூய தனவணிக ரேத்தவள
ரெந்தையறு முகநாயகா"
(சப்பாணிப்பருவம் - 5)

மேற்கண்ட பாடற்பகுதிகளால் நகரத்தார் குலச்சிறப்பும், அக்குலத்தினர் ஏற்றிப்போற்றும் முருகனின் சிறப்பும் அறியவரும்.

நூலாசிரியர் சிவானந்தர் சைவர். சைவசமயக் கருத்துக்களையும், சைவசித்தாந்தக் கருத்துக்களையும் ஆசிரியர் தக்கவாறு விளக்கியுள்ளார். இறையியல்பு, அடியவர் இயல்பு ஆகிய சமய உண்மைகளை அழகுற ஆசிரியர் கூறியுள்ளார். சிற்றிற்பருவத்தின் மூன்றும் பாடல் சித்தாந்த உண்மைகளைக் கூறுவதாக அமைந்துள்ளது.

"பவவடி வாகிய படிறர்களு ளமதிற்
படியா தொருவானிற்
பல்மற்றிடு சுரர் நிலைபெற் றிடவரு
பதியே யறமோது
தவவடிவாகிய முனிவர்த மகமது
தங்கிய குருநாதா

தனியற் புதநட மிடுககனே திருத்
 தண்ணீர்மலை வாசா
நவவடி வாகிய நாரண னும்நல
 மேவுமுருத் திரனும்
நான்முகன் தூயமகேச னுடன்நனி
 நாடுதற் கரியசதா
சிவவடி வாகிய சண்முக மாமணி
 சிற்றில் சிதைத்தருளே"

(சிற்றிற்பருவம் - 3)

இப்பாடலில் "நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன்"6 என்னும் சித்தாந்த உண்மை வெளிப்படுகின்றது.

**புலமைத்திறம்:**

இப்பிள்ளைத்தமிழ் நூலாசிரியரின் புலமைக்குத் தக்க சான்ருக இலங்குகிறது. இயற்கை அன்னையின் எழில்மிகு நடனத்தை மலையகத்தில் காணலாம். இயற்கைக்காட்சிகளில் ஈடுபட்டு, அவற்றிலே தோய்ந்து பாடுவது புலவரியல்பு. இதற்குத்தக பினுங்கு நகரின் இயற்கைக்காட்சியை - எழிற்காட்சியை அழகுற விளக்குவர் புலவர். சான்று வருமாறு:

"குருகுக் குழாங்கள் நனி கூடக்
 குயில் முன்கூவிச் சுதிமீட்ட
கூடியளி நின்றிசை பாடக்
 குலமாமயில்கள் நடனமிட
வருகே யமர்ந்து கவிதாளம்
 போடுமருந் தண்ணீர்மலை"

(முத்தப்பருவம் - 9)

இயற்கையில் இசையரங்கு நடப்பதை இப்பாடலில் புலவர் பாடியுள்ளார். இக்கற்பனை பிற இலக்கியங்களில் காணப்படும் ஒன்ருக இருப்பினும் கவிஞரின் வருணனைத் திறத்துக்கும், தண்ணீர்மலையின் வளத்துக்கும் சிறந்த காட்டாகத் திகழ்கிறது.

> "கவிஞன் தன் கற்பனைக்கும் உணர்ச்சிக்கும் ஏற்றவாறு பொருள்களைப் புனைந்து கூறுவது இயற்கை. ஆயினும் பொருள்களின் உண்மைத்-தன்மையே திரியும் அளவிற்குப் புனைவது பொருந்தாது. அவ்வாறு அவற்றை மாற்றியும் திரித்தும் கூறுவது சிறந்த கற்பனையாகாது."7

என்பர் அட்சன். கவிஞர் சிவானந்தனின் கற்பனைவளத்துக்-குக் கீழ்க்கண்ட பாடலொன்றே போதுமான சான்றாகும்.

"குருமனைவி தன்னைமுன் கூடிமால் தனையீய்ந்த
கொடியனுன் செய்கைநோக்கிக்
கொங்குலவு கஞ்சமுன் வரவுகண் டாலுமுயர்
குளிர்முகை விரிப்பதில்லை"

*(அம்புலிப்பருவம் - 10)*

திங்களின் வரவு கண்டு அல்லிமலர் விரியும்; தாமரைமலர் கூம்பியிருக்கும். இயற்கையில் நிகழும் இயல்பான இக்-காட்சியில் புராணக்கருத்தைப் புகுத்திக் கற்பனையாகத் தாமரைமலர் கூம்பியிருப்பதற்கான காரணத்தை நயம்பட விளக்கியுள்ளார் கவிஞர். சந்திரன் குருவின் மனைவியைக் கூடியதாகப் புராணம் கூறும். மாற்றான் மனைவியைத் திங்கள் கூடிய காரணத்திற்காக அவனுடைய ஒழுக்கக்-கேட்டைக் கண்டு தாமரைமலர் தன்னுடைய முகையை விரிக்க விரும்பவில்லை எனத் தற்குறிப்பேற்றமாக இக்-கற்பனையைப் பாடியுள்ளார் கவிஞர். கவிஞரின் கற்பனை அவருடைய நன்னெஞ்சத்தைக் காட்டுவதோடு பிறன்மனை நோக்காப் பேராண்மையையும் வலியுறுத்தும்.

அம்புலிப்பருவம் பாடுவது அருமையுடைய செயல். எனவே 'பிள்ளைத்தமிழுக்கு அம்புலி புலி'8 என்பர் புலவர். முருகனோடு விளையாடுவதற்காக அம்புலியை அழைக்கும் புலவர் பல நயமான காரணங்களைக் கூறுகிறார். முருகனோடு விளையாடுவதற்குத் தக்க குழந்தைகள் பூவுலகில் இல்லை. ஆகவேதான் முருகனோடு விளையாட அம்புலியை அழைக்க வேண்டி வந்தது.

"குடத்துநீர் தன்னிலுங் கோதில்பல மட்சங்கள்
கூடிவாழ் பொய்கைதனிலும்
குழிநீரிலுங் குற்றமார் சலத் திடையிலுங்
குரைகடலி டத்துமரிய
தடத்துநீர் மீதிலுந் தங்கிவாழ் கின்றனின்
தன்மையை யறிந்ததாலே"

*(அம்புலிப்பருவம் - 6)*

என அம்புலியை அழைத்ததற்கான காரணத்தை ஆசிரியர் நயம்படக் கூறுகிருர். மதியின் குளிர்ச்சியான தன்மை முருகனேடு விளையாடும் தகுதியை அளிக்கிறது. ஏனெனில் முருகனும் அடியார்மாட்டுத் தண்ணளி கொண்டவன். இப்பிள்ளைத்தமிழில் 'தண்டம்' என்னும் உத்தியைக் கொண்டு புலவர் ஒரு பாடலை மட்டுமே பாடியுள்ளார்.

புலவரின் கற்பனைவளத்துக்கும் வருணனைத்திறத்-துக்கும் சிறுதேர்ப்பருவம் சான்ருக அமைகிறது. முருகன் உருட்டி விளையாடும் சிறுதேர் எப்படிச் செய்யப்பட்-டுள்ளது என்பதனைக் கீழ்க்கண்ட பாடலில் கவிஞர் காட்டுகிருர்.

"பவளத் துயர் நாற் காலெழுப்பிப்
பணிமாமணியின் விட்டமிட்டுப்
பார்மேற் பச்சை யச்சமர்த்திப்
பசும்பொன் னுருளைதனைப்பூட்டி
திகழ் சீர்ப் பதுமராக மதாற்
திறலாராணி யிறுக்கியொரு
தீதில்வைடூரியக் கொடுங்கை
சேர்த்தே வைரக்கூம்பமைத்து
தவளத்தொளிர் நற் தாரமதாற்
தனியோர் நாப்ப ணதுநிறுவித்
தலஞ்சூ ழாழித் தரளமதாற்
தகைசேர் தூயவடம் பூட்டி"

*(சிறுதேர்ப்பருவம் - 1)*

எனச் சிறப்புற வருணித்துள்ளார். தெய்வீகக் குழந்தையாம் முருகன் விளையாடும் தேர் விலை மதிப்பற்ற மணிகளால் அமைக்கப்பட்டிருப்பதை உயர்வுறப் பாடுவர் கவிஞர்.

*மரபு மாற்றம்:*

பிள்ளைத்தமிழ் பாடும் புலவர்கள் முத்தப்பருவத்தில், உலகில் கிடைக்கும் முத்துக்களைக் காட்டிலும் பாட்டுடைத் தலைவனின் வாய்முத்தமே சிறந்தது எனப் பாடுவர். இது பிள்ளைத்தமிழ் இலக்கிய மரபு. ஆயின் இந்நூலில் இம்மரபு பின்பற்றப்படவில்லை. பிற முத்துக்களைப் பற்றிக் குறிப்பிடா-மல் முத்தம் தருமாறு வேண்டுகிறார்.

பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையில், சிறுமியர் இழைத்து விளையாடும் சிற்றிலைப் பாட்டுடைத்தலைவன் அழிக்கக்கூடாது எனப் புலவர் வேண்டிப்பாடுவது மர-பாகும். எனவே பிள்ளைத்தமிழ் நூல்களில் 'சிற்றில் சிதை-யேலே' என்னும் மகுடம் இடம்பெறும். ஆயின் இந்நூலில் புலவர் மரபை மாற்றிச் 'சிற்றில் சிதைத்தருளே' எனப் பாடி-யுள்ளார். 'புதியன புகுத்துதல்' என்னும் மரபுப்படிச் சிற்-றிலைச் சிதைத்தருளுமாறு பாடியிருக்கலாம். இறைவனு-டைய பேரின்ப வீட்டை நோக்க இவ்வுலகவாழ்வு (இம்மை-வாழ்வு) சிறுமையானது என்னும் கருத்தின் அடிப்படை-யில், சிற்றில் என்பது சிறுமியர் இழைத்து விளையாடும் ம்ணல்வீட்டை மட்டும் குறிக்காமல், ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களைக் கொண்ட உயிர்கள் வாழும் இம்மை வாழ்வைக் குறித்தது. தத்துவ அடிப்படை-யில் 'பிறவித்துன்பத்தை ஒழிப்பாயாக' என்னும் கருத்துப்பட 'சிற்றில் சிதைத்தருளே' எனப் புலவர் பாடியிருக்க இட-முண்டு.

இறையியல்புகளை, அடியவர் இயல்புகளை மிக விளக்க-மாகப் பாடிய புலவர் மற்றொரு மரபு மாற்றத்தையும் இப்-பிள்ளைத்தமிழில் கையாண்டுள்ளார். இறைவன் 'வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன்' என்பது சமய உண்மை. ஆயின் புலவரோ,

"வேண்டார் தமையே வேண்டாத
விபுதா" (முத்தப்பருவம் - 3)

எனப் பாடியுள்ளார். இறைவனிடம் அன்பில்லாமல் இறைவனை வேண்டாமெனக் கருதுபவர்களை இறைவனும் வேண்டான் எனக் குறிப்பிட்டுள்ளது இறையியல்பைத் தவறாகக் கூறுவதாகுமன்றோ? இறைவனிடம் அன்பு கொள்ளவேண்டும் என்பதை வலியுறுத்தவேண்டி இறைவனிடத்து அன்பில்லாதவரை இறைவன் விரும்பான் என்றாரா? என்ற ஐயம் எழுகிறது. ஆயின்

"கல்லார் நெஞ்சில்
நில்லார் ஈசன்"9

என ஞானசம்பந்தர் பாடிய ஞானப்பாடலை நினைவுகூர்ந்தால் இறையன்பு இல்லாதவரிடம் (இறையன்பிருப்பின் இறைவன் பற்றிய நூல்களை - சமய நூல்களைக் கற்பர்) இறைவன் தங்கமாட்டான் என்ற உண்மையையே ஆசிரியர் பாடியுள்ளார். மேலோட்டமாகப் பார்க்கும்போது மரபை மீறியதாகத் தோன்றினாலும் ஆழ்ந்து நோக்கினால் மரபில் மாற்றமில்லை என அறியலாம்.

## மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்

தனித்தமிழ்ப் பற்றுளர் மறைமலையடிகள். தமிழ்மாட்டுத் தணியாத தாகம் கொண்ட இவர் தமிழுக்கும் சைவத்துக்கும் ஆற்றிய பணிகள் பலப்பல. இம்மாண்புடையார் நூற்றாண்டு விழாவையொட்டி நடத்தப்பட்ட படைப்பிலக்கியப் போட்டியில் முதற்பரிசு பெற்ற பெருமைக்குரியது 'மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்' என்னும் நூல். பினாங்குக் கவிஞர் சி. அன்பானந்தத்தின் அரிய படைப்பு இந்நூல். இந்நூலின் நயமும் சிறப்புங் கருதிப் 'பிள்ளைத்தமிழ்ப்பாவலர்' என்ற சிறப்புப்பட்டம் இவருக்கு வழங்கப்பட்டது.

### நூல் எழுந்த வரலாறு:

காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரி நிறுவனர் இராம. பெரியகருப்பன் செட்டியார் தமிழ்மீது எல்லையில் பற்றுடையவர். தமிழ்வளர்த்த சான்றோர்களை நன்றிப்பெருக்குடன் நினையும் நல்லிதயம் படைத்தவர். மறைமலையடிகள் நூற்றாண்டு விழாப் படைப்பிலக்கியப் போட்டி அன்னாரின் தமிழ்ப்பற்றுக்குச் சான்றாக அமைவது. அன்னாரின் மெய்யம்மை பதிப்பக வெளியீடாக (முதல் வெளியீடு) மலர்ந்தது இப்பிள்ளைத்தமிழ் நூலாகும். தமிழ்மொழி வழங்கும் நாடுகளைச் சேர்ந்த கவிஞர்கள் இப்போட்டியில் பங்கேற்றனர். முதற்பரிசு பெற்ற பெருமைக்குரியதாக மட்டுமின்றி மலையகமண்ணிலும் தமிழ் இலக்கிய மரபு அறிந்த கவிஞர்கள் உள்ளனர் என்பதற்கு இந்நூல் தக்கதொரு சான்றாகும்.

### நூலமைப்பு:

பிள்ளைத்தமிழ் இலக்கணங்கள் பொருந்தியுள்ள இந்நூலில் பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களே அதிகம் பயில்கின்றன. சந்த விருத்தங்களும் இடம்பெறுகின்றன. மறைமலையடிகளின் வாழ்க்கை முழுமையும் சிறப்புறச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

*புலவர் நெஞ்சம்:*

ஒரு புலவனின் நெஞ்சத்தை அறிவதற்கு அவன் படைக்கும் நூலே நற்கருவியாம். இதனைப் பற்றி மூதறிஞர் செம்மல் வ. சுப. மாணிக்கனார் கவினுறக் கருத்துரைப்பர்.

> "புலவனின் நெஞ்சப் பொருள் சொற்பொருள் காண்பதன்று. இந்நெஞ்சப்பொருள் ஆள், இடம், காலம்தோறும் தனித்தனி வீற்றுப்படும். சொற்பொருள் உடல்போல்வது. நெஞ்சப்பொருளே உயிரனையது. இவ்வுயிர்ப்பொருள் காண்டற்கு அரியதாயினும் நோக்கெனும் கருவிகொண்டு காணற்கு உரியது. உள்ளப்பொருளைக் கண்டுகொள்ளவல்ல பண்பட்ட அறிவுக்கூர்மையின்றிச் சொற்பொருளை மட்டும் கற்றொழியும் பரந்த மொழிப்பயிற்சியால் பயன் என்ன?"10

புலவனின் நெஞ்சத்தை அறிய 'நோக்கு' என்னும் நுணுகிய முறையே உகந்தது. இந்நோக்கு கவிஞர் அன்பானந்தத்தின் தமிழ்நெஞ்சத்தைக் காட்டுவதாய் இலங்குகிறது. மறைமலையடிகளிடம் நெருங்கிப் பன்னாட் பழகியவர் போன்று நூலைப் பாடியுள்ளார் கவிஞர். மறைமலையடிகள் வாழ்வைப் பழுதற உணர்ந்து மற்றவர்க்கும் அவ்வாறே உணர வழிவகுத்துள்ளார் ஆசிரியர். தமிழ்ப்பற்றுக்கொண்ட காரணத்தால் வடமொழிப்பெயரைத் துறந்து தமிழ்ப்பெயரைத் தரித்தவர் மறைமலையடிகள். அன்னாரின் தமிழுணர்வைத் தக்கவாறு போற்றியுள்ளார். இதனால் புலவரின் தமிழ்த்திறமும் தமிழ்ப்பற்றும் தெற்றெனப் புலனாகின்றன.

தமிழ் இலக்கிய வரலாற்றில், தமிழினைச் சுவைத்த புலவர் பெருமக்களுள் குமரகுருபரருக்குத் தலைமையிடம் உண்டு. குமரகுருபரரின் தமிழ்த்திறமும், தமிழை அவர் துய்த்த திறமும் அவர் தமிழுக்குக் கொடுக்கும் அடைமொழிகளின் வாயிலாக அறியவரும். குமரகுருபரரின்

தமிழ்நெஞ்சம் போலக் கவிஞர் அன்பானந்தத்தின் தமிழன்பும் ஆற்றல் மிக்கது. 'முன்னோர் மொழி பொன்னே போல்' போற்றுந்திறமும் சிந்தையைக் கவரும் இயல்பினது. கொஞ்சுதமிழை நெஞ்சுமகிழப் பல அடைமொழிகளால் பாராட்டுகிறார். 'மலரெனுந் தண்டமிழ்', 'சொக்கரின் தீந்தமிழ்', 'கணக்குந் தண்டமிழ்', 'நளிரே நிறைந்த தமிழ்', 'வழுதியர் புரந்த தமிழ்' எனத் தம் பாவன்மையால் பாடியுள்ளமை புலவரின் தமிழ்நெஞ்சத்தைத் தகவுறக் காட்டுகிறது.

தமிழர் நெறியுள் ஐந்திணை 'அன்பின் ஐந்திணை' என அமைவுறப் போற்றப்படுவதாகும். மொழிக்கு மட்டுமே இலக்கணம் வகுத்த இனங்கள்தாம் உலகில் உண்டு. ஆயின் வாழ்விற்கே இலக்கணம் வகுத்தவர் வண்டமிழர். ஐந்திணைநெறி தமிழரின் அறநெறி. இவ்வைந்திணைநெறியை ஆற்றுநெறிக்குக் கம்பர் உவமிப்பர். ஆயின் பாவலர் அன்பானந்தம் ஆற்றல்சால் மறைமலையடிகளுக்கு ஐந்திணைநெறியை உவமிப்பர். கவிஞரின் மரபுவழிப்பட்ட நெஞ்சத்தையும், புதுமையைப் பொலிவோடு வெளியிடும் நெஞ்சத்தையும் காட்டுவதாகும் இவ்வுவமை.

"முல்லைக்குத் தானமர் தங்கத்தே ருறைதந்த
    முடியுடைப் பாரிதனிலும்
முல்லைக்குத் தேனமர் செந்தமிழ்த் தேருரை
    முழுதீந்த புகழுமெய்தி
இல்லைக்குச் சான்றெனும் பாலைக்குங் குறிஞ்சியின்
    இறையருட் தமிழையீந்தே
இயல்பசுஞ் சோலையாய் இழையூடு பாவுற
    எடுத்தநூல் நெய்தலாக்கி

எல்லைக்குச் சார்புறுக் கருணைமரு தம்வீச
    இந்திரன் வருணனுடனே
இளையவன் துர்க்கைதிரு மாலுமவர் தேரேறி
    இனிதே விரைந்தருள

தில்லைக்குள் ளுள்ளவனின் உள்ளத்தேர் நிற்பவன்
சிறுதே ருருட்டியருளே
திருக்கழுக் குன்றத்துச் சிவனருள் பெற்றவன்
சிறுதே ருருட்டியருளே"

(சிறுதேர்ப்பருவம் - 8)

முல்லைக்குத் தேர்தந்த பாரிவள்ளலைவிட அடிகள் உயர்ந்தவர். முல்லைப்பாட்டிற்குத் தேர்ந்த உரையைத் திறம்படத் தந்தவர். ஆதலின் பாரிவள்ளலினும் பன்மடங்கு உயர்ந்தவர். பாலைநிலம் தனக்கெனத் தனியொருநிலம் இல்லாதது. இப்பாலையைப்பாடும் பட்டினப்பாலைக்குத் தன்னேரில்லாத் தனியுரை தந்தவர் அடிகள்.இவ்வுரை நூல்களை இழையாகவும், முருகர் மும்மணிக்கோவை என்ற கவிதைநூலைப் பாவாகவும் (பாவு) தமிழில் நெய்தலாக்கியவர் மறைமலையடிகள். மறைமலை அடிகளின் எல்லையில் தமிழ்க்கருணையாகிய மருதம் எங்கும் வீசிடச் செய்தவர். தமிழ்க்கடவுளாம் முருகன்மீது கொண்ட தமிழ்க்காதல், குறிஞ்சிக்கடவுளைக் கோவை பாடியதன் வழி வெளிப்படுகின்றது. இங்ஙனம் மறைமலையடிகளின் தமிழ்ப்பணி ஐந்திணையோடு ஒப்பிடப்படுவது புதுமையாகும்.

ஐவகை நிலங்களுக்கும் உரிய கடவுளர் ஐவரின் வேலையை மறைமலையடிகள் என்னும் குழந்தை மட்டுமே செய்ய, அக்குழந்தைக்குத் தேரேறி வந்தருளுமாறு சிறுதேர் உருட்டுக எனப் பாடுவர். இது புலவரின் கற்பனை நெஞ்சத்தைக் காட்டுகிறது.

நூலைக் கொண்டு நெசவு செய்து ஆடை தருபவன் நெசவாளி. ஆயின் பாவைக் (கவிதை) கொண்டு நெசவு செய்து நூலைத் தருபவன் பாவலன். மனிதரின் மானம் காப்பது ஆடை. தமிழரின் இனமானம் காப்பவை தமிழ்நூல்கள் என்ற அடிப்படையில் நெசவுக்கற்பனையைச் சிறப்புறப் பாடியுள்ளார் பாவலர். தமிழரின் வாழ்வை மேம்படுத்த வேண்டுமாயின் அவர்தம் சிந்தனையை உயர்த்தவேண்டும். இவ்வடிப்படையில் தம் நூல்களின் வழி சிந்தனை

விருந்து படைத்த மறைமலையடிகளின் மாண்பைப் போற்றுவர் பாவலர். கவிஞரின் புதுமைச் சிந்தனைக்கும் மரபுகாக்கும் பழமைச்சிந்தனைக்கும் பாலமாக அமைகிறது இக்கற்பனை.

**சொல்லாட்சி:**

எளிய வழக்குச் சொற்கள், அருஞ்சொற்கள், புதிய சொல்லாக்கங்கள், சிலேடை நயமிக்க சொற்கள் எனப் பலவகையில் சொற்களைக் கையாண்டுள்ளார் பாவலர். சிலேடைச் சொற்கள் நகைச்சுவை பயக்கின்றன.

**ஓசையின்பம்:**

குமரகுருபரர் சந்தக்கவி பாடுவதில் வல்லார். அவரைப் போலக் கவிஞர் அன்பானந்தமும் சந்தமுறச் செந்தமிழ் பாடுவதில் சிறந்தவர். சந்தவிருத்தங்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளமையால் ஓசையின்பத்தைக் குறைவறத் துய்க்கமுடிகிறது. சான்றாகக் காப்புப்பருவத்தின் ஐந்தாம் பாடல் செவிக்குத் தேனென இனிப்பது.

"வேதாசல நாதாவருள் தாதாவெனப் போற்றில்
வேலாயுத மேதானுடை கோலத்துறு கன்றை
வேதாகம நூலோர்பணி வேந்தேயெனப் பாடில்
வீணாய்மிடி வாராவகை வாழச்செயுங் குன்றை"
(காப்புப்பருவம் - 5)

**புலமைத்திறம்:**

மறைமலையடிகள் தனித்தமிழ்ப்பற்றுடையவர். பிறமொழிக்கலப்புக்குப் பெரும் எதிரியாகவே விளங்கியவர்.

இதனை,

"நத்திடும் பிறர்மொழி நந்தமிழ் மொழியிலே
நண்டுபோ லோடிவந்து
நடமாட லானதால் நயத்தமிழ் தன்னினிமை
நன்குணரா மக்களுக்கு"

(சப்பாணி - 8)

என அழகுறப் பாடுவர்.

ஏருழவர், வில்லேருழவர் ஆகியோர் போன்றே சொல்லேருழவர் பணியும் அமைவதாகும். இச்சொல்லேர் உழவர் தமிழ் இலக்கிய வரலாற்றில் எண்ணற்றோர். ஆயின் மறைமலையடிகள் காலத்தின் தேவைக்கேற்பத் தோன்றித் தமிழ் வளர்த்தவர். தமிழ்ப்பயிர் வளரத் தம் வாழ்நாளை அர்ப்பணித்த அடிகளைத் தக்க உவமைகளின் மூலம் பாராட்டுகிறார். எளிய, நாம் நன்கறிந்த உவமைகளாக அமைந்தபோதிலும் அவற்றைப் பாவலர் கையாளும் பாங்கில் தனிச்சிறப்பு உண்டு.

"வான்முறை வைத்துமும் மாரியும்
பெய்திட வந்ததை யொத்தவனை"

(காப்பு - 2)

மழையைக் கொடைக்கும், ஆற்றலுக்கும் பொதுவாக உவமிப்பது மரபு. மழையில்லாவிடில் பசும்புல்லின் தலையைக்கூடக் காணமுடியாது என்பர் வள்ளுவர். அதுபோலத் தமிழ்ப்பயிர் (பிறமொழிக் கலப்பின்றி) செழித்து வளரத் தக்கபணியாற்றியவர் அடிகள். மறைமலையடிகள் தனித்தமிழ்த்தந்தை எனப் போற்றப்பட்டவர். அவரின் பணியை எளிய உவமையால் போற்றினும் பொருந்தியமுறையில் தக்க உவமையைக் காட்டியுள்ளமை தனிச்சிறப்பு.

புலவர்களைச் சொல்லேர் உழவர் எனப் போற்றுவது இலக்கியமரபு. தமிழ்ப்பயிர் வளர்க்கத் தமிழ்க் கழனியில் ஓய்வின்றி உழைத்தவர் அடிகள். இதனை,

"உழுதிடு மொருசெயில் உழவன்றன் பொழுதினை
யுணர்வொடு போக்குதல் போல்
ஒளியுமிழ் தமிழெனுங் கழனியிற் பொழுதினை
யொருங்குறத் தேக்கியவன்"

(வருகை - 1)

எனப் பாவலர் அமைவுறப் பாராட்டுவர்.

மறைமலையடிகள் மாண்புறு சைவர். திருநீறும் பொட்டுந் துலங்கும் அவர் தோற்றம்

"பொருள்சே ரினிமைச் சொற்கவியின்
பொருந்தி வாய்த்தாற் போலிருக்க"

(செங்கீரை - 8)

எனப் பாவலரால் போற்றப்படுகிறது. மறைமலையடிகள் தமிழுக்குத் தொண்டாற்றியதைப் போலவே சைவத்துக்கும் தொண்டாற்றினார். அன்னாரின் சைவத்தோற்றம் பொருளினிமை வாய்ந்த கவியைப் போல இனிமை பயப்பதாகும். மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் நாமறிந்த எளிய உவமைகளே கையாளப்பட்டுள்ளன. ஆயினும் அவை ஆழ்ந்த பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளமையே சிறப்பு.

பாவலர் நகைச்சுவை நயம்பட எழுதவும் பேசவும் வல்லார். கவிஞரின் நகைச்சுவையுணர்வு நூலிடையே ஆங்காங்கே ஒளிர்கின்றது. மறைமலையடிகள் பிறமொழிக் கலப்பினை வன்மையாகக் கண்டித்தவர். இதனை

"சத்தைக் காணு வேற்றுமொழி
தண்ணார் தமிழில் தான்கூட்டிச்
சரளத் தமிழாய் மாற்றியதைத்

தாளா மதியிற் கூராளா
தத்தாய் வந்த மொழிநீக்கத்
தரவே வந்தாய்"     (செங்கீரை - 2)

பிறநாடுகளினின்று வந்த மொழி என்பதைத் "தத்தாய் வந்த மொழி' எனச் சுட்டுவது நகை பயப்பதோடு, நினைந்து நினைந்து இன்புற வழிவகுக்கிறது.

பிள்ளைத்தமிழ் நூலில் கவிஞரின் புலமைக்குக் கட்டியம் கூறுவது அம்புலிப்பருவமாகும். பொதுவாக எல்லாப் பிள்ளைத்தமிழ்ப் பாவலர்க்கும் இது பொருந்தும். மறைமலை என்ற பெயரைக் கொண்டு, இறைவனுடைய பெயரையும் அடிகளுடைய பெயரையும் ஒப்பிட்டுக் காட்டி நிலவை அழைக்கிறார் பாவலர்.

"மறைமலை யார்தாங்க வருவைநீ இவன்பெயர்
மறைமலை தாங்கி வருவான்"
(அம்புலி - 1)

இறைவன் வேதமுதல்வன். ஆகலின் விழுப்பொருளானவன். அவ்விறைவன் நிலவைத் தலையில் தாங்கி வருவான். ஆயின் 'மறைமலை' என்ற பெயரைத் தாங்கி வருபவர் அடிகள். 'சாம' உத்தியின் மூலம் சந்திரன் வருகையால் கடல் பொங்குவதையும், மறைமலையடிகளின் வருகையால் தமிழ்க்கடல் பொங்குவதையும் நயமுறக் காட்டியுள்ளார். 'பேத' உத்தியின் மூலம் சந்திரனையும் அடிகளையும் வேறுபடுத்திக் காட்டும் பகுதி பாவலரின் தனித்தன்மைக்குத் தக்க சான்றாம். இவ்வேறுபாடுகள் மற்ற பிள்ளைத்தமிழ் நூல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் புதுமையானவை.

*பன்னூற்பயிற்சி:*

கவிஞர் அன்பானந்தம் தமிழிலக்கியங்களை ஆழமாகக் கற்றவர். தெளிந்த புலமையுடையவர். இப்பண்பு பிள்ளைத்தமிழ் நூல் முழுவதிலும் தெற்றெனப் புலப்படுகிறது.

பகழிக்கூத்தர், குமரகுருபரர், வடலூர் வள்ளலார், திருவள்ளுவர், திருஞானசம்பந்தர், மற்றும் சிவப்பிரகாசர் ஆகியோரின் நூல்களைக் கற்றவர் என்பதனைக் கவிஞர் கையாளும் தொடர்களும் கருத்துக்களும் புலப்படுத்துகின்றன. மறைமலையடிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் அனைத்தையும் காட்டி அவருடைய தமிழ்ப்பணி, சைவப்பணி ஆகிய இரண்டையும் நயமுறப் போற்றி உள்ளார் கவிஞர். மறைமலையடிகளை அறிவதற்கு இந்நூல் வழிகாட்டியாய்ப் பயன்படும் சிறப்புடையது.

## கோலாலம்பூர் மகாமாரியம்மன் பிள்ளைத்தமிழ்

இந்நூல் பாடுபொருளால் மலையகத்திற்கு உரியது. இந்நூலைப்பாடிய பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன் தமிழ்நாட்டினர். எண்ணற்ற நூல்களை எழுதியவர். தமிழர்கள் தெய்வ வழிபாட்டை மறந்தவரல்லர் என்பதற்கு அவர்கள் அமைத்த கோயில்களே சான்றும். மலையகத்தைப் பொறுத்தவரை எண்ணற்ற கோயில்கள் இருப்பினும் கோலாலம்பூர் மகாமாரியம்மன் கோயில் தனிச்சிறப்புடையது. வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. தமிழ் வளர்த்த மையமாகத் திகழ்ந்தது. தமிழர் வரலாற்றோடும், மலேசிய வரலாற்றோடும் இணைந்த சிறப்புடையது. ஆகவேதான் கோலாலம்பூர் மகாமாரியைப் பிள்ளைத்தமிழின் தலைவியாக்கி உள்ளார். மலையகத்தில் எழுந்த பெண்பாற்பிள்ளைத்தமிழ் நூல் இஃதொன்றேயாம்.

***காப்புப்பருவப் புதுமை:***

மற்ற பிள்ளைத்தமிழ் நூல்களைப் போலன்றி இந்நூல் புதுமைப்பொலிவுடன் பாடப்பட்டது. இவ்வுண்மையை உறுதிப்படுத்துவது காப்புப்பருவமாகும். பொதுவாகக் காப்புவேண்டிப்பாடும் புலவர்பெருமக்கள் தம்முடைய விருப்பத்திற்கிணங்கக் கடவுளரைப் பாடுவர். ஆகவேதான் பிள்ளைத்தமிழ் நூல்களில் காப்புப்பருவம் வேறுபடும்.

பன்னிருபாட்டியல் கூறும் விதிகளுக்கிணங்கப் பாடப்பட்ட நூல்களும் உள்ளன; பன்னிருபாட்டியல் விதிமுறைகளை மீறிய நூல்களும் உள்ளன.

கோலாலம்பூர் மகாமாரியைக் காக்கவேண்டித் தமிழ்நாட்டுத் தெய்வங்களைப் பாடிய புலவர், அமெரிக்கநாட்டில் எழுந்தருளிய நியூயார்க் பிள்ளையாரையும் பாடுகிறார். மேலும் ஏசு, புத்தர், அல்லாஹ் ஆகிய கடவுளர்களையும் காப்புவேண்டிப் பாடுவர். கிறித்தவப் பிள்ளைத்தமிழாசிரியர்கள் ஏசுவையும், இசுலாமியப் பிள்ளைத்தமிழாசிரியர்கள் 'அல்லாஹ்'வையும் பாடுவதுண்டு. ஆயின் சைவப் பிள்ளைத்தமிழ் நூலாசிரியர் பிறசமயக்கடவுளரைக் காப்பு வேண்டிப் பாடும் புதுமையை இந்நூலில் காண்கிறோம். இது கவிஞரின் பொதுமை பூக்கும் நெஞ்சத்தைக் காட்டுகிறது. மலேசியத் திருநாடு பல்லின மக்கள் வாழும் நாடு; பல சமயங்களும் வாழும் நாடு என்ற அடிப்படையில் பொதுமையில் புதுமை புகுத்தினார் போலும் ஆசிரியர்! இக்கருத்துக்கு அரணாகக் காப்புப்பருவப் பாடலொன்று அகச்சான்றாய் அமைகிறது.

"வேறுபடை யால்மக்கள் வேறுபாடே அறியா
விதிசமைத்த ஒப்பில்லா நாட்டின்
வெல்லரிய சொல்லரிய நல்லநெறி தோலா
வேலம்பூர் மகாமாரி காக்கவே"

(காப்பு - 9)

இக்காப்புப்பருவத்திலே தமிழ்த்தாயை வாழ்த்தும் புதுமையும் காணக்கிடக்கின்றது. சீரிளமைத்திறம் வியந்து தமிழ்த்தாயை வாழ்த்தியவர் மனோன்மணீய ஆசிரியர் பேராசிரியர் பெ. சுந்தரம்பிள்ளை. அன்னாரின் சொல்லும் பொருளும் பெருங்கவிக்கோவால் பொன்னேபோல் போற்றப்பட்டுள்ளன. கவிஞரின் தமிழ்நெஞ்சத்தைத் தகவுறக் காட்டும் தக்கதொரு பகுதி தமிழ்த்தாய் வாழ்த்துப்பாடல். மலையகத்திற்கே உரிய கனிகளுள் 'டுரியான்' என்னும் முள்நாறிப்பழம் தலைமையிடம் பெறுவதாகும். கனியின்சுவை இனிமை பயப்பதாகும். அவ்வினிமை போல வாழ்வும் அமையவேண்டும் என்பது கவிஞரின் விழைவு. இவ்விழைவு,

"வனத்தேனுள் இளநீர்தொ ரியான்சுளேயும் கலந்தே
நன்குதரு தன்மைபோல் வழங்கிச்"

(காப்பு - 10)

என்னும் வரிகளில் ஒலிக்கின்றது.

**பருவ விளக்கம்:**

பெரும்பாலான பிள்ளேத்தமிழ் நூல்களுள் குறிப்பிட்ட பருவத்திற்குரிய விளக்கங்கள் அமையுமாறு பாடுவது இயல்பு. இவ்வடிப்படையில் செங்கீரைப்பருவ விளக்கம்

"சிறு ஞான மோட்டியே மறைஞானம் மீட்டியே
குறுகுறு நடந்து மிழ்நீர்
சிந்தஅமர்ந் தேதரை இருகைகள் ஊன்றியே
செங்கீரை ஆடி அருளே"

(செங்கீரை - 5)

என அமைகிறது.

**மலேநாட்டுச் சிறப்பு:**

பெருங்கவிக்கோ தமிழ்நாட்டைச் சேர்ந்தவராயினும் மலேயகப்பெருமையைப் பாடுவதில் உள்நாட்டுக் கவிஞர்களேயும் விஞ்சிநிற்கிருர். மலேநாட்டின் வரலாற்றைப் பல பாடல்களில் சுட்டுகிருர். அரசியல், கலே, பண்பாடு, இயற்கைவளம் ஆகிய பல கோணங்களிலும் மலேயக மாண்பை மதித்துப் போற்றுவர்.

மலேயக மண்ணின் இறைக்கொள்கை 'ருக்குன் நெகாரா' என்று சொல்லப்டும். இதனேத் தாலப்பருவத்தில் பாராட்டுகிருர் ஆசிரியர்.

"இயங்கும் வகையில் இறைக்கொள்கை
ஏற்றே 'ருக்குன் நெகாராவின்'
தண்ணளி பிணையும் தலைநகருள்
தாயே! தாலே தாலேலோ"

*(தாலப்பருவம் - 2)*

மலையகத்தில் பல சமயங்கள் வழங்கினுலும் மக்கள் சகோதரநேயத்துடன் வாழ்வது மலையகத்தின் சிறப்புக்குக் காரணமாகும். இவ்வுண்மையைக் கவிஞர் போற்றத் தவறவில்லை.

"தமராய்ப் பலமதம் சகோதர நேயமாய்
சால்போ டேயணைத்தே"

*(தாலப்பருவம் - 10)*

**இயற்கைவளம்:**

மலைநாட்டின் இயற்கைவளம் மனத்தைமயக்கும் இயல்பினது. இதனைப் பல பாடல்களில் காட்டியிருப்பினும், இயற்கையின் வனப்பைச் சங்க இலக்கியத் தொடர் மூலம் எழிலுறப் பாடுவது நயமுடையது.

"வண்டலைக் கும்மெழில் மாமகள் இயற்கையாள்
மகிழ்ந்தே கூத்தாட
மன்பதை கைபுனைந் தியற்ருக் கவின்மகள்
மரகத ஒயிலாடக்
கொண்டலை வெல்கரு குயிலினம் பாடிடக்
கொட்டுக சப்பாணி"

*(சப்பாணி - 7)*

எழிலார் மலையகத்தின் இயற்கைவளத்தை வருணனைவளத்துடன் பாடியுள்ளார் கவிஞர். சப்பாணிப்பருவத்தின் ஆரும் பாடல் மலையக எழிலைச் சிறப்புறக் காட்டுவதாகும். முத்தப்பருவத்தில் இந்நாட்டில் கிடைக்கும் பலவகைப் பாலையும் பாங்குறப் பாடுவர். மலையகத்தின் பொருளாதார வளத்திற்கு மூலமுதலாய் அமைவது 'ரப்பர்' பாலாகும்.

ஆகவே, மாரியை விளிக்கும் போது 'தேட்டுப்பால் நாட்-டாளே' என்று விளிப்பர். இந்நாட்டின் தேட்டு 'ரப்பர்' பாலேயன்றே?

"தோட்டப்பால் எனும்ரப்பர் சுரந்திடு மரப்பால்
தொடர்ச்சியாய் வழிந்து வீழ
தொகைதொகைச் செடிகொடி வகைவகைப் பால்களோ
சொரிந்து கீழுறைந்து சூழக்
கோட்டுப்பால் எங்கணும் கொப்புளித் தோடவும்
குழந்தைகள் மகிழ்ந்து உண்ணும்
குமரிப்பால் அமரப்பால் குடித்திடும் அமுதப்பால்
கூட்டுப்பால் சக்தி விஞ்சும்!
மாட்டுப்பால் பல்வேறு மாண்புப்பால் கலத்தலால்
மதிப்பாலே உயர்ந் தோங்கியே
மன்பதைக் கேபாலே மகிழ்ந்தூட் டுதாய்ப் பாலாய்
மாவையம் சிறந்து தாங்கும்
தேட்டுப்பால் நாட்டாளே! வீட்டுப்பாலாய்ப்பொங்கும்
செல்வியே முத்த மருளே"

(முத்தம் - 8)

மலேநாட்டின் ஆறுகள், கனிகள் ஆகியவற்றை மிக விரிவாகப் பாடியுள்ளார். மலேயகம், மலேநாடு, மலேசியா என்பதற்கான பெயர்க்காரணத்தை நயமுற விளக்குகிறார். மலேகள் உள்ள நாடுகளுக்கு இல்லாத சிறப்பு மலேயகத்திற்கு இருப்பதை மனமாரப் போற்றுவர்.

"இந்திய நாட்டிலுயர் இமயமா மலேயும்சீர்
எழில்மலே நேபாளமும்
இனிய சீனுவிலும் ஐரோப்பிய நாட்டிலுள
ஏரால்ப்சு மலேகள்தாமும்
முந்திய வரலாற்று மலேகள்சூழ் நாடெனினும்
முதற்பெயர் 'மலேநாடெ'னும்
முதிர்நல உலகினில் மலேசிய நாடன்றே
முதன்மையாய்ப் பெற்றதம்மா"

(ஊசல் - 2)

என்னும் இப்பகுதி மலைநாடு என்னும் சிறப்புப்பெயருக்கு உரிய காரணத்தைச் சுட்டுகிறது.

பெருங்கவிக்கோ உலகின் பல நாடுகளுக்கும் பயணம் செய்தவர். ஆதலின் அந்நாடுகளோடு மலையகத்தை ஒப்பிட்டுப் பாடுகிறார். ஒரு பொருளின் சிறப்பை அறிய அதனை மற்ற பொருளோடு ஒப்பிடவேண்டும். இவ்வொப்பியலின் மூலம் மலைநாட்டின் இயற்கை நலத்தை ஏற்றிப் போற்றுகிறார். உலகில் மிகப்பெரிய நாடான அமெரிக்கா செல்வச்செழிப்புமிக்க நாடாகும். அந்நாட்டில்கூடப் பாலைநிலம் உண்டு. ஆயின் மலையகத்தில் பாலைநிலமே இல்லை என எண்ணும்போது பாவலரின் நெஞ்சம் விம்மிதம் அடைகிறது. இதனை,

"பதியினில் உயர்ந்தோங்கு அமெரிக்க மண்ணிலும்
பாலைநிலம் உள்ளதம்மா!
பாலையே இல்லாத நாடொன்று உள்ளதேல்
பசுங்கோயில் மலையமம்மா" (ஊசல் - 4)

என்று போற்றுகிறார். கவிஞரின் பாராட்டு உண்மையே என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

ஒரு நாட்டின் சிறப்புக்கு அந்நாட்டு அரசியலும் தக்க காரணமாய் அமைகிறது. இவ்வகையில் மலையகத்தின் விடுதலைக்குப் போராடிச் சுதந்திர மலேசியாவினை உருவாக்கி 'மலேசியத் தந்தை' என மக்களால் மகிழ்ந்து போற்றப்பட்டவர் துங்கு அப்துல் ரஹ்மான். இவர் இன, மொழி, சமய வேறுபாடுகளை மறந்து மக்களை மக்களாக மதிக்கும் மாண்பினர். பரந்த இதயம் படைத்தவர். இவர் அன்னையின் கோயிலுக்கு வந்து கோயிலைக்கண்டு களித்தார். இதனை,

"முன்னாளின் பிரதமர் துங்குஅப்துல் ரகுமான், உன்
முன், துணை வியோடுவந்தே
முன்றிலுன் சந்நிதி நன்றருள் போற்றியே
முறைஅமர்ந்தே களித்தார்"
(அம்மானை - 6)

என்று பாடுவர்.

பிரதமர் மகாதீர் முகமதுவின் ஆட்சிச்சிறப்பையும் கவிஞர் பாராட்டுவர்.

"புந்திசீர் விந்தையர் மகாதீர் ஆட்சிசெய்
பொழிலகம் அமர்ந்த அம்மா"
(ஊசல் - 2)

**வரலாற்றுச் செய்திகள்:**

இப்பிள்ளைத்தமிழ் மலேசிய வரலாற்ரோடு தொடர்புடைய செய்திகளை நிரம்பத் தருகின்றது. மலேசியாவின் வரலாறு 'பரமேஸ்வரா'வின் காலத்திலிருந்தே தொடங்குகிறது. ஆயின் அதற்குமுன் தமிழகத்திற்கும் இந்நாட்டிற்கும் இருந்த தொடர்பை இந்திய வரலாற்று நூல்கள் சிறப்பாகக் காட்டியுள்ளன. சோழப்பேரரசுக்கும் இந்நாட்டிற்கும் உள்ள வரலாற்றுத்தொடர்புகள் சோழர்வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றைக் கூறுவது நூலாசிரியரின் நோக்கமன்று. ஆயினும் குறிப்பிடவேண்டிய கடப்பாடும் உண்டு. ஆகவே வரலாற்றுக்குறிப்பை மட்டுமே கூறியுள்ளார். (காண்க: ஊசல் 9)

மலேசிய வரலாற்றில் சப்பானியராட்சிக் காலத்தில் மக்கள் அடைந்த இன்னல்கள் சொல்லுந்தரத்தன அல்ல. அத்துன்பங்களிலிருந்து அன்னை மகாமாரியே மக்களைக் காத்தாள் என்று அன்னையின் சிறப்பை வியந்து போற்றுவர் கவிஞர்.

"நம்பிக்கை கொண்டவர் நல்லுளத்தின்கரு
நாளெலாம் பிறக்கவைப்பாய்
நலிவிலா வகையிலே சப்பானி யராட்சி
நன்மக்கள் காத்தல் செய்தாய்!
பம்பிக்கை பார்த்தவர் பாதகம் வீழ்த்திய
படைஞர் நேத்தாசிபோசும்

பாரகத் தாயுனின் சேவடி அந்தநாள்
பணிந்த தும்பேர் மேன்மை அன்றோ"
(நீராடல் - 2)

இந்திய வரலாற்றிலும் மலையக வரலாற்றிலும் நேதாஜி சுபாஷ் சந்திரபோசின் பங்கினைக் குறிப்பிடாதார் நன்றி மறந்தவராவர். இம்மாவீரரின் பெயரை மறவாது குறிப்பிட்ட கவிஞர் பாராட்டப்பட வேண்டியவர்.

**மகாமாரியம்மன் கோயில் பற்றிய செய்திகள்:**

மலேசிய இந்திய தேசிய காங்கிரஸ் என்னும் அரசியற்கட்சி இந்தியர்களின் உரிமைக்காக இந்நாட்டில் உருவாக்கப்பட்ட கட்சியாகும். இக்கட்சி அன்னையின் அருட்கோயிலில் உருவானதே. இந்தியர்களின் அரசியல் பங்களிப்பிற்குக் காவல்தெய்வமாய் இருப்பவள் அன்னை மகாமாரி என்ற அடிப்படையில் கீழ்க்கண்ட பாடல் அமைகிறது.

"மலேசிய இந்தியக் காங்கிரசுக் கட்சிஉன்
மலரடி பிறந்து வளரக்
குணமிக்க மேன்மையும் குறிக்கோளில் வெற்றியும்
கொள்கைத் தெளிவுமுயரக்
குன்றினில் இட்டதோர் மெய்விளக்காய்த் தமிழ்க்
குடிகளைக் காத்திருக்க!
பணமிக்க வாய்ப்புகழ் பலமாடிக் கட்டிடம்
பாங்குற வாங்கி ஓங்கும்
பரம்பரைத் தலைவர்கள் நிரந்தரம் அமைச்சராய்ப்
பாதுகாப் பளிக்குமம்மா!"
(நீராடல் - 1)

அன்னை மகாமாரியம்மனின் கோயிலை கி.பி. 1873-இல் அமைத்தவர் திரு. காயாரோகணம்பிள்ளை என்பவர். இவர் இந்தியத் தொழிலாளர்களின் தலைவர். தம் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்திக் கோலாலம்பூர் மகாமாரியம்மன்

கோயிலை அமைத்தார். திரு. காயாரோகணம்பிள்ளையின் எதிர்பாரா மரணத்திற்குப் பின் அவர் திருக்குமாரர் திரு. தம்புசாமிப்பிள்ளை கி.பி. *1888*-இல் இக்கோயிலின் ஸ்தானி- கராகப் பொறுப்பேற்றார். பிறகு இவர் வழியில் வந்த க.த. கணபதிப்பிள்ளை ஸ்தானிகராகப் பொறுப்பேற்றார்(*11*). மாரியம்மன் ஆலயம் உருவான இவ்வரலாற்றைக் கவிஞர்

"யாதினும் இனியவர் தம்புசா மிகணபதி
நாட்டிய அறமுதலே"
(அம்மானை - *5*)

எனப் பாடுவர். தமிழ்க்கல்வி, சமுதாயப்பணி, அரசியற்பணி ஆகிய அனைத்திற்கும் மையமாய் விளங்கிய இக்கோயிலின் சிறப்பை ஆசிரியர் செவ்வனே காட்டியுள்ளார்.

**மலேசியத் தமிழர்கள் பற்றிய செய்திகள்:**

சமுதாயத்தைப் பற்றிய செய்திகளைக் கூறாத இலக்கி- யத்தால் எவ்விதப்பயனுமில்லை. சமுதாயம் இப்படி இருந்- தது என்றோ; எப்படியிருக்கவேண்டும் என்றோ கூறுவது நூலாசிரியர்களின் நோக்கமாகும். சமுதாயத்திற்குப் பய- னளிப்பதே இலக்கியத்தின் தலையாய நோக்கமாகும். சுருங்கக் கூறின் சமுதாயம் என்ற அடித்தளத்திலேதான் இலக்கியமாளிகை எழுப்பப்படுகிறது.

மலேசியத்தமிழர்களின் சமுதாயப் பின்னணியை மலேசியப்படைப்புக்கள் சிறப்பாக வெளிப்படுத்தி உள்ளன. இவ்வகையில் இப்பிள்ளைத்தமிழ் நூலும் மலேசியத்- தமிழர்களைப் பற்றிய செய்திகளை உள்ளது உள்ளபடியே உரைக்கின்றது.

மலேசியத் திருநாட்டில் ஆடவரும் பெண்டிரும் சரிநிகர் சமானமாக வாழும் நிலையைக் கவிஞர் போற்று- கிறார். இல்லற வாழ்விலும் சமரசமே மேலோங்கி நிற்கிறது. இதனை,

"காதற் செழுமட மாதர் மகிழ்வுடைக்
கருமைப் படை விழியார்
காவல் தனைஉடை ஆவல் உரிமைசெய்
கருத்துச் சுதந்திரத்தால்
ஓதற் குலவளம் உரிமை ஆடவர்
உண்மைக் குறிநோக்கில்
ஒருமன மாகியே திருமணம் கண்டிடும்
உவப்புக் காளாகி" (தாலப்பருவம் - 8)

என்று பாடுகிறார் கவிஞர்.

தமிழர்கள் பிழைக்கச்சென்ற இடங்களில் காட்டை-யழித்துக் கழனிகள் செய்து, தோட்டம் அமைத்து நாட்டை வளமாக்கினர். இதற்கு மலேசியத் தமிழர்களும் விதிவிலக்-கல்லர். ஆயின் இந்நாட்டுக் குடிமக்களாக அவர்கள் மாறிய பின்னர்த் தங்களின் தாய்மொழிக்கு அங்கீகாரம் கிடைக்கும் வண்ணம் எதையும் செய்தாரிலர். மூடுவிழாக்காணும் தமிழ்ப்பள்ளிகளும், இடிந்துவிழும் நிலையில் உள்ள தமிழ்ப்-பள்ளிகளும் கவிஞருக்கு இத்தகு சிந்தனையை வழங்கியது போலும்! தமிழ்க்கல்விக்கு இந்நாட்டில் இருக்கும் மதிப்பு (மக்களுடைய மதிப்பு; தமிழைப் படித்தால் சோறு-போடுமா என்ற எண்ணம்) கவிஞருக்கு வேதனையளித்திருக்க வேண்டும். ஆகவே மலேசியத் தமிழர்களின் மொழியுணர்வு பற்றிக் கீழ்க்கண்டவாறு பாடுகிறார்.

"பலதேசம் தமிழர்கள் பயன்தரச் சென்றனர்
பழகுமொழி அறியவில்லை!
பைந்தமிழ் உண்மையாம் மொழியொன் றறிந்ததால்
பயனெலாம் பெருகியதே!
இலதேசம் எத்தமிழ் நாட்டார்கள் செல்லாதது
எனும்நிலை இருந்த போதும்
இணையிலாத் தம்மொழி பிறதேசத் தார்களை
ஏற்றிட எண்ணவில்லை!
நலஞ்செயும் தமிழையும் மறந்தனர் மலாக்காவாழ்
நற்செட்டி மக்களைப்போல்"
(ஊசல் - 6)

மலாக்காசெட்டி என்ற இனம் தமிழினமே. ஆயின் மொழியை மறந்து தம் பண்பாட்டையும் இழந்து வேற்றினத்துடன் கலை, பண்பாடு, மொழி முதலியவற்றால் கலந்து இன்று அருகிவருகின்றனர். மலேசியத்தமிழர்களின் மங்கிவரும் மொழியுணர்வுக்கும், பண்பாட்டுணர்வுக்கும் கவிஞர் எச்சரிக்கை விடுப்பதாகக் கருதினால் மலேசியத் தமிழர்கள் பயன்பெறலாம். 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்' என்னும் பழமொழிக்கிணங்கத் தமிழர்கள் வாழவேண்டும்; தமக்குரிய உரிமைகளைத் தக்கவைத்துக் கொள்ளவேண்டும் என்ற விழைவின் அடிப்படையில் நோக்கினால் கவிஞரின் கருத்து தவறல்லவே? "மொழி வளம்பெறுவதும் வறுமையுறுவதும் அந்நாட்டு மக்களைப் பொறுத்ததே"12 என்னும் சிந்தனையைத் தருகிறது இப்பாடல். கவிஞரின் தமிழுணர்வும் 'அங்கைநெல்லியென'ப் புலப்படுகிறது.

மலேசியாவில் தமிழ் வளர்க்கும் அமைப்புக்கள் மற்றும் பத்திரிகைகள் ஆகியவற்றின் பணியையும் கவிஞர் சுட்டியுள்ளார்.

"நற்றமிழ்ச் சங்கமும் நயக்கவி மன்றமும்
நறவெழுத் தாளர்நிலையமும்
நாடுறு பல்கலைக் கழகமுள மொழிகளில்
நம்தமிழ் அங்கமும்சேர்"
(ஊசல் - 7)

"செஞ்சுவைத் தமிழிதழ் தமிழ்நேசன் தினமணி
சிங்கைபதி தமிழ்முரசும்
சிறந்தோங்கி வளர்தமிழ் திங்களிதழ் வாரஇதழ்
செழித்தோங்கு தமிழ்வளமும்
கொஞ்சுதமிழ் உரைநடைச் செய்யுளும் புதினமும்
குமரித்தமிழ் உயர்த்த
குவிபுகழ் வானொலி தொலைக்காட்சி நிலையமும்
கொண்டல்போல் தமிழ்வழங்க
விஞ்சுசுவை அருள்நெறி திருமறை மன்றத்தார்

மென்மைத் தமிழிசை பாடவும்
மேகவெளி போய்த்திரும்பி மாத்தமிழைக் கேட்க-
(வரும்
விஞ்சையுன் வேகமென்னே"
(ஊசல் - 8)

மலேசியாவில் இலக்கியத் துறையின் வளர்ச்சி பற்றிக் கவிஞர் கூறும் கருத்துக்கள் அனைத்தும் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய உண்மைகளல்ல. கவிதை, சிறுகதை ஆகிய துறைகளின் வளர்ச்சி கணிசமாக உள்ளன. இலக்கியத்தின் மற்ற துறைகளும், பத்திரிகைத்துறையும் (குறிப்பிட்ட காலம் வரை தரமுடையதாய் இருந்தது) கவிஞர் கூறுவதுபோல 'செழித்தோங்கு தமிழ் வளத்தைத்' தருவனவாக இல்லை. கவிஞர்கள் கற்பனையில் மிதப்பவர்கள்; ஆதலின் சில மிகைப்படுத்தப்பட்ட தகவல்கள் அவர்தம் கவிதைகளில் இடம்பெறும். ஆயினும் கவிஞரின் விழைவை அவை காட்டுவனவாகக் கொள்ளலாம்.

**புலமைத்திறம்:**

கவிஞர் பல நூல்களைப் படைத்தவர். பல இலக்கியங்களை ஆழமாகக் கற்றவர். அவருடைய பன்னூற் பயிற்சியும் இலக்கிய ஈடுபாடும் அவர் கையாளும் தொடர்களின் மூலம் அறியவரும். வருகைப் பருவத்தில் 'கொடுக்கும் செஞ்சொல் கொடை' எனத் தொடங்கும் பாடல், குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் இடம்பெறும் 'தொடுக்குங் கடவுட் பழம்பாடல்' என்ற பாடலை நினைவூட்டுகிறது. பல தொடர்கள் சங்க இலக்கியத் தொடர்களை நினைவூட்டுகின்றன.

அம்புலிப்பருவத்தில் பாரதியின் தொடரைப் பயன்படுத்துவதனையும் காணலாம்.

"இத்தனை கூறியும் மொத்தமும் கெடுப்பையோ?
இணரெரி தீக்குஞ்சுபோல்" (அம்புலி - 10)

'தீக்குஞ்சு' என்னும் சொல்லாட்சி பைந்தமிழ்ப்புலவன் பாரதியின் 'அக்கினிக்குஞ்சு' என்ற சொல்லாட்சியை ஒத்துள்ளது.

அம்புலிப்பருவம் கவிஞரின் புலமைக்குக் கட்டியம் கூறுவதாய் அமைகிறது. பல நயமிக்க பாடல்கள் இப்பகுதியில் இடம்பெறுகின்றன. வானத்தின் நெற்றியில் வைத்த திலகம்போல் அம்புலி இருக்கின்றது. இதனை "வானத்தின் நெற்றியில் வைத்தொளிர் பொட்டுப்போல்" என்னும் உவமை வழி வருணிப்பர். அம்மையின் முறுவலொளி அம்புலியை ஒத்திருப்பது (அம்புலி 2) என உவமிப்பது நயமுடைய பகுதியாகும்.

அம்புலிக்கும் அம்மைக்கும் உள்ள வேறுபாடு பல பிள்ளைத்தமிழ்க் கவிஞர்கள் காட்டும் பொதுவான செய்தியே! ஆயினும் அம்புலியை விளையாட வருமாறு அழைத்து அம்மையின் அருட்செயல்களை விளக்கும் (தானம்) பகுதி நகைச்சுவை நயமும் இலக்கிய நயமும் ஒருங்கே அமைந்த பகுதியாம்.

"திருடரைப் போலநீ இரவினில் வருகிறாய்
திறலொளி தந்தும்கூட
சிறுமுயல் களங்கமோ! தீராத களங்கமோ?
சிரிப்பிற்கே உள்ளாகினாய்!
கருடனை நலமாநீ எனநவின் றிட்டரவக்
கருத்தினைப் போலஅண்டக்
ககனவெளியிலே மிகவே தெரிதலால்
கவர்ந்தாய் உலகோரையே"

(அம்புலி - 6)

இயற்கையாக நிகழும் நிகழ்ச்சியில், புலவர் தன் குறிப்பை ஏற்றி அழகுபடப் பாடியுள்ள இப்பாடல் தற்குறிப்பேற்ற அணியின் பாற்படும்.

அம்புலிப் பருவத்தே அம்மையின் ஈடிணையிலா அருட்டிறத்தை அடுக்குவமைகளால் வருணிப்பர் கவிஞர். இலக்கியத்தின் பயனை அவர் உவமித்திருப்பது இலக்கிய இன்பந்தரும் பகுதியாம்.

"பொருள்மேவு இலக்கியம் புரிநகைத் தன்மைபோல்
புன்மையிருள் ஓட்டுதல்போல்
புகழ்மேவு நற்றெண்டர் வெள்ளை யுள்ளம்போல்
புண்ணியக் கருவினைப்போல்
தெருண்மேவு கண்ணியத் திரவியத் தினைப்போல்
செங்கழனி விளைவினைப்போல
தெவிட்டாத செங்கனி அங்கையில் தந்தபோல்
சிவனருட் பேற்றினைப்போல்"

(அம்புலி - 3)

இலக்கியங்களில் சமகாலச் செய்திகள் இடம்பெறுவது இயல்பு. இவ்வடிப்டையில் காலத்துக்கேற்ற கருத்தினைப் புதுமைநோக்கில் வெளியிட்டுள்ளார் ஆசிரியர்.

"மாசினை அடைந்ததைநீ! மதியெனும் பெயரினை
மதியாத வையகத்தார்
மாபெரும் அமெரிக்க உருசியநன் ஞட்டினர்
மாவடி தாவிவைத்தே
தேசினைத் தீண்டினர் திருமுகம்தோண்டினர்
செயல்பல செய்து வென்றார்
தினமும் இதனைஆம் மனதினில் நினைத்திடத்
திறவெற்றிக் கொடியும்நட்டார்"

(அம்புலி - 8)

சந்திரனில் இருபெரு வல்லரசுகளான அமெரிக்காவும், உருசியாவும் பல சோதனைகள் செய்து சாதனை படைத்தனர். 'உன்னை மதித்தாரிலர்'. ஆகலின் அன்னையோடு விளையாடி அருள்பெறுக என்றழைப்பது புதுமையாகும்.

'தண்டம்' என்ற உத்தியின் மூலம் அம்பிகையின் அருட்டிறத்தையும், அறிவியலாருக்கு ஆய்வுப்பொருளாக உள்ள அம்புலியின் நிலையையும் சிறப்புறப் பாடுவர். இப்பாடலும் நினைந்து இன்புறத்தக்கது.

"நம்புநீ உனையவள் வெம்பிடச் செய்வகை
நயமூ லிகைபெற்றுளாள்
அன்னமுண்பா ற்சோற் றுருண்டைபோல் நீயுளாய்
அவள்நினைத் தாலெடுத்தே
அறிவியல் விஞ்ஞானிகள் ஆராய்ச்சிக் களிப்பள்காண்
அப்புறம் உன்முதுகில்
பன்னாட்டு மக்களும் தந்நிலம் வாங்குவர்
பரிதியும் ஒளிவழங்கான்"

*(அம்புலி - 9)*

இன்றைய அறிவியல் உலகிற்கேற்ப அம்புலியை அச்சுறுத்துகிறார் கவிஞர்.

அம்புலியின் அறியாமையை எண்ணி நகைக்கிறார் கவிஞர். இப்பகுதி கற்பார்க்குச் சுவைபயப்பதாகும்.

"முத்திக்கு முதலவள் சித்திக்குக் கருஅவள்
முதிர்ஐங் குழல்பின்னலே
முன்னர வாகநீ எண்ணினாய் என்றுயாம்
முற்கூறிசினம் மாற்றினோம்"

*(அம்புலி - 10)*

அம்புலிக்காகக் கவிஞர் அம்மையிடம் பொய்கூறினார்.

முத்தப்பருவத்தில் ஆசிரியரின் கற்பனை வளத்தைக் காணலாம். முத்தின் வகைகளைக் கூறும் ஆசிரியர் இயற்கைப்பொருட்கள் ஒன்றுக்கொன்று முத்தமிடுவதாகக் கற்பனை செய்துள்ளார் கவிஞர்.

"வாரிமுத் தம்நில மங்கை முத்தமிட
வான்நிலா முகிலுமுத்த
வாய்முத் தம்வேண்டிய தாய்முத்தம் பெற்றசேய்
வளர்முத்தம் மேலும்வேண்ட
நாரில்முத் தம்மிடும் நன்மலர் தேன்முத்த
நஞ்செயில் செழுமைமுத்த
நன்னெறி செந்நெறி பன்னல முத்தமாய்
நாளெலாம் உறவுமுத்த"

என முத்தின் வகைகளேயும், கடல் நிலமங்கைக்கும்; வானத்து நிலா மேகத்துக்கும் முத்தந்தரும் காட்சிகளேயும் காட்டுகிருர். இற்றைநாள் வரை பிள்ளேத்தமிழ் பாடிய கவிஞர்கள் 'கலவிமுத்தத்தைக்' குறித்தாரிலர். ஆயின் இப்புலவர் வெளிப்படையாகப் புணர்ச்சியின் போது அரும்புகின்ற முத்து விழுந்து, அறிய இயலா விதத்தில் கரு தங்கிப் பின் குழந்தையாக மாறுவதனேக் காட்டுகிருர். முன்னுள் பிள்ளேத்தமிழ்ப் பாவலர்களினின்று இப்புலவர் வேறுபட்டாலும் இச்செய்தியைத் தவிர்த்திருக்கலாம். உயர்ந்த தெய்வத்தைப் பாடும் கவிஞர் - அம்மையின் முத்தம் விலேமதிப்பற்றது; உயர்ந்தது எனக் கூறும் வேளேயில் கலவியில் உண்டான முத்தைக் (தெய்வத்தோடு ஒப்பிடுகையில் இழிந்தது) காட்டுவது குற்றமாகும். மழலேயின் முத்தம் உயர்ந்தது எனக் கூறுவதோடு நிறுத்தியிருக்கலாம். மழலே எவ்வாறு உருவாகிறது என விளக்கத் தேவையில்லே. அது இலக்கிய நாகரிகம் அன்று. இலேமறைகாயாகப் பாடினும் கூட அது "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலே"13 என ஒல்காப்புலமைத் தொல்காப்பியர் தரும் உவமஇயல் விதியை மீறுவதாகும்.

கவிஞருடைய இந்நூலில் சில மலாய்ச்சொற்கள் கையாளப்பட்டுள்ளன. தமிழ்நாட்டவராயினும் ஆசிரியருக்கு மலாய்மொழிப்பயிற்சி உண்டு போலும்!

சுருங்கக்கூறின் இந்நூலில் சில பருவங்களில் மகுடங்கள் வேறுபட்டிருப்பதைக் காணலாம்; எடுத்துக்காட்டாகச் செங்கீரைப் பருவத்தில் 'ஆடுக செங்கீரை' என்றும்; 'செங்கீரையாடியருளே' என்றும்; சப்பாணிப்பருவத்தில் 'கொட்டுக சப்பாணி' 'சப்பாணி கொட்டியருளே' என்றும் அமைகின்றன.

## பத்துமலையான் பிள்ளைத்தமிழ்

பத்துமலையில் கோயில் கொண்டிருக்கும் முருகப் பெருமானைப் பாட்டுடைத்தலைவராக்கிப் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார் கவிஞர் டி. வி. ஆர். பி. இராகவன்பிள்ளை. தமிழுக்கே உரிய இப்பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையுள் முருகன் மீது பாடப்பட்ட நூல்களே மிகுதி. தமிழ்க்கடவுளாம் குமரக்கடவுளைக் கொஞ்சுதமிழால் பாடி மகிழ்ந்தனர் புலவர்கள். ஆகலின் இவ்விலக்கியவகை பெருகிற்று. மலேசியாவிலும் கவிதை மரபில் தோய்ந்த புலவர்கள் இவ்விலக்கியவகையைப் படைத்தனர்.

***நூலமைப்பு:***

ஏனைய பிள்ளைத்தமிழ் நூல்களைப் போன்ற அமைப்புடன் ஆசிரிய விருத்தத்திலேயே பாடியுள்ளார். கோலாலம்பூர் மகாமாரியம்மன் பிள்ளைத்தமிழைப் போன்றே நூலின் ஒவ்வொரு பாடலுக்கும் தலைப்புத் தரப்பட்டுள்ளது. பெரும்பாலும் பாடலின் முதலடியே தலைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

***மலையமண்ணின் வளம்:***

ஓர் எழுத்தாளன் இடம், காலம், சமுதாயம் ஆகியவற்றைப் புறகணித்துவிட்டுப் படைப்பிலக்கியத்தை உருவாக்கினுல் அவ்விலக்கியம் சமுதாயத்திற்கு நன்மையளிக்காது. இம்மூன்றுள் குறைந்தது ஏதேனும் ஒன்ருவது இடம்-

பெற வேண்டும். இவ்வடிப்படையில் மலேசியநாட்டை இடப்பின்னணியாகக் கொண்டு கவிஞர் மலைநாட்டின் மாண்பைப் பல பாடல்களில் பாடியுள்ளார். மலையக-மண்ணின் கலை, பண்பாடு, இயற்கைவளம், பொலிவு, ஒற்-றுமை ஆகியவற்றைப் பல கோணங்களில் பாடியுள்ளார்.

தமிழ்ப்பற்று:

குறிஞ்சி நிலக் கடவுள் முருகன். இவனே தமிழ்த்தெய்-வம். தமிழ்க்கடவுள் மீது பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் ஆதலால் கவிஞரின் தமிழுணர்வும் மேலோங்கி நிற்கிறது. தமிழை ஆசிரியர் அடைகொடுத்து அழைக்கும் பாங்கு உள்ளுந்தொறும் உளம்கனிவிப்பது. முருகனுடைய முத்தம் வேண்டும் ஆசிரியர் தமிழுணர்வைக் கீழ்க்கண்டவாறு பாடியுள்ளார்.

"தமிழ்முத்தம் இடுகின்ற சஞ்சிகைகள் நாடோறும்
தகுதியொடு தழைக்கவைத்துக்
கலைமுத்தம் இடுகின்ற மலையகம் மாண்புறக்
கருணைசால் முத்தமருளே"
(முத்தப்பருவம் - 9)

கவிஞரின் தமிழ்நெஞ்சத்தைக் காட்டும் பகுதியாகும் இது.

தமிழ்க்கடவுளைப் பாடாத இலக்கியங்கள் பயனில் இலக்கியங்களே எனக் கருதும் ஆசிரியர், குமரக்கடவுளின் அருட்டிறத்தைப் பல பாடல்களில் விதந்து பாடியுள்ளார். முருகனைப் பாடும் இலக்கியங்களுள் சிலவற்றைக் கவிஞர் பட்டியலிட்டும் காட்டியுள்ளார்.

"முருகுமிகு நக்கீரர் ஆற்றியருள் பெற்றதிரு
முருகாற்றுப் படையினோடு
முந்துபுகழ் தந்ததிரு குமர குரு பரருதிர்
பெருமைமிகு கந்தரநு பூதியும், கவசமும்

பீடு தரு மந்தாதியும்
பேர்பெற்ற வண்ணங்கள் உதிர்கின்ற கவின்மிகும்
பெரியநன் னூல்களெல்லாம்"
*(சிறுபறை - 1)*

இப்பாடற்பகுதியில் 'குமரகுருபரர் உதிர் பெருமைமிகு கந்தரநுபூதியும்' எனக் குறிப்பிட்டுள்ளார். அருணகிரிநாதர் பாடியதன்றோ கந்தரநுபூதி? ஆசிரியர் இங்கே தவருகக் குறிப்பிட்டுள்ளார்.

**சந்தநயம்:**

கவிதைகளுக்கு உயிர் போல்வது சந்தம். 'ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பம்' என்று பாரதி போற்றுவர். சந்தச் சிறப்பை இப்பிள்ளைத்தமிழில் நிரம்பக் காணலாம். இதற்குச் சான்ருகப் பல சந்தவிருத்தங்கள் அமைந்துள்ளன. இரட்டைக்கிளவிகளைக் கையாண்டு ஓசையின்பம் சேர்த்துள்ளார் கவிஞர்.

**கவிஞர் நெஞ்சம்:**

முருகனிடம் முத்தம் வேண்டும் வேளையில் நாடுநலம்பெறவும், ஒற்றுமை தழைத்தோங்கவும் முத்தம் வேண்டுகிருர். இவ்வேண்டுதல் கவிஞரின் நல்லுள்ளம் காட்டுவதாகும்.

"வற்ருத நதிகளும் மலைநாட்டில் வலம்வந்து
வளமூட்டி ஒழுகுதற்கும்
வான்கொண்ட மேகங்கள் காலத்தைத் தவருது
வாரிநீர் பொழிவதற்கும்
கற்ருரை அன்போடு போற்றிமகிழ் வூட்டிடும்
கண்ணியம் காப்பதற்கும்
கல்வியில் புகழோடு கற்றுபுகழ் பெற்றிடக்
கவனமாய் வாழ்வதற்கும்
உற்ருரும் உறவினரும் நாட்டினரும் மூவினமு

மொன்ருக வாழ்வதற்கும்
உயர்வான வணிகமும் வளமான தொழில்களும்
ஓங்குநிலே காண்பதற்கும்
முற்ருக வந்துவர மருள்கின்ற பரிவுசால்
முருகனே முத்தமருளே"

(முத்தம் - 10)

பத்துமலேயான் பிள்ளேத்தமிழ் பக்திநலம் கெழுமிய நூல். முருகன் எழில் வடிவையும், அருள்வடிவையும் அழகொழுகப் பாடியுள்ளார் கவிஞர். இப்பகுதிகள் முருகனே 'அருள்வாரிதி' என உணர்த்துவதோடு பக்திப்பரவசத்தில் நம்மையும் ஆழ்த்துகின்றன. ஆகலின் இந்நூலேப் பக்திநலம் கெழுமிய நூல் எனச் சாற்றுவதில் தவறில்லே.

இறைவன் பிறவிப்பிணி தீர்க்கும் மருத்துவன் மட்டுமல்லன். உடற்பிணி மற்றும் உளப்பிணி போக்கும் ஆற்றலன். ஆகவேதான் இறைவனே 'வைத்தீசுவரன்' என்பர். தீராதநோய்களெல்லாம் தீர்க்கும் ஆற்றலுடையவன். முருகனின் இப்பண்பை வருகைப்பருவத்தில் திறம்படப் பாடுவர் கவிஞர்.

"கண்கெட்ட மக்கட்குக் கண்ணெளி யளிக்கவும்
கால்கள்முட மானவர்க்குக்
கால்களே யளித்துனது சன்னதியில் வருவதற்குக்
கால்களேத் தருவதற்கும்
புண்பட்ட நெஞ்சினர் பண்பட்டு வாழ்வினில்
பொலிவுற்று வாழ்வதற்கும்
புத்திரர் இல்லாத மக்கட்கு வாழ்வினியப்
புத்திரபாக் கியத்தை நல்கித்
தென்பட்ட வினேயகல முற்பட்டு வாழ்விலொளி
சேர்த்துநல மூட்டுதற்கும்"

(வருகை - 5)

முருகனே வருமாறு அழைக்கிருர் பாவலர். இவ்வழைப்பு கவிஞரின் பொதுநலவுணர்வை வெளிக்காட்டுவதாகும்.

எளிய உவமைகள், கருத்தாழம் மிக்க கற்பனைகள் ஆகியவை கவிஞரின் கவிதைநெஞ்சத்தைக் காட்டுகின்றன. கவிஞர், முருகனுக்கு ஏவல்செய்யும் பேற்றினையும் வேண்டு-கிறார்.

"செம்மல் நீவந் தருள்செய்யின்
ஏவல் புரிந்தே எளியேன் வாழ்வேன்"

*(சிற்றில் - 6)*

பத்துமலை, மலேசியா ஆகியவற்றின் சிறப்புக்களைக் கவிஞர் மிக விரிவாகப் பாடியுள்ளார். குன்றுதோறாடும் குமரன் பத்துமலையில் எழுந்தருளிப் பக்திநலம் கனிவிக்கும் மாண்பை, குறிஞ்சித்தமிழின் இனிமையை இந்நூலில் காணலாம். கவிஞர் இளஞ்செழியன், கவிஞர் ஐ. உலக-நாதன் ஆகியோர் அணிந்துரைகளிலே கூறியுள்ளது போலக் கவிஞரின் திறம் நம்மைக் கவர்ந்திழுக்கின்றது.

"தவமிருந்தால் கவிதைவரும்! ஆனால், நீங்கள்
தரும்கவிதை கலைமகளின் வரமோ? நல்லோர்
செவிகுளிரக் கவிதைத்தேன் பாய்ச்சு கின்ற
செந்தமிழின் அடலேறு நீங்கள் என்பேன்"

*(அணிந்துரை, ப-5)*

"மாந்தனைப் பாடிமனம் சலித்துப் போனதால்
ஏந்துமுயர் தெய்வத்தை ஏந்தியே - தீந்தமிழில்
பீடுமிகு ராகவன் பிள்ளைத் தமிழ்தந்தான்
ஏடு கமழ்ந்திருக்க ஏற்று"

*(அணிந்துரை, ப-6)*

## பாவாணர் பிள்ளைத்தமிழ்

மொழியியல் ஆய்வில் ஒப்பற்றவர் பாவாணர்! 'மொழி ஞாயிறு' எனப் போற்றப்படும் புகழாளர்! தமிழ்ச்சொற்கள் பல வடமொழியினின்று உருவானவை என்ற அறியாமையில் ஆழ்ந்துகிடந்த தமிழருக்குத் தமிழ்மொழிச்சொற்களே அவை எனத் தக்க சான்றுகளோடு அறிவுகொளுத்திய மூதறிஞர் அவர். அன்னாரிடம் அளப்பரும் பற்றுக்கொண்ட 'செந்தமிழ்ச்சித்தர்' பெ.கோ.மலையரசன் பாவாணர் பிள்ளைத்தமிழ் எனும் நல்ல, தரமான பிள்ளைத்தமிழ் இலக்கியத்தைப் படைத்துள்ளார்.

### நூலின் நோக்கம்:

'மொழி இனத்தின் விழி' என ஆண்டாண்டுதோறும் அறிவுடைப்பெருமக்கள் அறைகூவல் விடுத்தும் மொழியையும் இனமானத்தையும் இழந்துகொண்டுவரும் தமிழர்களுக்கு அறிவுகொளுத்தக்கூடிய வகையில் இந்நூலைப் பாடியுள்ளார் ஆசிரியர். இந்நூலில் அமைந்துள்ள ஒவ்வொரு பாடலும் - ஒவ்வொரு சொல்லும் தமிழினவுணர்வையும் தமிழ்மொழியுணர்வையும் தாங்கி வருகின்றன. கவிஞரின் இனவுணர்வும் மொழியுணர்வும் பீறிட்டு வெளிப்படும் போக்கை இப்பிள்ளைத்தமிழில் காண்கிறோம். இதுவே கவிஞரின் பெருநோக்கமாம். படையல் என்னும் பகுதி கவிஞரின் உயர்நோக்கைச் சிறப்புறக் காட்டுகிறது.

"நெருப்பாற்றில் மூழ்கிடினும்
நினைவாற்றில் மனமுருகி
நெஞ்சொடிந்தும் இனம்தழைக்கத் தொண்டு!
பொருப்பாற்றல் கொண்டுமனம்
புகழாற்றில் வீறயினம்
புதுமையுறும் வழிமுறைகள் கண்டு!
உருப்பாற்றல் அழிவுறினும்
உயிராற்றல் மடிவுறினும்
உயிர்த்தமிழின் பீடெல்லாம் விண்டு,

விருப்பாற்றும் இனம் - மொழியின்
விடுதலையர்க் கிந்நூலே
விருந்தோம்பும் படையல்; பூச் செண்டு"

**காப்புப்பருவப்புதுமை:**

'தனித்தமிழ் எங்கள் அணித்தமிழ்' என்பது பாவாணர் கோட்பாடு. தனித்தமிழ் வளர்ச்சிக்கு அன்னூர் ஆற்றிய பணிகள் குறித்து அச்சான்ருேரைத் "தமிழ்மீட்பர்" என்றழைப்பர். 'சாவிலும் தமிழ்நலம் காத்திடும்' பாவாணரைப் பாட்டுடைத்தலைவராய்க்கொண்ட இப்பிள்ளைத்தமிழ் காப்புப்பருவத்தில் பெரும் புதுமை கொண்டிலங்குவது. கவிஞர் பெ.கோ. மலையரசன் திராவிடக்கழகத்தைச் சார்ந்தவர்; ஆதலின் இறைநம்பிக்கை அவருக்கில்லை. ஆகவே காப்புப்பருவத்தில் கடவுளரைப் பாடாது விடுத்தாரோ? என்ற ஐயம் பலருக்கு எழ வாய்ப்புண்டு. ஆனுல் உண்மையில் கவிஞர் மலையரசனின் கனிந்த தமிழ்ப்பற்றைக் கருத்தில்கொண்டு, காப்புப்பருவத்தைக் கற்ருல் கடவுள் மறுப்புக்கொள்கை புலப்படுவதில்லை. ஏற்றமிகு இயற்கை வழிபாடே - தமிழரின் இயற்கை வழிபாட்டு நெறியே புலப்படும். தமிழர் இயற்கையோடு இயைந்த வாழ்வினர். அவர்களின் எண்ணம், பண்பாடு, நாகரிகம் ஆகிய அனைத்துக் கூறுகளும் இயற்கையையொட்டி அமைந்திருந்தன. இதனைச் சங்க இலக்கியங்கள் சால்புறச் சாற்றும். ஆகவே தமிழரின் வழிபாட்டு நெறி இயற்கையை வழிபடுவதே என்ற அடிப்படையில் காப்புப்பருவத்தில் தேவநேயப்பாவாணராகிய குழந்தையைக் காக்குமாறு கதிர், நிலா, கடல், நிலன், விசும்பு, தண்ணீர், நெருப்பு, தென்றல், மரம் ஆகிய இயற்கைப் பொருட்களை வேண்டுவர்.

மேலும் காப்புப்பருவத்திலே சான்ருேர், மக்கள் ஆகியோர் குழந்தையைக் காக்குமாறு வேண்டிப் பாடுவது முற்றிலும் புதுமை. ஏராளமான தமிழ்ப்புலவர்கள் வாழ்ந்திருப்பினும் சில புலவர்களை மட்டுமே காக்குமாறு வேண்டுகிருர்.

"வள்ளுவமும் வாழ்சிலம்பும் மாப்பரணி மேகலையும்
மண்ணகம்வாழ் தமிழ்ப் பெயரால் ஆன்றீர்
தெள்ளுதமிழ் நக்கீர; திகழ்மருத இளநாக
செழுந்தமிழ்ப் பெருவழுதிச் சான்றீர்!
புல்லுதமிழ் பூங்குன்ற; பொன்முல்லை மாசாத்தி
புகழவ்வை; நப்பசலை தோன்றீர்"

எனத் தன்னுள்ளங்கவர் புலவர்பெருமக்களிடம் காப்பு வேண்டுவர். இப்புலவர்களின் பொன்மணிச்சிந்தனைகள் பொன்றுது நிற்பவை; குன்றுது வாழ்பவை. ஆகவே கவிஞரின் உள்ளத்தைப் பிணித்தன.

கவிஞர் தமிழ் மக்களைக் காக்குமாறு வேண்டுவதற்குக் காரணம் உண்டு. பாவாணர் வாழ்ந்த காலத்தில் அப்பேரறிஞரைத் தமிழர்கள் பேண மறந்தனர். அன்னுரை இனங்கண்டுகொள்ள மறுத்தனர். ஆகவே அவருடைய மறைவுக்குப் பின்னுவது அவருடைய மாண்புகளை அறிந்து; தமிழுக்கும், தமிழினத்துக்கும் அப்பெருமகன் கொடையாகத் தந்த கருத்துக்களை மதித்து நடப்பதே தமிழ்மக்கள் அன்னுருக்குச் செய்யும் கைம்மாருகும். அன்னுர் வாழ்ந்த காலத்தில் காக்க மறந்த மக்கள், தன் கற்பனையில் குழந்தையாகப் பிறந்த பாவாணரைக் காக்கவேண்டும் என்ற விழைவுடனே மக்களிடம் காப்பு வேண்டுகிருர்.

**பாடல் எண்ணிக்கையில் புதுமை:**

பிள்ளைத்தமிழில் பத்துப்பருவங்களுக்குப் பத்துப்பாடல்கள் வீதம் நூறு பாடல்கள் பாடுவதே மரபு. ஆயின் இப்பிள்ளைத்தமிழில் காப்புப்பருவம், முத்தப்பருவம், சிறுதேர்ப்பருவம் ஆகிய மூன்று பருவங்களும் பன்னிரண்டு பாடல்கள் வீதம் பாடப்பட்டுள்ளன. தான் சொல்லவிழைந்த கருத்துக்கள் அனைத்தையும் சொல்லிவிடவேண்டும் என்ற வேட்கையில் எண்ணிக்கை மீறினுர் போலும்! கவிஞனுடைய கற்பனைகளைத் தடைப்படுத்தி இன்னவாறு பாடவேண்டும் என்ற கட்டுப்பாடுகள் விதித்தால் உயி-

ரோட்டம் மிக்க கவிதையை நாம் காணமுடியாது. இலக்கணங்களுக்கு இயையச் 'செய்யப்பட்ட' செய்யுளைத்தான் காணமுடியும்; ஆகவே எண்ணிக்கை மிகுதி கவிஞரின் ஆற்றலையே காட்டுகிறது.

**நூலின் சிறப்பு:**

இந்நூலின் பாட்டுடைத்தலைவர் தேவநேயப்பாவாணர். மலேசியத் தமிழர்கள் பலர் பாவாணர் என்ற பெயரை அறியார். தமிழ் இலக்கண அறிஞர்கள்கூடப் பாவாணரை அறியாத கொடுமையை என்னென்பது! மலேசியத் தமிழர்களுள் பகுத்தறிவுச் சிந்தனையுடைய சிலருக்கும், திராவிடக் கழகத்தாருக்கும், உண்மையான தமிழ்மொழிப்பற்றும் தமிழினப்பற்றும் கொண்டாருக்கும் மட்டுமே தேவநேயப்பாவாணரின் சிறந்த தொண்டுகள் தெரியவரும். அறியாமையில் உழன்று கொண்டிருக்கும் மடமைச்சமுதாயத்திற்கு அறிவூட்டத் துணிந்து பெ.கோ. மலையரசன் இப்பிள்ளைத்தமிழைப் படைத்துள்ளார்.

மொழி, இனம் ஆகியவற்றின் மாண்புகளை மறந்து ஆமைபோல அடங்கி வாழ்வாரைப் புலிபோலப் பாயவைக்கும் பண்பினை இந்நூலில் காண்கிறோம். இந்நூல் 'பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடர்களை' விழிபெறச் செய்வதோடு மட்டுமன்றி ஒளியையும் ஊட்டுகிறது. தேவநேயப்பாவாணர் பாவேந்தர்பாரதிதாசனைப் போலத் தமிழே உருவானவர். தமிழினவெழுச்சிக்கு மொழி வழியே பாடுபட்டவர். அவருக்கு இன்னல்கள் விளைவித்த சமுதாய நிலையை,

"நேர்சொல் லற்றவர்; புறஞ்சொல் கற்றவர்;
　　நீடும் தமிழின நெறியற்றார்!
நெறியெலாம் கற்றும், பெருவள வாழ்க்கை
　　நிலைப்புற தம்மனம் குறியுற்றார்!
ஊர்பேர் விற்பார்; உயர்பண் பற்றார்;

உறுபகை யிடமே மனம்விற்ருர்!
ஒண்டமிழ் இனம்மொழி தாழ்த்திப் பகையிடம்
உறுபொரு ளென்னும் பணம்பெற்ருர்!"

(தாலப்ருவம் - 2)

என்று பாடுவர். இந்நிலை இன்றும் மலையகத்திலும் நிலவுதல் கண்டு பாவாணர் பிள்ளைத்தமிழ் வழியே குமுறுகிருர் பாவலர். இந்திய விடுதலைக்கு முன்பு பாரதநிலையைப் பற்றிப் பாரதி பாடியது போல இக்கால அவலநிலைக்கு இரங்கிப் பாடும் போக்கு இப்பாடலில் எதிரொலிக்கிறது.

தமிழ்மொழிப்பற்று:

பாவாணரின் மாணவராம் பாவலர் மலையரசன் கொண்ட தமிழ்ப்பற்றுக்கு இப்பிள்ளைத்தமிழே சான்ரும். பாவாணரை அவர் தமிழுருவாகவே காட்டுகிருர். இக்காட்சி பாவாணரை மட்டும் காட்டுவதாயன்றி மலையரசனின் தமிழ்ப்பற்றையும் காட்டுவதாக அமைகிறது.

"கண்டதுவும் தமிழாகும்! கேட்டதுவும் தமிழாகும்!
கருதுமொரு எண்ணமெலாம் தமிழாம்!
கருத்தொருமை கொண்டதுவும், கருதியல்சீர்
(வென்றதுவும்,
கவினுலகில் தமிழென்னும் அமிழ்தாம்!
உண்டதுவும், உயிர்த்ததுவும், ஒப்புரவில் வாழ்ந்ததுவும்,
உளுற்றுவினை நும்உருவும் தமிழ்தாம்!
உயிர், என்பு, தசையோடு உயிர்ப்புனலும் கலந்தோடி
உள்ளலெலாம் உயர்வுள்ளல் தமிழ்தாம்!
விண்டதுவும், உலகுக்கு விரித்ததுவும், பகையிரிந்து
விரைந்தோட துணைகொண்ட தமிழ்தாம்!"

(சிறுதேர் - 9)

பாவாணரின் பைந்தமிழ்ப்பற்று வெளியிடப்படும் மாட்சி-தாம் என்னே! இக்காட்சி பாவலரின் பைந்தமிழாட்சிக்குத் தக்கதொரு சாட்சியாம்! பாவாணரின் தமிழ்ப்பணியையும் தமிழுருவையும் மலையரசன் சித்திரிக்கும் திறம்,

"கண்ணுன தமிழ் மறைந்தால்
கருகாதோ தமிழர் வாழ்வே"15

என்னும் பாவேந்தரின் சிந்தனையை நினைவூட்டுகிறது.

பாவாணர் கலைச்சொல்லாய்வின் கலங்கரை விளக்கு. தமிழ்ச்சொற்களை எல்லாம் வடமொழியிலிருந்து வந்தவை எனக் கருதிய பேடிகளுக்கு 'வந்தவர் மொழியா? செந்-தமிழ்ச்செல்வமா? என்னும் கட்டுரைத்தொடரைத் தம்-முடைய 'குயில்' இலக்கிய ஏட்டில் எழுதி வெளியிட்ட பாவேந்தரைப்போலத் தேவநேயப்பாவாணரும் சொல்-லாய்வுக்கட்டுரைகள் என்னும் நூலில் பல வேர்ச்சொற்-களையும், தமிழ்ச்சொற்களையும் காட்டித் தமிழரின் அறி-யாமை இருளை அகற்றினுர். இப்பணியைப் பாவலர் மலையரசன் அழகுறப் பாடுகிறுர்.

"தமிழுக்கும் திரவிட மொழிக்கும் உற்றதோர்
தகவுசால் தொடர்புகள் ஈண்டும்
திரவிடம் தமிழும், உடலும் உயிருமாய்
திகழ்ந்திடல் உண்மையாம் யாண்டும்!
தமிழ்திர விடமெனில் உயிருடல்! ஆரியம்
திரவிடம் தழுவிய ஆடை!
தமிழியல் மூவிட, எண்பெயர் - திரவிடம்
தழுவுகை காண்;தமி ழோடை!
தமிழ்வேர்ச் சொற்கள் நூற்றிலொன் பஃதாய்
திரவிடம் கொண்டதும் உண்மை!"
(முத்தப்பருவம் - 11)

என்னும் பாடலில் பாவாணரின் ஆய்வுமுடிவுகளை அமைவுறக் காட்டுவர்.

பாவாணருக்குப் பிறகும், கல்வி கற்றோர் - அறிஞர் கலைச்சொல்லாக்கத்தில் ஈடுபட்டாரிலர். அவ்வாறு அவர்கள் ஈடுபட்டாலும் அந்த ஆய்வால் பயனிராது. அழகிய ஓவியத்தைக் குருடன் மதிப்பிடுவது போலவும் பெற்ற தாயைக் காக்க மறந்தவன் போலவும் மொழிப்பற்று இன்றிச் செய்யப்படும் ஆய்வினால் பயன்விளையாது எனக் கலைச்சொல்லாக்க ஆய்வு பற்றியும், பாவாணரின் தலைமை பற்றியும் பொருத்தமுறப் பாடுவர்.

"கற்றுளர் ஆயினும் கண்டவ ரெல்லாம்
கவின்கலை யாக்கச் சொற்கள்
கருதியல் நோக்கில் பொருளியல் பூக்கக்
காண்குவ ராவரேல், புற்கள்!
பற்றிலன் தமிழ்பால் பயனுறு கலைச்சொல்
படைத்திடல் எவ்வகை சாலும்!"
*(முத்தப்பருவம் - 10)*

தேவநேயரின் ஆய்வு முடிவுகள் ஒன்றிணைக்கப்பட்டுத் தொகுக்கப்படவேண்டும் என்னும் கவிஞரின் நல்விழைவு, அவர், பாவாணரிடம் கொண்ட ஆழ்ந்த பற்றைக் காட்டு-வதாகும். மேலும் பாவாணரின் ஆய்வு முடிபுகளைத் தமி-ழர்கள் அனைவரும் அறியவேண்டும் என்ற அடிப்படை-யிலும் இவ்வாறு கவிஞர் கருதியிருக்கலாம்.

**தமிழுக்குத் தக்க இடம்:**

பாவேந்தர் பாரதிதாசன், தமிழக ஆட்சிப்பொறுப்பு எவ்வாறு அமையவேண்டும் என்பதை,

"நம்நாடு தமிழ்நாடு நாமெல்லாம் தமிழ்மக்கள்
இன்பம் கோரி
இந்நிலத்தில் வாழ்வதெனில் மூச்சாலே அம்மூச்சுத்
தமிழே! அந்தப்
பொன்னான தமிழாலே தமிழ்ச்சான்றோர் புகன்ற -
(தமிழ்ச்

சட்டம் ஒன்றே
இந்நாட்டை ஆண்டிடுதல் வேண்டுமதை இகழ்வானை
ஒழிக்க வேண்டும்"16

என வலியுறுத்துவர். பாவேந்தரின் கருத்திற்குப் பாவலர் மலையரசன் முழுமையான ஆதரவு தருகின்றார். ஆகவே அவரும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றார். அரசியல் ஒரு நாட்டுக்கு வேலி போன்றது. அவ்வேலி காப்பாக அமைய-வேண்டுமே தவிரப் பயிரை மேயக்கூடாது. ஆகவே அரசி-யலார் தமிழை வளர்ப்பதில் கண்ணுங்கருத்துமாகச் செயல்-படவேண்டுமே தவிரத், தமிழை அழிக்க எண்ணுவாருக்குத் துணைபோகக்கூடாது என்கின்றார்.

"தக்காராய் அமைபவர்கள் தமிழ்நிலத்தின் அரசியலார்
தண்டமிழைச் சீருறவே பேணுக்கால்,
தமிழுக்குப் பகையாகி சழக்குக்குத் துணைபோகி
தமிழியலின் தரம்கெடுத்தல் நாணுக்கால்"
(சிறுபறை - 8)

தமிழன் தமிழனாக வாழவேண்டுமெனில் தமிழும் தமிழ்ப்-பண்பாடும் வாழவேண்டியது அவசியமன்றோ?

"தமிழ் தமிழினம் தமிழி லக்கியம் இவற்றில்
ஒன்றுபோம் எனில் மற்றவும் ஒழியும்
நாட்டின் உரிமை காத்தல் வேண்டும்"17

என்னும் சிந்தனை பாவலரிடமும் ஒளிர்கின்றது.

பிறமொழிக்கலப்பு:

தமிழை வாழ்விக்க வேண்டுமாயின் பிறமொழியைத் தமிழில் கலக்கும் பேதைமையை விடவேண்டும். பிறமொழிக் கலப்பு தமிழில் பெருகுமாயின் அது தமிழுக்கே கேடு பயக்-கும் என உணர்த்தியவர் பாவாணர். இப்பாவாணரை நம் கவிஞர் 'தனித்தமிழில் மீமிசையின் வானே' எனப் போற்றிப்

பரவுகின்றார். தமிழிலே வடசொற்கலந்து எழுதும் வழக்கினைக் கவிஞர் கீழ்க்கண்டவாறு சாடுவர்.

"வழங்கலிலா நூன்மொழியாய்ப் பிறமொழியைச்
(சார்ந்தொழுகி
வாழுமோர் உண்ணிமொழி யாகும்"
(முத்தப்பருவம் - 5)

பிறமொழிக்கலப்பை எதிர்த்துப் பாவாணர் ஆற்றிய பணிகளை எண்ணி அன்னாரை வள்ளுவப் பெருமானோடும், இயேசு பெருமானோடும், கார்ல்மார்க்சோடும் ஒப்ப வைத்து எண்ணி மகிழ்கிறார். வள்ளுவர் உலக மீட்சிக்கு வழிசெய்தவர்! இயேசு சமயத்தை மீட்டவர். கார்ல்மார்க்சு தொழிலாளர் நலம் மீட்டவர். அதுபோலப் பாவாணரும் தமிழை மீட்டவர். இதனை,

"உள்ளுவதை எலாமுள்ளல் உயர்வுள்ளல் எனப்பகரும்
ஒப்புவமை இலாதகுறட் கோமான்
ஒப்புரவு, பண்பாடு, கலைவாழ்வு, வரலாறு
ஒழுங்குறவே வடிவமைத்த சீமான்!
சொல்லரிய கிறித்துவெனும் தொல்லுலகார்
(கொண்டாடும்
சமயத்தை மீட்பரெனும் இயேசு!

தொழிலாளர் மேன்மைக்கே உலகளாவ "காரல் மாக்சு"
தொட்டுழைத்து பட்டதுயர் மீட்பு!
வெல்லரிய தமிழின்கண் வேற்றுமொழி வார்த்தெழுதும்
வீணர்களின் செயற்பாட்டைக் கண்டு
வெங்களிறாய் ஆர்த்தெழுந்து வீறுறவே செந்தமிழை
மீட்டதுவுமாம் நும்மரிய தொண்டு"
(சிறுதேர் - 2)

எனப் பாடுவர்.

பிறமொழிக்கலப்பினால் தமிழ் சீர்குலைந்ததை வரலாற்று அடிப்படையில் காண்கின்றார் கவிஞர்.

"முற்காலம் தமிழ்கெடுத்தோன் பல்யாக சாலையெனும்
முதுகுடுமிப் பெருவழுதி யோடு,
முடிமன்னன் சோழனுடன், செங்கெழு குட்டுவனுய்
முத்தமிழ்க்கு பலர்செய்தார் கேடு!
தற்கால வரலாற்றில் - தமிழ்நலத்தில் இரண்டகம் செய்
சழக்குமன வையாபுரி யாரும்
தண்டமிழின் உட்பகையாம் தொ.பொ.மீ யுடனிணைந்த
தருக்கர்களால் தமிழெங்ஙன் தேரும்?
பொற்காலம் வள்ளுவனின் இடைவெளிக்குப்
(பின்இவற்றைப்
பூவுலகில் நீபிறந்த காலம்"
(சிறுதேர் - 6)

இப்பாடலில் தமிழ்நாட்டை ஆட்சிசெய்து தமிழுக்குக் கேடுநினைத்த அரசர்களையும், தமிழ்மண்ணிலே பிறந்து தமிழைக் கற்றுத் தமிழுக்கு மாறுபட்ட - ஒவ்வாத கருத்-துக்களைப் புகுத்திய ஆய்வாளர் வையாபுரிப்பிள்ளையையும்; தொ.பொ.மீனாட்சிசுந்தரனாரையும் பழிக்கின்றார் ஆசிரியர். அன்னாரின் பழிப்புரை, தன்மானமும் தமிழினமேம்பாடும் குருதியோடு கலந்துவிட்ட திராவிடக்கழகத்தாருக்கு உடன்-பாடாகும். மேலும் தமிழையே உயிர்மூச்சாகக் கருதும் - வாழும் தனித்தமிழ்ப் பற்றாளர்க்கும் உடன்பாடே! பாவேந்-தர் பாரதிதாசனும் இக்கருத்தினையே வலியுறுத்தியுள்ளமை இவண் நினையற்பாலது.

**தமிழாய்வர் நெறி:**

பாவாணர் ஆய்வர்களுக்கு நெறிகாட்டிய ஒளிவிளக்கு! ஆய்வென்பது - மொழியியல் ஆய்வென்பது எவ்வாறு அமையவேண்டும் என்பது தேவநேயப்பாவாணர் தந்த படிப்பினை. தமிழின் இயல்பினை உணர்த்திய இன்றமிழாய்-வைப் பாவாணர் இனிதுறச் செய்தார். இதனை,

"உலகின் மொழிகள் எலாவற் றுளுமே
ஒப்புறு செம்மைசால் வரம்புளது
ஓரியல் ஒழுங்கு பட்டதோர் சுட்டெனும்

உயர்வுடை சொற்களின் திறனுளது
துலங்குமாம் மோனை எதுகை விரவியே
தூய்தமிழ் விரிவுறும் ஒருயிர் திணைமுதல்
இலங்குபல் மொழிகளில் இலாததோர் பெற்றியம்
இன்தமிழ் உலகினில் கொண்டுளது
இனிய தனித்தமிழ்க் கலைச்சொன் முறைகளில்
எம்மனோர்க் காய்ந்துரை சொல்லுனது"
*(சிற்றில் - 10)*

எனப் பாடுவர் மலையரசன். பாவாணரின் சொல்லாராய்ச்சி முடிவுகள் ஆய்வுக்கு இலக்கணம் வகுப்பவை. இந்நூலின் பல பாடல்களில் பாவாணரின் ஆய்வுநெறியை விதந்து பலபடப் பாராட்டுவர் பாவலர் மலையரசன். ஆசிரியரிடம் மாணவர் கொண்ட அன்பின் காரணமாகப் புகழ்ந்துள்ளார் பாவலர் என்பதனினும் தமிழில் சொல்லாய்வுகள் பற்றிய முடிவுகள், அவற்றின் பயன்கள் ஆகியவற்றினுல் கவரப்பட்டே பாவலர் பாவாணரின் ஆய்வைப் புகழ்ந்துள்ளார் எனக்கோடல் சாலப்பொருந்தும்.

ஆய்வினுல் பல புதிய உண்மைகள் பிறக்கும்; தவருன கருத்துக்கள் தக்க சான்றுகள் மூலம் மறுக்கப்படும்; பல புதிய சிக்கல்கள் அறிமுகமாகும்; பல ஐயங்களைத் தெளிவிக்கும் என ஆய்வின் பயன்களை அடுக்கிக்கொண்டே செல்லலாம். இவ்வாறு பல பயன்களைத் தன்னகத்தே கொண்டது பாவாணரின் ஆய்வு. ஆகவேதான் பாவலர் மலையரசன்,

"வேரடித் தமிழின் மூலமே ஆய்ந்து
விளக்கிய வித்தகமே
வெம்பகை வேரடி ஆய்வினுல் மாய்ந்தது
விரிதமிழ் நித்திலமே"
*(செங்கீரை - 3)*

பாவாணரின் ஆய்வைப் பாராட்டும் வேளையில் இன்று ஆய்வுத் துறையில் நடக்கும் அநீதிகளைக் கண்டு

மனம்புழுங்கி வெம்புகிருர் கவிஞர். ஆய்வுத்துறையையும் பொருளீட்டும் கருவியாகக் கொண்டு வாழும் புன்மைநிலே; ஆய்வு என்ற பெயரிலே நடக்கும் அவல நாடகங்கள் ஆகியவற்றை இடித்துரைக்கிருர் கவிஞர். இந்நிலேயை

"புதுக்கலேச் சொற்கள் புதுக்கும் அறிஞரின்
புலமையை அறியினும் போற்ருதார்!
பொன்றும் குணத்தினர் குள்ள மனத்தினர்
பூந்தமிழ் தொண்டெதும் ஆற்ருதார்!
எதுகலேச் சொல்லென மதிதடு மாறிகள்
ஏளனம் செய்வதில் திறன்பெற்ருர்!
எண்ணமும் செயலும் காசே குறியதாய்
ஏந்தெழில் வாழ்வில் உரன்பெற்ருர்!
இதுகளே அறிஞராம்! இதுகளே ஆய்வராம்!
இதுகளால் தமிழ்பெறும் தீமையதால்
இனியொருக் காலும் தமிழெடுத் தாளா
திருக்கப் பண்ணுக வாய்மையதால்"
(சிற்றில் - 1)

எனும் பாடல் வேதனையுடன் வெளியிடுகின்றது. பொய்ம்மையும் மயக்கமும் மிக்க ஆய்வுகளால் பயனென்ன? ஆய்வரின் நோக்கம் உயர்ந்ததாய் இல்லாவிட்டால் மொழியடையும் தீமைகள் சொல்லுந்தரமோ? போலி ஆய்வர்களேக் கவிஞர் எள்ளி நகையாடுவதனையும் இப்பாடலில் நாம் காணலாம். கவிஞரின் நற்சிந்தனையும் இப்பாடலில் ஒளிரக் காண்கிருேம்.

பாவாணரின் ஆய்வினுல் பல 'ஆய்வுநாடகங்கள்' அழிந்தன என உளம்மகிழ்கிருர் கவிஞர்.

"நடலேயர் ஆற்றிய ஆய்வெனும் நாடகம்
நறுக்கென மடிந்தது உறுப்பழிந்து"
(சிறுபறை - 5)

தமிழ் மொழியின், தமிழினத்தின் தொன்மையையும், பெருமையையும் மறந்து அவற்றுக்கு ஒவ்வாத கருத்துக்களை, முற்றிலும் மாறான கருத்துக்களைத் தெரிவிப்பவர்களை 'நடலையர்' எனச் சுட்டுகிறார் கவிஞர். வையாபுரிப்பிள்ளை, தெ.பொ. மீனாட்சிசுந்தரம் ஆகிய இருவரையும் நடலையர் என்கிறார் கவிஞர் மலையரசன். அவ்விருவரின் ஆய்வுகளும் எத்திறத்தன என்பதைக் கீழ்க்கண்டவாறு பாடுவர் கவிஞர்.

"இனக்கே டானதோர் வையா புரியரின்
இனவழி ஆய்வினில் வாய்மையிலை!
இருமன நிலையினர் தமிழ்நலம் அழிம்புற
இயற்றிடும் ஆய்விலும் நேர்மையிலை!
குணக்கே டராம்தமிழ்ப் பணிக்கே டரால் பெருங்
குறையுறும் ஆய்வினால் பெருமையிலை!
கூர்ந்த மதியிலார் ஆற்றும் ஆய்வினால்
கொஞ்சு தமிழ்க்கினும் வருந்தொல்லை!"
*(சிற்றில் - 6)*

தமிழுக்கும் தமிழர்க்கும் கேடுவிளைவிக்கும் ஆய்வு-களைப் பற்றியும், அவ்வாய்வுகளை நடத்தும் அறிஞர்களைப் பற்றியும் பாவேந்தர் கூறியுள்ள கருத்து இவண் ஒப்பு-நோக்கத்தக்கது.

"நகும்படியோர் தமிழறிஞன் தமிழர்க்கின்னல்
நாடுவனேல் அவ்வறிஞன் முட்டாளாவான்
இகழ்மிக்க ஒருமுட்டாள் தமிழர்க்கின்னல்
எண்ணானேல் அம்முட்டாள் அறிஞனாவான்"18

**தமிழ்த்திருமணம்:**

தமிழர்களின் திருமண முறைகளில் ஆரியர்கள் மாயை-யைப் புகுத்தியதனால் தமிழர் திருமணமுறைகள் செல்வாக்-கிழந்து பார்ப்பனத்திருமணம் அல்லது ஆரியத்திருமணமே தமிழ்மக்களிடையே வேரூன்றியது. தமிழர்கள் தமிழ்த்-திருமணமுறைகளையே கடைப்பிடிக்க வேண்டும் என்பது நம்

கவிஞரின் வேணவா. தமிழ்ப் பெண்களின் கற்பொழுங்கைச் சுட்டெரித்துத் தமிழ்மானம் கொன்றவர்கள் ஆரியர்கள். ஆரியருடைய பொய்ம்மைகளை ஏற்ற தமிழர்கள் புன்றமிழர்கள் அல்லவா? எனப் பாவேந்தரைப் போலப் பாவலர் மலையரசனும் வேங்கையெனச் சீறுகிறார்.

"மங்களமே சூழ்ந்திலங்க மனையறத்தின் பீடெல்லாம்
மல்குறவே வாழ்தமிழப் பெண்கள்
மணித்தமிழர் ஆரியரின் மணமுறையை ஏற்றதினால்
மங்கையர்கள் இழிவுற்ற புண்கள்
திங்கள், தீ யாழோரும் மணப்பெண்ணை மூன்றிரவில்
சேர்ந்திடலாம் தனித்தனியாய் என்றார்;
சூதுநிறை ஆரியர்கள் சுடர்தமிழப்பெண் கற்-
(பொழுங்கை
சுட்டெரித்துத் தமிழ்மானம் கொன்றார்
பொங்கவில்லை உடற்குருதி! இழிவுபல சூழ்ந்திடினும்
புலைமலிந்த பார்ப்புமணம் ஏற்றார்
பொன்றமிழரல்லர் இவரல்லர்; புன்மைகளைத்
(தாங்கித்தோள்
பூரித்தார்; இவர்தமிழ்க்கு மாற்றார்"
(சிறுதேர் - 10)

பாவலர் மலையரசன் பாவேந்தர்பரம்பரைக் கவிஞர். பாவேந்தர் போன்று அவர் பரம்பரையிடத்தும் பார்ப்பனீய எதிர்ப்பும், வடமொழி வெறுப்பும், தமிழ்ப்பற்றும் மேலோங்கியிருக்கும். இவ்வடிப்படையில் பாவாணர் பிள்ளைத்தமிழ் என்னும் இப்பனுவலின் பல பாடல்களில் பார்ப்பனீய எதிர்ப்பு, வடமொழி வெறுப்பு போன்றவை தலைதூக்கி நிற்கின்றன. கவிஞர் மலையரசன் தமிழ்த்திருமணத்தை வற்புறுத்துவதில் பாவேந்தரின் குரலே எதிரொலிக்கின்றது.

"தமிழினில் இலாத ஒன்று
தமிழருக் கேதுக் கென்றான்"19

எனக் குறிஞ்சித்திட்டு காவியத்தில் தமிழ்த்திருமணங்களை வலியுறுத்திப் பாடுவர் பாவேந்தர்.

**தமிழ் வழிபாடு:**

பாவேந்தர் பாரதிதாசன் தமிழ் மொழியின் தேவையைத் தமிழ்மக்களுக்கு உணர்த்தியதுபோல் வேறு எக்கவிஞரும் உணர்த்தினரிலர். தமிழரின் வாழ்வை - வாழ்வியல் நெறிகளை - தமிழ்மொழியின் மாண்பைத் தமதாக்கிக் கொள்ளவே வடமொழியைத் தமிழ்மொழியில் - தமிழர் வாழ்வில் அனைத்துத் துறைகளிலும் புகுத்தினர் ஆரியர் என்பது பாவேந்தரின் அசையாத எண்ணம். ஆரியமாயையின் வேரறுக்க வந்த வேங்கை பாவேந்தர்! அவர்,

"தமிழனும் தமிழும் தணலும் சூடும்
அமிழ்தம் ஆயினும் அயல்மொழி அயல்மொழி
அயல்மொழி தமிழை அண்டும் விழுக்காடு
தமிழ்மொழி தாழும்; தமிழன் தாழ்வான்"20

என்று பாடினர். தமிழரின் இறைவழிபாட்டுநெறியிலும் வடமொழி புகுந்ததன் விளைவை வன்மையாகக் கண்டித்தவர் பாவேந்தர். பாவேந்தர்போலப் பாவலர் மலையரசனும் தெய்வத்தமிழையே வழிபாட்டுமொழியாக்கி மகிழ்கிறார். இறைவழிபாட்டில் வடமொழி இடம்பெறுவதன் விளைவை உணர்த்துகிறார் பாவலர். பாடல் கீழ்வருமாறு:

"கோவிலில் இறைமையை மனமொழி மெய்யால்
கும்பிடும் வழிபாடு
கொளும்மொழி தமிழாய் இலையால், தமிழினம்
கொள்வதும் இழிபாடு!
நாவினில் இனித்திடும் நற்றமிழ் விடுத்தோர்
நயமிலா சமற்கிருதம்
நாடுதல் தமிழினம் நலிவுற மாய்த்திடும்
நஞ்செனும் நவக்கிரகம்"
(செங்கீரை - 6)

**பார்ப்பனீய வெறுப்பு:**

தமிழுக்கும் தமிழருக்கும் பார்ப்பனர் செய்த கொடுமைகளினுலேயே திராவிடக் கழகத்தார் அனைவரும் பார்ப்பனர்களை வெறுத்தனர். 'பகுத்தறிவுப் பகலவன்' எனப்படும் தந்தை பெரியார் ஆரியர் செய்த அநீதிகளை மக்களுக்கு உணர்த்தினுர். பாவேந்தரைப் போல 'தலைக்-கேறிய தமிழ்ப்பற்று' உடையாருக்குத் தந்தை பெரியாரின் சொற்கள் நியாயமானவையாகப்பட்டன. ஆகவே பார்ப்-பனீயவெறுப்பு ஓரியக்கக் கொள்கையாகவே வளர்ந்தது. பாவலர் மலையரசனும் இவ்வியக்கத்தால் ஈர்க்கப்பட்டவர். ஆதலின் பாவாணரைப் பாட்டுடைத் தலைவராக்கிப் பாடும் இந்நூலில் பலவிடங்களில் பார்ப்பனர்களைச் சாடியுள்ளார். பார்ப்பனர்களை 'வந்தேறிப் பயல்கள்' எனப் பல பாடல்-களில் சினத்துடன் குறிப்பர்.

'ஆரியர் விதைத்த நச்சுவிதைகளை நயவாதீர்' எனத் தமிழ்மக்களிடம் வேண்டுகோள் விடுப்பர் கவிஞர். இவ்-வேண்டுகோள் பார்ப்பனீயக் கருத்துக்களை எள்ளி நகை-யாடுவதாய் அமைகிறது.

"இப்பிறப்பில் தொடங்குதவம் பல்பிறப்பும்
(தொடர்தலினுல்
இயலுவதாம் வைசியனுய்ப் போதல்!
இயற்றுதவம் பலபிறப்பில் தொடர்ந்திடிலோ
(அடைந்திடலாம்
இவ்வுலகில் 'சத்திரிய'னுதல்!
ஒப்புரவாய் தவம்தொடர்ந்தால், ஓர்பிறப்பில்
('பிராமணனுய்'
உலகில்நாம் தோற்றமுறு வோமாம்!
ஒப்பினரே தமிழர்பலர் ஆரியத்தின் மயக்குரையை
உயிரிகள்போல் தலையாட்டி ஆமாம்!
செப்பியதை உவப்பதுடன் அளவிறந்த மடமையினுல்
செழுந்தமிழன் 'சூத்திரனுய்' பூத்தான்!

செந்தமிழன் மகனெனினும் வந்தவனின் மகனாகி
சிறைபட்டு காரறிவில் நீத்தான்"
(சிறுதேர் - 7)

மேலும் ஆரியர்கள் தமிழர்களின் வாழ்க்கைநெறிக்கும் ஊறுவிளைவித்தனர். பொல்லாத பொய்யுரைகள் புகன்ற அப்புன்மனத்தரைக் கவிஞர் இழித்துரைப்பதனைக் காணலாம். உலகமொழிகள் பல, மொழிக்கு மட்டுமே இலக்கணம் கொண்டவை. ஆயின் செந்தமிழ்மொழியோ செழுந்தமிழர் வாழ்க்கைக்கும் இலக்கணங்கூறிய செம்மொழியாகும். வாழ்க்கையை அகம், புறமெனப் பகுத்து வளமார்நெறி காட்டியது வண்டமிழேயாகும். தமிழரின் அகவாழ்வு அவர்தம் காதல்நெறி காட்டும் மாண்பினது. தமிழர் காதலுக்கே தலைமையிடந் தந்தனர். இல்லறம்கண்டு இனிது வாழ வழிகாட்டியது காதல்வாழ்வு. எனவே தமிழரின் இல்லறநெறி தமிழ்ப்பண்பாட்டின் பெருநெறி. 'பெருநெறி பிடித்தொழுகும்' தமிழர் வாழ்வில் புன்னெறி புகுத்தினர் புன்மன ஆரியர்கள். இதனைப் பாவலர் மலையரசன்,

"இல்லற மல்லது நல்லற மல்லவாம்;
என்றுரை செய்தார் தமிழ்வல்லார்!
இல்லறம் தீயது! துறவறம் நேயது!
என்றுரை பெய்தார் இனப்பொல்லார்!
(சிற்றில் - 8)

எனப் பாடுவர்.

**இருவகை உத்தி:**

பாவலர் மலையரசன் உடன்பாடு, எதிர்மறை என இருவகை உத்தியின் மூலம் தமிழ்ப்பற்றை வெளியிடுவர். தமிழ்மொழிப்புகழ்ச்சி; தமிழ்ச்சான்றோர்ப்புகழ்ச்சி (முத்தப்பருவம் 7, 8); தமிழ் வளர்ச்சிக்கான வழிகள், தமிழின மேம்பாடு; அவற்றுக்கான கருத்துக்கள் ஆகியவற்றை உடன்பாட்டுமுகமாகப் பாடியுள்ளார். இவ்வுடன்பாட்டு உத்தி

கவிஞர் மலையரசனின் மாண்பார் தமிழ்ப்பற்றைத் தெள்ளி-தின் உணர்த்துகிறது. தமிழுக்கும், தமிழினத்துக்கும் கேடு-செய்த ஆரியரைப் பழிப்பது பாவலர் மலையரசனின் பைந்-தமிழ்ப்பற்றை எதிர்மறையாக வெளியிடும் ஏற்றமிகு கருவி-யாம். பாட்டுடைத் தலைவராம் பாவாணர் தனித்தமிழ் விழைந்த பெரியார். ஆகலின் அவரைப் பற்றிய நூல் இவ்-வாறு அமைவது இயல்பே!

*கவிஞரின் புலமைத்திறம்:*

*சொல்லாட்சி:*

கவிஞர் மலையரசன் ஆற்றல்மிக்க கவிஞர். அவருடைய சொற்கள் அம்புகளாக எழுகின்றன. தமிழுணர்வு நசித்துக்-கொண்டுவரும் இந்நாட்டில் - இவ்வேளையில் இத்தகு அம்பு-களுக்கே ஆற்றலோடு மக்களைக் கிளர்ந்தெழச்செய்யும் உரிமையுண்டு. கவிஞரின் சொற்கள் மொழியைக் காப்பதற்-கும், இனமானம் பேணுதற்கும் எழுச்சியூட்டுபவை. அவரு-டைய சொற்கள்,

"தமிழர் நாமென்றுல் நம்பால்
தமிழ் உண்டா? தமிழொழுக்கம்
அமைவுறச் சிறிதும் உண்டா?
அன்றைய மறத்தனந்தான்
கமழ்ந்திடல் உண்டா? கல்வி
கலைநலமுண்டா? நெல்லின்
உமிமுனை அளவிலேனும்
ஒற்றுமையுண்டா"21

எனும் பாவேந்தரின் சிந்தனைகளையே தாங்கி வருகின்றன. பாவலர் மலையரசனின் சிந்தனைகளைத் தாங்கிவரும் வாக-னங்களாகவே சொற்கள் இந்நூலில் திகழ்கின்றன. பாவா-ணரை வருணிக்கும் சொற்கள் தேவநேயப் பாவாணரின் மொழியாற்றலைப் புலப்படுத்துகின்றன.

"எண்மானம் ஆகித்தமிழ் எழுத்தென வேதிகழ்ந்த
என்றமிழே"

(சிற்றில் - 10)

எனத் தமிழுருவாகப் பாவாணர் காட்சியளிக்கின்ருர். மாலையினை உணர்த்தும் பதின்மூன்று சொற்களையும் பாவாணர் விளக்கியுள்ள பாங்கைச் சிறுதேர்ப்பருவத்தில்

"கடல்நிகர்த்த தமிழ்மாலை "பதின்மூன்றின்"
(அணியுரைத்த
கவின்றமிழே தேருருட்டி அருளே"

எனப் பாடி மகிழ்கிருர்.

**எழுத்தாளர் கடமை:**

பாவலர் மலையரசன் எழுத்தாளர் கடமை இன்னதெனச் சுட்டுகிருர். எழுத்தாளரின் நோக்கைப் பொறுத்தே இலக்கியத்தரம் அமையும். எழுத்தாளரின் சொற்கள் எத்தகு ஆற்றலுடன் விளங்கவேண்டும் என்பதை - எழுத்தாளர்களின் மொழிநடை எவ்வாறு அமையவேண்டும் என்பதை விளக்குகிருர். ஏனெனில் "இலக்கியம் என்பது நற்சிந்தனைகளின் பதிவன்ருே?"22 எழுத்தாளனின் நோக்கிற்கும் அவன் கையாளும் மொழிநடைக்கும் உள்ள தொடர்பைச் சிறப்புறப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் கவிஞர்.

"வான்பறவை மெய்சிலிர்ப்பு; வரிப்புலியின் எழுச்சிநிலை;
வனப்புறுத்தும் மணமலரின் மென்மையால்!
வயமறவன் ஆர்ப்பெடுத்த வெங்களிராய்/ sic/
(வெங்களிருய்) தடக்கையிலே
வாளேந்தி பகைவெல்லும் வன்மையால்!
கான்புறவின் களிநடம், கட்புலனின் கூர்த்தமதி
கவிஞர்க்கும் பொருள்தேடும் தன்மையால்!
தான்கொண்ட வினைத்திட்பம் ஆக்கத்தின்
கொடுமுடியாம்;

தடம்புரளும் அழி - பள்ளத் தாக்கேயால்!
தகும் "ஏற்றம், அழிவுநிலே" எழுத்தாளர் அவரவர்கள்
தாமேற்று விளேப்பிக்கும் நோக்கேயால்"
(சிறுபறை - 10)

மற்ருெரு பாடலிலும் எழுத்தாளனின் கடமையை நினைவுகூர்கிருர். மலேயக எழுத்தாளர் பலருக்கும் இக்கருத்து பொருந்துவதாகும்.

"தன்போக்கில் எழுதிடுவோன்; தமிழ்வாழ்வைக்
(கொய்திடுவோன்
தமிழினத்தில் பிறப்பெடுத்த பதராம்!
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
முன்னேற்றம் என்பதெலாம் தன்னேற்ற மாய்நினேந்து
முற்றிலுமே தன்னலத்தில் சுழல்வான்"
(முத்தப்பருவம் - 2)

எனப் பாடியுள்ளார் கவிஞர் மலேயரசன். பொன்னுக்கும், பொருளுக்கும், புகழுக்கும் எழுதுவதையே நோக்கமாகக் கொண்ட; மொழியைச் சிதைத்துப் பிறமொழியைக் கலந்து எழுதுவதையே பிழைப்பாகக் கொண்ட தமிழ் எழுத்தாளர்கள் தமிழினத்தின் சாபக்கேடு என்பது கவிஞர் கருத்து.

பாவாணரின் சொல்லாய்வைக் கனிச்சுவைக்கு ஒப்பிடுகிருர் கவிஞர். கவிஞர் கையாளும் தனித்தமிழ்ச் சொற்களும், அருந்தமிழ்ச் சொற்களும் இப்பிள்ளேத்தமிழை முக்கனிபோலச் சுவைக்கப் பயன்படுகின்றன. உணர்ச்சி கெழுமிய சொற்களுக்கும் இந்நூலில் பஞ்சமில்லே.

**கற்பனே வளம்:**

பிள்ளேத்தமிழ் நூல்களில் அம்புலிப்பருவமே புலவருடைய கற்பனேத்திறத்திற்குத் தலேயூற்ருய் அமையும். இக்கருத்துக்குப் பாவாணர் பிள்ளேத்தமிழும் விதிவிலக்கன்று. வானத்தில் உலா வரும் 'நிலவரசிக்கு' விண்மீன்கள் சேடிகள்

எனக் கவிஞர் கற்பனே செய்துள்ளார். இது நயமான கற்பனே.

"கண்சிமிட்டும் விண்பூக்கள் கலேயழகால் நினேச்சூழ்ந்து
காட்சிதரும் அவையுனக்குச் சேடி!"
(அம்புலி - 1)

முடிவுரை:

மலேயகக் கவிஞர்களுள் எழுச்சிக்கவிதைகள் பல தந்து, தூங்கிக்கிடந்த தமிழ்ச்சமுதாயத்தைத் துயில் எழுப்பியவர் பாவாணர் ஐ. உலகநாதன். அன்னுர் பாவேந்தர் போலத் தமிழ்மயமானவர். பாவலர் பெ.கோ. மலேயரசனும் கவி-வாணர் ஐ. உலகநாதன் போல் எழுச்சிமிக்க கவிஞர் என்-பதற்கும், பாவேந்தர் பரம்பரையினர் என்பதற்கும், தமிழுரு-வானவர் என்பதற்கும் இப்பிள்ளேத்தமிழ்ப்பனுவலே நல்ல சான்ரும்.

## பத்துமலைத் திருமுருகன் திருவந்தாதி

மலையகத்தில் சிற்றிலக்கியங்களைப் படைக்கவேண்டும் என்னும் பெருவிருப்புடையவர் கவிஞர் டி.வி.ஆர்.பி. இராகவன்பிள்ளை. இவருடைய அவாவின் வெளிப்பாடே பத்துமலைத் திருமுருகன் திருவந்தாதி.

பக்தர்களுக்கு அருள் வழங்கும் வாரிதி பத்துமலை முருகப்பெருமான். இவ்வருட்செல்வத்தைப் பல தனிப்பாடல்களால் கவிஞர்கள் போற்றியுள்ளனர். ஆயினும் சிற்றிலக்கியங்களில் இவ்வருட்திறனைப் போற்றுவதனை நோக்கமாகக்கொண்டு இவ்வந்தாதி நூலையும், பிள்ளைத்தமிழையும் பாடியுள்ளார் கவிஞர்.

ஒரு செய்யுளின் இறுதியில் உள்ள சீரோ அல்லது சொல்லோ அடுத்த செய்யுளின் முதற் சீராகவோ அல்லது சொல்லாகவோ அமையுமாறு பாடப்படுவது அந்தாதி (அந்தம் + ஆதி) யாகும். ஆதியந்தமில்லா அருட்கடலாம் அழகுமுருகனைக் கவிஞர் அந்தாதியால் பாடியுள்ளார். முருகன் தமிழ்த்தெய்வம். அத்தெய்வம் எழுந்தருளியுள்ள தலங்களில் சிறந்தது பத்துமலை. மேலும் தமிழில் உள்ள சிற்றிலக்கியங்களுள் அமைப்பாலும், அழகாலும் சிறப்பிடம் பெறுவது அந்தாதி இலக்கியவகையாகும். இம்முப்பெருஞ்சிறப்புக்களும் நூலின் பெயரைப் பார்த்தமாத்திரத்தில் புலனுகின்றன. இந்நூல் இறைவனின் திருவடிக்குப் படைக்கப்படும் சிறப்பை,

"நாவினிக்க எண்சீரில் நூறு பாடல்
    நயம்படவே இயற்றியிவண் உமது தங்கச்
சேவடிக்கே சமர்ப்பித்துப் பெருமை கொள்ள
    திருமுருகன் அந்தாதி என்னும் இந்தப்
பாவடிக்க வைத்தவனே பால்ம ணக்கும்
    பத்துமலை வாசவனே இப்ர பந்தம்
பூவடிக்கே சாற்றுகிறேன் . . . . . . . . . . ."

(பாடல் - 20)

என்று பாடியுள்ளார்.

**சமுதாயச்சிந்தனைகள்:**

கவிஞர் சமுதாயத்திடம் அக்கறைகொண்டவர். படைப்பிலக்கியத்துறையின் மற்ற துறைகளிலும் அவர் ஈடுபட்டு நூல்களை வெளியிட்டு வருகிறார். சிறுகதை, புதுக்கவிதை ஆகிய ஊடகங்கள் வழித் தன்னுடைய சமுதாய அக்கறையைப் புலப்படுத்தியுள்ளார். இந்நூலிலும் அவருடைய சமுதாய அக்கறை நன்கு வெளிப்படுகிறது.

அண்மையில் மலையகத்தில் மதமாற்றங்கள் அதிகரித்து வந்துள்ளதை மலையகமக்கள் ஒவ்வொருவரும் நன்கறிவர். பெரும்பாலான இந்துக்களே பிற மதங்களைத் தழுவியுள்ளனர். இந்து சமய அமைப்புக்கள் பல இருந்தும் பயனில்லை. மதமாற்றத்திற்கு ஆளாபவர்கள் இந்துசமயத்தில் என்ன உள்ளது என்று மெத்தனமாக எண்ணி - அறியாமையால் மதம் மாறுகின்றனர். இன்னும் பலர் பொன்னுக்கும், பொருளுக்கும், பதவிக்கும் மதம் மாறுகின்றனர். தான் பிறந்த சமயத்தைப் பற்றி ஒன்றுமே அறியாத நிலையில் மதம்மாறுபவர்களைப் பற்றிய வேண்டுகோளை முருகனிடம் சமர்ப்பிக்கிறார்.

"ஏனோ இம் மானிடர்கள் புத்தி கெட்டு
ஏனின்றுத் திரிகின்றார் மதத்தை மாற்றத்
தானோ இம் மாநிலத்தில் பிறந்தார் தெய்வம்
தாரணியில் ஒன்றென்றால் அனைவருக்கும்
தானே நீர் சொந்தமிதில் மதத்தின் பேரில்
தகராற்றை வளர்த்துச் சிலர் திரியும் போது
ஊனே இன்று ருகுதடா குமரா இந்த
உளுத்தர்களை நீபார்த்துத் திருத்த வேண்டும்"
(பாடல் - 39)

என அமையும் பாடல்

"தெய்வம் பலப்பல சொல்லிப்
பகைத்தீயை வளர்க்கும் மூடர்களே"23

வன்மையாகச் சாடுகின்றது. மதமாற்றங்கள் அதிகரித்து வரும் அவலநிலைகண்டு 'இந்து மதத்தைத் தழுவ யாரும் இருப்பரோ' என அஞ்சுகிறார் கவிஞர்.

சமுதாயச்சிக்கல்களை மட்டுமின்றி உலகில் நிகழும் அநீதிகளைக் கண்டும் மனம் புழுங்குகிறார் கவிஞர். அவருடைய மனிதாபிமானக் கண்ணோட்டத்திற்குக் கீழ்க்காணும் பாடலே நல்ல சான்று.

"சடிதியாக வரவேண்டும் வையம் இன்று
சங்கடங்கள் தாளாமல் மூச்ச டைத்து
முடிவிலாத வேதனைகள் அநுப வித்து
முரண்பட்டு வாழுவதும் அன்றி மக்கள்
விடிவிலாத சாதிவெறி யால்பி ரித்து
வெறுக்கின்றார் கருப்பரென ஆப்ரிக்காவில்
தடையிலாத உமதரசின் கீழில் மாந்தர்
சமமென்ற உணர்வினையே மறந்து விட்டார்"
(பாடல் - 51)

உலகம் அமைதியாக வாழவேண்டும்; உலகமக்கள் அனைவரும் சமம் என்று உயர்ந்த கோட்பாடுகளுடன் வாழ்ந்த தமிழர்கள் இன்று பல நாடுகளிலும் இன்னல்களுக்கு உள்ளாகி வருகின்றனர். தமிழ்த்தெய்வமான முருகனன்றோ தமிழர்களைக் காக்கவேண்டும். பிரிவினைகளையும் பேதங்களையும் அழித்து உலகை அமைதியாக வாழவைக்கவேண்டும் என வேண்டுவர்.

"வாழவைப்பாய் தமிழர்களைச் சோதிக் காமல்
வாட்டுகின்ற விளையாட்டை நிறுத்து மையா!
தோழமையால் அனைவருமே ஒன்றி ணைந்து
தோழரென வாழ்கின்ற நிலைய மைத்(து)

ஊழியினில் அமைதியினைக் காண்ப தற்கு
உன்கருணை வரம்வேண்டும் உலகம் எந்தச்
சூழலிலும் நிம்மதியாய் வாழ்வ தற்கு
சூரவதஞ் செய்தவனே நீயே தீர்ப்பு"
(பாடல் - 57)

நல்ல குடிமக்களாக வாழ்ந்து நாட்டிற்குப் பெயரும் புகழும் சேர்ப்பதற்கு முருகனின் அருளை வேண்டுகிறார் கவிஞர். பிறந்து, வளர்ந்து, சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் உலகிற்கும் ஏதாவது ஒருவகையில் பயன்படுமாறு வாழ்வதே நல்வாழ்வு. அவ்வாறின்றி வெந்ததை உண்டு விதி வந்தாற் சாவோம் என வாழ்வது வீண்வாழ்வு. பயனுடை நல்வாழ்வு வாழ்ந்தோரை இவ்வுலகம் என்றென்றும் மறவாது போற்றும். வரலாற்றில் இடம்பெறுமாறு வாழ நினைக்கவேண்டும்; அவ்வாறு வாழவேண்டும். இதனை அறிஞர் மு.வ. உலகப்பேரேடு என்னும் நூலில் அழகுற விளக்குவர். மனித இனம் மற்ற இனங்களிலிருந்து முன்னேற்றம் அடையக் காரணமாய் அமைந்தது, மனித குல மேம்பாட்டின் பொருட்டுச் சான்றோர்கள் வழங்கிய பேருழைப்பேயாம்! உலகத்திடமிருந்து அச்சான்றோர்கள் பெற்றதைவிட அதிகமாக உலகிற்குக் கொடுத்திருக்கிறார்கள். வரவு, செலவுக் கணக்குப்பார்க்கும் உலகப்பேரேட்டில் காந்தி, வள்ளுவர் போன்ற சான்றோர் பெயர்களே பொறிக்கப்பட்டிருக்கும். இத்தகு சான்றோர்களைப் பின்பற்றி நாமும் சான்றோராக வாழ முருகனிடம் அருள்வேண்டும் கவிஞரின் நெஞ்சம்,

"இந்த நாட்டில் எந்த ஒரு குறையு மின்றி
இன்பமுடன் நெறிபிறழா வாழ்வ மைத்து
வந்த நாட்டில் பெருமையினை நிலை நிறுத்தி
வரலாற்றைப் படைக்கின்ற செயல்பு ரிந்து
எந்த நாடும் புகழ்கின்ற சிறப்ப ளித்(து)
ஏற்றமுடன் மூவினமும் ஒன்றி ணைந்து
சந்ததமும் வாழ்கின்ற வரம ளித்துச்
சரவணனே துணைநிற்பாய் இம்மண் மீதே"
(பாடல் - 100)

என்ற பாடலில் தெரிகின்றது.

**புராணக்கருத்துக்கள்:**

பக்தியைப் பாடுபொருளாகக்கொண்ட நூல்களில் புராணக்கருத்துக்கள் இடம்பெறுவது இயல்பே. இவ்வடிப்படையில் இந்நூலிலும் பல புராணக்கருத்துக்களையும் தத்துவக்கருத்துக்களையும் ஆசிரியர் பாடியுள்ளார்.

**இறையியல்புகள்:**

முருகன் வைதாரையும் வாழவைப்பவன் என்ற கருத்தைச் சிறப்புற இந்நூலில் விளக்குகிறார் கவிஞர்.

"போற்றுகின்ற மனம்விட்டுத் தூற்று கின்ற
போக்கிரிகள் இம்மண்ணில் சிலவ ருண்(டு)
ஆற்றுகின்ற இறைத்தொண்டைக் கேலி செய்யும்
அகம்பாவம் கொண்டவரும் இருப்ப துண்டு
நீற்றுகின்ற சொற்களினால் உம்ம தத்தை
நிந்திக்கும் அறிவற்றோர் பலரி ருந்தும்
போற்றுகின்ற நினைவன்றிப் பழிக்கு வோரை
பொசுக்குகிற எண்ணமுனக் கைழவே யில்லை"
*(பாடல் - 35)*

**கவிநயம்:**

கன்னற்றமிழால் கவிபாட அருள் தந்த முருகனின் உருவச்சிறப்பு, தத்துவக்கருத்துக்கள் ஆகியவற்றை நயம்படப் பாடுகிறார் கவிஞர். முருகன் பன்னிரு கரங்கள் கொண்டதற்குரிய காரணத்தை நயமுடன் பாடுகிறார் கவிஞர். தம்மை நாடிவரும் பக்தர்களுக்கு அருள் புரிவதற்காகத்தான் பன்னிரு கரங்கள் கொண்டான் முருகன் என்பதனை,

"எல்லார்க்கும் எல்லாமும் தருவ தற்கு
இருகைகள் போதாதென் றெண்ணி நாட்டில்
பல்லோரும் பலபேறும் பெறுவ தற்காய்
பன்னிருகை கொண்டாயோ குமரா . . . ."
(பாடல் - 84)

முருகனுடைய திருவிளையாடல்களை நயமாக வருணிக்கின்றார் கவிஞர். உலகமாகிய நாடகமேடையில் திருமுருகன் நடிகனாக நடிக்கின்றான். அவனுடைய நடிப்பாற்றலைக் கண்டு நாம் மெய்சிலிர்க்கிறோம் என முருகனின் அருள்விளையாட்டுக்களை அழகுறப்பாடுவர் கவிஞர். பாடல் கீழ்வருமாறு:

"மகிழ்கின்றோம் உலகத்து மேடை தன்னில்
மெய்சிலிர்க்க நீ நடிக்கும் நடிப்பைக் கண்டு
புகழ்கின்றோம் வள்ளிக்காய் கிழவ னாகப்
புறப்பட்டுச் சென்றாய் நீஅஃது மன்றி
இகழ்கின்ற வேடர்களைத் திகைக்க வைத்(து)
இறைவா நீ வேட்டுவனாய் போர்தொடுத்துத்
திகழ்கின்ற பெருமையொடு விளையாட் டிற்காய்
திகைப்பூட்டி வேங்கைமர மாக நின்றாய்"
(பாடல் - 85)

முடிவுரை:

எண்சீர் விருத்தத்தால் அமைந்த நூறு பாடல்கள் அந்தாதியாய் அமைந்து, கருத்துச் சிறப்பும் சந்தச்சிறப்பும் கொண்டு இந்நூலில் பொலிகின்றன.

## வேலவன் வெண்பா நூறு:

சிற்றிலக்கியங்கள் பாடப்படும் பொருண்மை காரணமாகவும், பாவகை (யாப்பு) காரணமாகவும், பாடலெண்ணிக்கை காரணமாகவும் பெயர் பெறும். இவ்வடிப்படையில் 'வேலவன் வெண்பா நூறு' என்ற சிற்றிலக்கியம் பாவகை அடிப்படையில் 'வெண்பா' என்னும் இலக்கியவகையாகவும், எண்ணிக்கை அடிப்படையில் உருவான ஓர் இலக்கியவகையாகவும் கருதத்தக்கது. இந்நூலாசிரியர் ஐ.இளவழகு. இவர் பாவாணர் ஐ.உலகநாதனின் இளவல். கவிபுனைவதில் வல்லவர். மலேசியத் தமிழிலக்கியத்தின் அனைத்துத்துறைகளிலும் அரும்பணிபுரிந்து வருபவர்.

இந்நூல் முருகனின் சிறப்பு, அருட்டிறம், புராணக்கருத்துக்கள், தத்துவச்சிந்தனைகள் ஆகியவற்றைக் கொண்டிலங்கும் பக்திச் சிற்றிலக்கியமாகும். இதன் ஆசிரியர் தன்னடக்கத்தோடு பாடும் பாடல்கள் அவருடைய விழைவைக் காட்டுவதாய் அமைந்துள்ளன. சான்றாகத் தன்னை 'நேற்றுப் பெய்தமழையில் தோன்றிய காளான்' எனப் பணிவுடன் குறிக்கிறார். நக்கீரனைப் போல நல்ல கவியாக வேண்டுமென விழைகிறார் கவிஞர். அதனை,

*"ஆற்றுப் படைபாட அந்தநாள் நக்கீரன்*
*ஊற்றுப் பெருக்காக ஓதினான் - நேற்றேதான்*
*பெய்த மழையில் பிறந்தஇக் காளானும்*
*எய்துமோ அந்த இடம்?"*

*(பாடல் - 15)*

என்ற வெண்பாவில் காணலாம்.

'புலவர்க்கு வெண்பா புலி' என்ற கருத்து இந்நூலைப் பொறுத்தவரை பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போயிற்று. பக்திநலம் பாரிக்கும் பல வெண்பாக்கள் இந்நூலில் உள்ளமை சிறப்பம்சமாகும்.

| எண் | சிற்றிலக்கியங்கள் | ஆசிரியர் |
| --- | --- | --- |
| 1. | மரத்தாண்டவர் வருகைப்-பதிகமும் காவடிச் சிந்தும் | வே. இராமநாதன் செட்டியார் |
| 2. | பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம் | எஸ். கணபதி |
| 3. | வண்ணை அந்தாதி | எஸ். என். சதாசிவ பண்டிதர். |
| 4. | வண்ணை நகர் ஊஞ்சல் | |
| 5. | சிங்கை அந்தாதி | |
| 6. | சிறம்பான் ஸ்ரீ தண்டாயுத பாணி திருவருட்கோவை | சுப்பிரமணியம் அய்யாத்துரை |
| 7. | பத்துமலை கந்தசாமி பேரில் கீர்த்தனைகளும் பதிகங்களும் | எம்.வி. செல்லையா பண்டிதர். |
| 8. | பத்துமலை சக்தி வடிவேலர் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம் | எஸ். ஞானபதி |
| 9. | தைப்பூச அலங்காரம் என்னும் வழிநடைச் சிந்து | |
| 10. | அருள்நெறி வெண்பா | நாச்சிகுளத்தார் |
| 11. | இன்பரசக் கீர்த்தனைகள் | |
| 12. | செந்துறை வெண்பா | |
| 13. | செந்நெறிப் பாமாலை | |
| 14. | திருநெறி ஐநூறு | |
| 15. | சிங்கைநகர் சுப்பிரமணிய சுவாமி விருத்தம் | கே. மாரிமுத்தன் |
| 16. | கீர்த்தனத்திரட்டு | முகம்மது அப்துல் காதிர் |
| 17. | சீருச்சதகம் | முகம்மது சுல்தான் மரைக்காயர் |
| 18. | பதாநந்த மாலை | |
| 19. | அறிவியல் வெண்பா | முகம்மது யூசுப் பாவலர் |

| | | |
|---|---|---|
| 20. | சிங்கை முருகேசர் பேரில் பதிகம் | க. வேலுப்பிள்ளை |
| 21. | பினாங்கு தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ் | சிவானந்தன் |
| 22. | மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ் | பினாங்கு சி. அன்பானந்தம் |
| 23. | கோலாலும்பூர் மகா மாரியம்மன் பிள்ளைத்தமிழ் | வா.மு.சேது-ராமன் |
| 24. | பத்துமலை முருகன் பிள்ளைத் தமிழ் | டி.வி.ஆர்.பி. ராகவன்பிள்ளை |
| 25. | பாவாணர் பிள்ளைத்தமிழ் | பெ.கோ. மலை-யரசன் |
| 26. | பத்துமலைத் திருமுருகன் திருவந்தாதி | டி.வி.ஆர்.பி. ராகவன்பிள்ளை |
| 27. | வேலவன் வெண்பா நூறு | ஐ.இளவழகு. |

## மேற்கோள் விளக்கம்

1. மு.வரதராசன், இலக்கிய மரபு, ப-39.
2. மு.வரதராசன், இலக்கிய ஆராய்ச்சி, ப-128.
3. ந.வீ.செயராமன், "மலேசியாவில் மரபுக்கவிதைகள்", கவிதைக் கருத்தரங்கு மலர், பக். 32-33.
4. சிவானந்தன், தண்ணீர்மலைத் தண்டாயுதபாணி பிள்ளைத்தமிழ், முன்னுரை.
5. பன்னிருபாட்டியல், நூற்பா எண் - 106.
6. சிவஞானசித்தியார், பக் 2 -164.
7. *W.H. Hudson, An Introduction to the study of literature, p.81.*
8. ச. தண்டபாணி தேசிகர், அமுதாம்பிகை பிள்ளைத்-தமிழ், ப-9 (சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள்)
9. திருஞானசம்பந்தர் தேவாரம், தலமுறைப்பதிகங்கள், ப-700.
10. வ.சுப. மாணிக்கம், வள்ளுவர் நெஞ்சம், ப-16.

11. எஸ். வில்வமலர், மலேசியாவில் புகழ்பெற்ற பழம்பெரும் கோயில்கள், ஆருவது உலகத்தமிழ் மாநாட்டுக் கருத்தரங்க மலர், பக் - *100 -101*
12. *Whitney, Language and the study of language, P-139.*
13. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், *-369.*
14. தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமஇயல், நூற்பா *-3*
15. பாரதிதாசன், குறிஞ்சித்திட்டு, ப*-104.*
16. மேலது, ப*-195.*
17. மேலது, ப*-312.*
18. மேலது, ப*-206.*
19. மேலது, ப*-262.*
20. மேலது, ப*-311.*
21. மேலது, ப*-185.*
22. நூலாசிரியரின் விரிவுரைக்குறிப்பு
23. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், ப*-176.*

# குறுங்காப்பியங்கள்

மனிதனுடைய வாழ்க்கையிலிருந்து முகிழ்த்து மனித வாழ்வுக்காக மலர்ந்து மணம் பரப்புபவை இலக்கியங்கள். காலத்தின் படைப்புக்களாகிய கவிஞர்கள், மாறிவரும் காலத்தின் தேவைக்கேற்ப இலக்கியங்களைப் படைத்து மானிட சமுதாயத்தின் நல்வாழ்வுக்கு வழிகோலுகின்றனர். மனித வாழ்வு மாறும் போக்குடையது. ஆகலின் அதனை வெளிக்காட்டும் இலக்கியங்களிலும் மாற்றம் நிகழ்கிறது. இலக்கியக் கருப்பொருள், வடிவம், உத்திமுறைகள், உணர்த்தும் உண்மைகள் ஆகியவற்றில் காலந்தோறும் மாற்றங்கள் நிகழ்கின்றன. தமிழ் இலக்கிய வரலாற்றினை ஆழ்ந்து நோக்குங்கால், தமிழில் தோன்றியுள்ள எண்ணற்ற இலக்கிய வகைகள் மேற்கூறப்பட்ட இலக்கியப்பண்பைப் புலப்படுத்துகின்றன. காலமாறுபாட்டால் கவினுறு வடிவம் பெற்ற இலக்கியங்களுள் காப்பியமும் ஒன்று.

காப்பியம் என்னும் சொல்லிற்கு விளக்கந்தரும் காக்ஸ்டனின் புது அகராதி,

> "வீரயுகக் காலங்களில் தோன்றிய கதைபொதி பாடல்களைக் காப்பியம்"1

என்றழைக்கிறது. வீரயுகக் காலத்தில் காப்பியம் தோன்றுவதற்கான காரணங்களையும், களங்களையும் விளக்கும்போது,

> "மக்கள் மனத்தில் நிலைத்த மதிப்பினைப் பெற்ற ஓர் ஒப்பற்ற வீரத்தலைவனை வாழ்த்துதற்கும், வணங்குவதற்கும் அவன் மக்களுக்குச் செய்த வீரச்செயல்களே காரணங்களாக முன்னுளில் அமைந்திருந்தன. வீரயுகக் காலத்தில் நாட்டுப்பற்றை ஊட்டவும், அவர்களின் உணர்வைத் தூண்டவும் நீண்ட கூற்றுவகைப் பாடல்களே கருவியாகப் பயன்பட்டன."2

என்பர் ஜான்கிளார்க் என்னும் மேனாட்டறிஞர். இங்ஙன் தோன்றிய காப்பியங்கள் ஒரு தலைவனின் பண்புநலன்களை விளக்குவதாக மட்டும் அமையாமல் பரந்துபட்ட அளவில் பல்வேறு மாந்தரின் பண்புநலன்களை நிகழ்ச்சி விளக்கத்துடன் சுட்டியுரைத்தன. ஆதலால் பல்வேறு பாத்திரங்களும், பல்வேறு பொருண்மையும் காப்பியங்களில் இடம்பெறுகின்றன. காலப்போக்கில் தோன்றிய வெவ்வேறு கொள்கைகளினால் காப்பியக் கருப்பொருள் மாறுபடலாயிற்று. காலத்தின் தேவைக்குத் தக்கவாறு மக்கட் சமுதாயத்திற்கு நலம் பயப்பதை,

> "இவற்றில் வரும் பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் நமக்கு நம்பிக்கையை ஊட்டுவதோடு மனித வாழ்க்கையின் வெற்றியையும் மனிதனின் உயர்வையும் தகுதியையும் மேம்பட்ட நிலையினையும் விளக்கிக் காட்டுகின்றன."3

என்று பொருத்தமுறத் தெளிவுறுத்துவர் சி.எம். பௌரா.

மேனாட்டாரின் காப்பியச் சிந்தனைகள் போன்று நந்தமிழர்க்கும் சீரிய சிந்தனைகள் உண்டு. காப்பியம் என்ற சொல்லாட்சியின் தொன்மையும், ஒல்காப் புலமைத் தொல்காப்பியர் தந்த 'செய்யுளியல்' பற்றிய கருத்துக்களும், தண்டியலங்காரம் போன்ற இலக்கண நூல்கள் கூறும் விதிமுறைகளும் சீர்மிக்க தமிழ்க்காப்பியச் சிந்தனைகளைத் தெளிவாகக் காட்டுவன. தமிழில் காப்பியம், காப்பியர் போன்ற சொல்லாட்சிகள் காப்பியச்சிந்தனையைச் சுட்டியிருப்பினும் காப்பியப் பொருண்மையை - இன்று காப்பியம் என்னும் சொல் எப்பொருளில் கையாளப்படுகின்றதோ அப்பொருண்மையையிலேயே காப்பியத்தை விளக்குகிறது வீரசோழியம்.

காவியங்களைப் பற்றி மிக நுட்பமாக ஆய்ந்த அறிஞர் வையாபுரிப்பிள்ளை மக்களிடையே வழங்கிவரும் பழங்கதைகளையோ, புராண இதிகாசக்கதைகளின் தழுவலையோ கவிஞன் தன் சூழலுக்கேற்பப் படைப்பதைக் காவியம் என்-

பர்.4 ஆயின் மூதறிஞர் வ.சுப. மாணிக்கம், கதை மட்டும் காப்பியம் ஆவதில்லை; அது மனித சமுதாயத்தின் பண்பு-களை வெளிப்படுத்த வேண்டும் என்பர்.5 இவ்வறிஞர்களின் கருத்துக்களை அடிப்படையாய்க் கொண்டு காப்பியக் கருப்-பொருள் பற்றிய சிந்தனைகளைத் தெளிவுற அறியலாம். நாட்டுமக்கள் அனைவருக்கும் பயன்தரக்கூடியவாறு வர-லாறு, சமயம், மெய்ப்பொருள் முதலியவை காப்பியக்-கருவாக அமையலாம். மேலும் மேனாட்டறிஞரான ஜான் கிளார்க் கருதுவது போல மனித வாழ்க்கையின் உணர்ச்சி-களுங்கூடக் காப்பியமாக அமையலாம். ஆயினும் கவிஞன் தான் வாழும் சமுதாயத்தின் வாழ்வியலைப் படைத்துக்-காட்ட விரும்புவதால் கால, இடச்சூழல் மிகவும் தேவை என்பர்.6

மேற்கூறப்பட்ட காப்பியச்சிந்தனைகளைக் கொண்ட - காப்பியக் கூறுகள் அடங்கிய இலக்கிய வகைகள் தமிழில் பல்கியுள்ளன. பாட்டுடைச்செய்யுள், புராணம், கதை அல்லது காதை என்னும் பெயர் கொண்டவை, மற்றும் யாப்பு அடிப்படையில் பெயர்பெற்ற வெண்பா (எ.டு. அகலிகை வெண்பா) போன்றவை காப்பிய இலக்கிய வகைக்குத் தக்க எடுத்துக்காட்டுக்களாம். பொருட்-டொடர்நிலைச்செய்யுளே காப்பியம் என இன்று வழங்கப்-படுகின்றது. கதைச்செய்யுள், அகலக்கவி, தொடர்நடைச்-செய்யுள் ஆகிய பெயர்களும் காப்பிய இலக்கியத்திற்கு வழங்கப்படும் வேறு பெயர்களாகும்.

தமிழிலக்கண நூல்கள் பெருங்காப்பியம், சிறு காப்-பியம், புராணம், காப்பியம் எனப் பல்வேறு நிலைகளில் பகுத்துக் காப்பிய இலக்கணம் கூறியுள்ளன. ஆயின் இருப-தாம் நூற்றூண்டில் தோன்றிய காப்பியங்களைத் தண்டி-யலங்காரம் கூறும் இலக்கணங்களோடு ஒப்பிட்டுப் பார்க்க இயலாது. இன்று, கதைபொதி பாடல்களே காப்பியங்-களாம் என்ற சிந்தனை ஆழமாக வேரூன்றியுள்ளது. இதனை இராமலிங்கம் (எழில்முதல்வன்) விளக்குகையில்,

> "இக்காலக் காவியங்களை நாம் தண்டியலங்காரம் கூறும் விதிகளைக் கொண்டு அளக்க வழியில்லை. கதைபொதி பாடல்களே இந்நாளில் காவியங்கள் என்றழைக்கப்படுகின்றன. அதுவுங்கூட மிக நீண்ட தொடர்நிலைச் செய்யுளாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் தேவையில்லை. ஏதோ ஒரு கருத்தைக் கதை வடிவில் செய்யுளாகப் பாடினுல் போதும் என்ருகிவிட்டது. இலக்கண விதிகள் நிலையானவையல்ல; மாறக்கூடியவையே. எல்லாமே மாறுகிற போது காவிய இலக்கணமும் மாறத்தானே செய்யும்?"7

என்று சமுதாய மாற்றங்களுக்கும், கால மாற்றங்களுக்கும் ஏற்பக் காப்பிய இலக்கியமும் மாறுவதனைத் தெளிவுறுத்துவர்.

இருபதாம் நூற்ருண்டில் தோன்றிய அனைத்து இலக்கியங்களும் சமுதாய விழிப்புணர்ச்சி, புரட்சியை வலியுறுத்தும் பண்பு, பழைய மரபுகளை மீறுவது ஆகிய பொதுப்பண்புகளைப் பெற்றுள்ளன. கலையாக்கம், வடிவம், உத்தி, கருப்பொருள் எனப் பல நிலைகளிலும் புதுச்சிந்தனைகளைத் தாங்கிப் பூத்துள்ளன. தன்னிகரற்ற தலைவனைப் பாடும் மரபு தகர்ந்து சாதாரண மனிதனையும் பாடும் புதுமை இலக்கியங்களாகப் பொலிகின்றன. இந்நூற்ருண்டில் எழுந்த காப்பியங்களும் இதற்கு விதிவிலக்கல்ல.

பழைய கதைகளின் ஒரு கூற்றை மட்டும் பாடுபொருளாக்கித் தன் காலத்து மக்களுக்கு வேண்டிய விடுதலை உணர்ச்சியை ஊட்டக் காப்பியத்தைக் கருவியாகக் கொண்டவன் பைந்தமிழ்ப்புலவன் பாரதி. இருபதாம் நூற்ருண்டில் எழுந்த குறுங்காவியங்கள் அனைத்துக்கும் தோற்றுவாய் செய்தது பாரதி பாடிய பாஞ்சாலி சபதமே! பாரதி விதைத்த குறுங்காவிய விதையைப் புலமையெனும் நீர் பாய்ச்சி, புரட்சிச் சிந்தனைகளை உரமாக்கி, விழிப்புணர்ச்சி

என்னும் ஒளிபாய்ச்சித் தக்கபடி வளர்த்தவர் பாரதிதாசன்! பாரதியின் வாரிசாக மலர்ந்த பாரதிதாசன், பாரதியார் சாதிக்காதவற்றையெல்லாம் தன் கவித்துவ சக்தியாலே சாதித்தவர். இன்று குறுங்காவியங்கள் பெருகப் பெருங்காரணமானவர் பாவேந்தராவார்! இவர் காப்பிய உலகில் புதுமைக்கும் வித்திட்ட முன்னோடி! சமுதாய மற்றும் அரசியல் கருத்துக்களையும், கொள்கைகளையும் வெளியிடக் குறுங்காப்பியங்களைக் கருவியாக்கினார். பொதுவாகக் காப்பிய நாயகர்கள் அனைவரும் எடுத்துக்காட்டுக்களாகத் திகழவல்ல நல்லவர்களாக அமைவது தமிழ்க்காப்பிய மரபாகும். ஆயின் எதிர்நிலைத் தலைவர்களும் பாரதிதாசனால் பாராட்டப்பட்டுச் சிறப்பிக்கப்பட்டனர். இதனால் 'இராவணகாவியம்' போன்ற காவியங்கள் உருவாக வாய்ப்புண்டானது. புலவர் குழந்தை இராவணனைத் தலைவனாக்கிப் புதுமை செய்தார்.

மறுமலர்ச்சிக் கவிதைகளின் அடிநாதமாக விளங்கும் மனிதப்பண்புகள், மனிதநேயம் முதலியவற்றைத் தூண்டும் சக்தியாகவும், இப்பண்புகளின் நிலைக்களன்களாகவும் இருபதாம் நூற்றாண்டுக் காப்பியங்கள் திகழ்ந்தன. சகோதரத்துவம், சமத்துவம், சுதந்திரம், மார்க்சியச் சிந்தனைகள் ஆகியவை காவியம் பாடிய புலவர்களுக்குப் புதிய பாடுபொருள்களானதோடன்றி அப்புலவர்களைப் புதுநெறிப்புலவர்களாக்கின. இதனால் பழமைகள் தூக்கி எறியப்பட்டன. காப்பிய உலகில் பல சோதனை முயற்சிகளைப் பாரதிதாசன் கையாண்டதோடு அன்றிச் சக்தி மிக்க குரலாகக் காவியங்களை ஒலிக்கச் செய்த பெருமையும் அவருக்குண்டு.

இருபதாம் நூற்றாண்டுக் காவியங்களை மூவகையாகப் பகுப்பர் ச.ஞானசேகரன்; அவையாவன *1) புதுநெறிப் புலமையின 2) காந்திய வழியின 3) உளவியல் முறையின.8* மேலும் பழமைக் கூறுகளைப் புதுக்கும் முயற்சியால் காப்பியம் உருவானதற்குச் சாலை இளந்திரையனின் 'கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே' என்ற காப்பியத்தைச் சான்றாகக் கூறலாம். கும்பகர்ணனைத் தலைவனாய்க் கொண்-

டது இக்காவியம். வரலாற்றுச் செய்திகளைச் சமுதாயத் தேவைக்கேற்பக் காப்பியமாக்கும் முயற்சியும் இந்நூற்றாண்டில் நிகழ்ந்தது. கவிஞர் கண்ணதாசனின் கிழவன் சேதுபதி, ஆட்டனத்தி - ஆதிமந்தி ஆகிய காப்பியங்களை இவ்வகைக்கு எடுத்துக்காட்டலாம். மொழியாக்கம், சமயம் போன்ற களங்களைக் கொண்டும் இந்நூற்றாண்டில் காப்பியங்கள் தோன்றியுள்ளன.

**மலேசியாவில் தமிழ்க்காப்பியங்கள்:**

தமிழகத்தின் இலக்கிய வளர்ச்சி, தமிழர்கள் வாழும் மலையகத்திலும் தமிழ் இலக்கியங்கள் வளர்வதற்குத் தூண்டுகோலானது. தமிழகத்துக்கும் மலேசியாவுக்கும் இருந்த வாணிபத்தொடர்பைப் போலத் தொன்மையானதாக இலக்கியத் தொடர்பு அமையவில்லையாயினும், ஆங்கிலக் காலனித்துவ ஆதிக்கத்தில் ஒப்பந்தக் கூலிகளாக அழைத்து வரப்பட்ட தமிழர்கள் இந்நாட்டில் வாழ்க்கைப் போராட்டத்தின் ஊடே இலக்கியங்களையும் வளர்க்கப் பாடுபட்டனர். மொழியுணர்வு மிக்க பலர் தமிழைக் கற்று இலக்கியம் படைக்க முனைந்தனர். மலையகத்தில் உள்ள மரபுக்கவிஞர்களின் எண்ணிக்கையும், வெளிவந்துள்ள கவிதை நூல்களின் எண்ணிக்கையும் மலையகத்தில் கவிதைப்பயிரின் செழிப்பான வளர்ச்சியையே பிரதிபலிக்கின்றன. தமிழகக் கவிஞர்களின் கவித்துவசக்திக்கு மலையகக் கவிஞர்களின் கவியாற்றல் எவ்விதத்தினும் குறைந்ததில்லை. இவ்வுண்மைக்கு இந்நாட்டில் தோன்றியுள்ள காப்பியங்கள் சீரிய சான்றாகின்றன. மலையக மண்ணில் சில காப்பியங்கள் நாளிதழ்களில் வெளிவந்தபோதும் அவை நூலுருப்பெறாமல் இருப்பது வேதனைக்குரிய செய்தியே. 'பிள்ளைத்தமிழ்க்கவிஞர்' என்று அன்புடன் அழைக்கப்பெறும் பினாங்கு சி. அன்பானந்தம் அவர்களின் படைப்புக்களான நந்தாவிளக்கு, கனிமொழி ஆகியவை நூலுருப்பெறின் மலையகத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் காப்பியங்களின் வரவு மிகும்.

அரும்பத் தொடங்கியுள்ள காப்பிய மொட்டுக்கள்

கட்டவிழ்ந்து தமிழ்மணம் பரப்ப வேண்டுமெனில் அவை நூலுருப் பெற்று கவிதையைச் சுவைப்பவர் கரங்களிலே தவழ வேண்டும். இக்காப்பியங்களைப் பற்றிய திறனாய்வு-களும் வெளிவரவேண்டும். திறனாய்வுகள் பெருகப் பெருகத் தரமான இலக்கியங்கள் வளரும் என்பது யாரும் மறுக்க இயலா உண்மை. இவ்வடிப்படையில் மலையகமண்ணில் தமிழ்மணம் கமழ எழுந்த காப்பியங்களில் சில நூலுருப்-பெற்றவை. அவை கீழ்வருமாறு:

1. அலையோசை - கவிஞர் காரைக்கிழார்
2. புரியாப் புதிர் - கவிஞர் காரைக்கிழார்
3. கிணற்றுத்தவளை - கவிஞர் சி. அன்பானந்தம்
4. கலாவள்ளி காவியம் - கவிஞர் ஓ.எம். காதிர்-சுல்தான்

6. கொலைகாரி - கவிஞர் இளங்கோ
7. அணையா விளக்கு - கவிஞர் மு. துரைசாமி

# அலேயோசை

**கருப்பொருள்:**

மலாயா வரலாற்றிலும், சோழர் வரலாற்றிலும் குறிக்கப்பட்டுள்ள இரு வரலாற்றுண்மைகளைக் கருவாகக் கொண்டும்; முழுவதும் கற்பனைக் கதைப்போக்குடனும் திகழ்வது அலேயோசை என்ற காவியம். கரு வரலாற்றுண்மையாக அமைந்த காரணத்தினுல் சில உண்மையான வரலாற்று மாந்தரையும் இக்காப்பியத்தில் சந்திக்கிருேம். கவிச்சுடர் காரைக்கிழார் தன் காவியக்கருவை நூலின் முகப்பிலேயே குறித்துள்ளார். பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரையார் கூறும்

"சோழர் மேலுரிமை ஏற்றிருந்த கடார அரசில் அரசுரிமை காரணமாகப் பிளவு ஏற்பட்டது. அரசிழந்து தன்னிடம் அடைக்கலம் புகுந்த இளவரசனுக்கு உதவியாக வீரராசேந்திரன் தன் படைத்தலேவர்களை அனுப்பினுன். கடாரத்தை மீட்டு அவன் நட்புக்குரியவனிடமே தந்தான்."9

என்ற உண்மையும், 'மலாயா சரித்திரம்' என்ற நூலிலே சுவாமி. சத்தியானந்தர் குறிப்பிட்டுள்ள கீழ்க்கண்ட உண்மையும்

"பிரான் மஹா போதி சத்துவன் லங்காசுகத்தின் கடைசி இந்து அரசனுகவும் முதல் முஸ்லிம் அரசனுகவும் இருந்தான். . . . . . . . இவனது முடிசூட்டு விழாவிற்கு சீயம், சுமத்திரா, ஜாவா முதலிய நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். அவ்வேளையில் மலாய்த்தலேவர்கள் எல்லாரையும் அழைத்துத் தனக்கு நம்பிக்கைப் பிரமாணம் பண்ணும்படி செய்தான். இது அலோர்ஸ்டாரில் நடந்தது.

அலோர்ஸ்டாரின் பழைய பெயர் அலோர்ஸ்-தியர். கலாஹிதம் என்ற மலாய்த்தலைவன் நம்பிக்கைப் பிரமாணம் எடுக்க மறுத்தான். பிறகு கலாஹிதம் இராச்சியத்தின் வடக்கே சென்று அரசனைக் கவிழ்ப்பதற்குப் புரட்சி ஏற்பாடுகள் செய்தான். அலோர்ஸ்டாருக்கு நாலு மைல் மேற்கே இருந்த கோலபத்தாங் (இப்பொழுது கோலகெடா) என்ற இடத்தைக் கைப்பற்றினான். சுங்கைமாஸ் (ஜெரை குன்று) கோட்டையிலும் ஒரு சிறுபடையை நிறுத்-தினான்."*10*

காப்பியக் கருவாக உள்ளன. இதனைக் காவியத்திடையே கவிஞர் நயமுறப் பெய்துள்ளார். சோழர்படை சூளுரைக்-கும் போது காவியக்கருவை இனங்கண்டு கொள்ளலாம்.

"மங்காப் புகழ்போல் மலைசூழ் கடாரத்தில்
"லங்கா சுகம்" கண்ட மாறன் மஹாவங்சன்
பேர்சொல்லி ஆளப் பிறந்த இளஞ்சிங்கம் சீர்
சாலும் போதிசத்து வன்என்பான் நாட்டில்
அமைதி விரும்பி நமை அழைத்தான்! இங்கே
குமையும் பகையொழிக்கும் கொள்கையே
பூண்டுவந்தோம்."*11*

கலாஹிதம் செய்த கலகத்தை 'மலாக்கா மன்னர்கள் வரலாறு' (மலாய் மொழியில் செஜாரா மலாயு) என்ற நூலும் சுட்டுகிறது.*12* எனவே காப்பியக்கரு வரலாற்-றுண்மையை ஆதாரமாகக் கொண்டு இலங்குவதால் 'அலையோசை'யை வரலாற்றுக் காவியம் எனச் சாற்றுவது சாலப் பொருத்தமே!

**காவியநோக்கம்:**

வரலாற்றைப் பாடுவதைத் தலையாய நோக்கமாகக் கொண்டிருப்பினும் கவிச்சுடர் காரைக்கிழார் தமிழின-மாண்பு, தமிழ்ப்பண்பாடு, தமிழர் நாகரிகம் ஆகிய செய்தி-

களைச் சிறப்புறச் சொல்வதற்கு இக்காவியத்தை ஒரு கருவியாகக் கொண்டார் என்பது மிகையாகாது. மூவின மக்கள் வாழும் இந்நாட்டில் மூவினத்தாருள்ளும் சிறுபான்மையினராய் இலங்கும் தமிழ்ச்சமுதாயம் சிறுமைப்பட்டுச் சீரழிந்துவிடக் கூடாதே என்ற நல்லெண்ணத்துடன், பழம்புகழைக் காட்டிப் புதிய பாதையை இக்காவியத்தின் வழியே அமைத்துள்ளார் கவிச்சுடர் காரைக்கிழார். இழந்த பழம்புகழ் மீள அலையோசையாய் ஆர்ப்பரித்து வழிகாட்டுகிறது இக்காப்பியம்! தமிழர்களின் அருமைபெருமைகளை 'அலையோசையாய்' எப்பொழுதும் ஒலித்துக்கொண்டிருக்கும் இக்காவியம், புதிய விழிப்புணர்ச்சி என்னும் அலையோசையை மக்கள் மனத்தில் ஒலிக்கச் செய்யும் ஆற்றல் கொண்டது. எனவே காவியம் பாடிய கவிஞரின் நோக்கம் வரலாற்றைப் பாடுவதாக மட்டும் அமையாமல் 'புதிய வரலாற்றைத்' தமிழ்ச்சமுதாயம் மலையகத்தில் உருவாக்க வேண்டும் என்னும் வேட்கையையும் எதிரொலிக்கிறது.

தமிழில் தோன்றியுள்ள காவியங்கள் உணர்த்தும் உண்மைகளை "அறம் வெல்லும்; பாவம் தோற்கும்" என்ற பாவிகப்பண்புள் அடக்கிவிடலாம். இத்தகையதொரு வாய்பாட்டை அலையோசையிலும் காணலாம்.

"மன்னனுக்குக் குறிவைத்த தீயோன் தூலா
மண்மடியில் மீளாமல் துயின்று போனான்
இன்னலுக்குக் கடைதிறக்கும் கடைய ரெல்லாம்
இப்படித்தான் முடிவாரென் றியற்கை
(சொல்லும்"13

வரலாற்றைக் கருவாகக்கொண்டு சமுதாய எழுச்சிக்கும் சமுதாய நன்மைக்கும் வழிகாட்டுகிறது அலையோசை. அல்லது செய்வார் அழிவர்; நல்லது செய்வார் வாழ்வார் என்ற அடிப்படை உண்மையை - மாறா உண்மையை அழகுற விளக்குகிறது அலையோசை.

**கதையமைப்பு:**

கடாரமன்னன் போதிசத்துவன் கலகம் செய்த கலாஹிதமை அடக்கச் சோழமன்னனும் வீரராசேந்திரனின் உதவியைக் கோரினுன். வீரராசேந்திரன், தளபதி செழியன் தலைமையில் படையொன்றைக் கடாரத்துக்கு அனுப்பிவைக்கிருன். கடாரத்துக் கரையை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் கப்பலை நோக்கிப் படகொன்று விரைந்து வருகிறது. படகில் வந்தவர்களும், அவர்களின் தலைவனுமே தான் தேடிவந்த பகைவரென்று செழியன் தவருகக் கருதுகிருன்; அவர்களிடம் பிடிபடுகிருன். பிறகு ஆழியன் என்னும் கிழவனின் உதவியால் தப்பித்துக்கொள்கிருன். கிழவன் ஆழியனின் மகள் மலர்க்கொடியைச் சந்திக்கிருன். ஆழியனின் குடிசையில் செழியன் இருக்கின்ற வேளையில் கலாஹிதமின் ஆட்கள் செழியனைத் தேடிவருகின்றனர். மலர்க்கொடி தந்தையின் அறிவுரைப்படி செழியனைக் காப்பாற்றுகிருள். இவண் தந்தையை விட்டுப் பிரிவதா? அல்லது செழியனைத் தப்புவிப்பதா? என்ற போராட்டத்துக்கு உள்ளாகிருள். செழியன் கடற்கொள்ளைக் கூட்டத்தினரால் தாக்கப்பட்டுக் கடத்திச் செல்லப்படுகின்ருன். அவன் சென்ற கலம் புயல் காரணமாகக் கடலில் சிக்குண்டு தூள் தூளாகிறது. கரையில் ஒதுக்கப்பட்டுக் கிடந்த செழியனைச் 'சம்பா' என்னும் நகரில் வாழ்ந்த பாடலன் என்னும் வணிகனின் மகள் அல்லி காப்பாற்றுகிருள். இருவருக்குமிடையே காதல் மலர்கிறது. பாடலனின் அறிவுரைப்படி அங்கோர் மன்னனின் உதவியைப் பெற்றுக் கலாஹிதமை அடக்குகிருன் செழியன். இது காப்பியத்தின் மூலக்கதை. செழியனின் நண்பன் வளவன், ஆழியன், குணமாலை மற்றும் போதிசத்துவன் ஆகிய துணைப்பாத்திரங்களோடு தொடர்புடைய கதைநிகழ்ச்சிகளும் மூலக்கதையோடு இயைந்து செல்கின்றன.

கதைநிகழ்ச்சிகள் கற்பனை நிகழ்ச்சிகளாக அமைந்தாலும் மிக அழகாகத் தொய்வின்றிப் பின்னப்பட்டுள்ளன. கதையமைப்பு ஆர்வமூட்டும் நிகழ்ச்சிகளைக் கொண்டிலங்-

குவது தனிச்சிறப்புடையது. கதைநிகழ்ச்சிகள் விறுவிறுப்புடன் - உயிரோட்டத்துடன் அமைந்துள்ளமை காப்பியத்தின் வெற்றிக்கு முதன்மைக் காரணமாகும். கதைநிகழ்ச்சிகள் நாடகநலத்துடன் அமைந்துள்ளன. ஒரு நாடகத்தில் வெவ்வேறு நிகழ்ச்சிகள் வெவ்வேறு காட்சியமைப்புக்களைக் கொண்டிலங்குவது போன்றே இக்காவிய நிகழ்ச்சிகளும் அமைந்துள்ளன. செழியன் காவியத் தலைவனாக விளங்குகிறான். இவனுடைய கதையைத் தொடர்ந்து நேரடியாகக் கவிஞர் சொல்லிக்கொண்டே வந்தால் கதையமைப்பு சோர்வுபடும்; மேலும் கதையமைப்பில் உயிரோட்டத்தைக் காணமுடியாது. ஆகவே கவிஞர் காரைக்கிழார் இடையிடையே எதிர்நிலைத் தலைவனான கலாஹிதம் பற்றிய நிகழ்ச்சிகளையும், முன்னர்க் கூறப்பட்ட துணைப்பாத்திரங்கள் பற்றிய நிகழ்ச்சிகளையும் இணைத்துக் கதையமைப்பைச் செவ்வையாகக் கையாண்டுள்ளார். இக்காவிய ஆசிரியரான கவிச்சுடர் காரைக்கிழார் கவிஞராக மட்டுமன்றிச் சிறந்த சிறுகதை எழுத்தாளராகவும், புதின எழுத்தாளராகவும் விளங்குபவர் என்ற உண்மையை உளங்கொண்டு ஆய்ந்தால் காவியக்கதையின் சிறப்பும், சீர்சால் அமைப்பும் தெற்றெனப் புலனாகும். ஆகவே 'அலையோசை' என்னும் காவியத்தின் வெற்றிக்கு - நல்ல கதையமைப்புக்குக் கவிஞரின் கதைகூறும் ஆற்றல் காரணமாகிறது.

'பொற்குடத்திற்குப் பொட்டிட்டுப் பார்ப்பது ' போல நாடகச்சுவையையும் காவியத்தினூடே நல்கியுள்ளார். 'நாடகமுரண்' அல்லது 'நாடக முன்னம்' (*Dramatic irony*) என்னும் உத்தியைச் சிறப்புறக் கையாண்டுள்ளார் கவிஞர்.

பொன்னான நாட்டிற்காய்த் தன்னுயிரையும் தரத் தயங்கா ஆழியன்; மகள் மலர்க்கொடியை நோக்கிச் செழியனுக்கு வழிகாட்டுமாறு கூறுகிறான். ஆழியனின் கட்டளைப்படியே செழியனும் மலர்க்கொடியும் செல்கின்றனர். இதனைக் கவிஞர்,

"தங்கத்தை வைரத்தைத் தமிழ்வீ ரத்தைத்
தன்நெஞ்சிற் கொண்டமகன் முன்னே ஏக
தங்கத்தை வைரத்தை தாங்கிச் செல்லும்
தன்மையினுல் தேறியபெண் தொடர்ந்து போக
தங்கத்தை வைரத்தைப் பிரிதல் போலும்
தன்னுளத்தின் துயரத்தால் தந்தை நோக
தங்கத்தை வைரத்தை அந்தக் காடு
தன்னிருளின் சிறகுக்குள் மறைத்த தம்மா"14

எனப் பாடுவர். தங்கத்தை, வைரத்தைப் பிரிதல் போலும் எனக் குறிப்பாகக் கவிஞர் சுட்டியது காவிய இறுதியில் ஆழியன், மலர்க்கொடி ஆகியோரின் தியாகத்தைப் புலப்படுத்துகிறது.

கலாஹிதத்தின் ஆட்கள் செழியனைத் தலையில் தாக்க அவன் மயங்கி விழுந்த நிலையைக் கேட்டு மலர்க்கொடி ஜெரைகுன்று சிறைச்சாலையில் உள்ளம் வெதும்புகிருள்.

"பாவி உனக்கென்ன பண்ணிவிட்டோம் - ஏன்நீ
பச்சை நிறத்தில் சிவப்படித்தாய்"15

பச்சை, சிவப்பு என்ற நிறங்கள் இங்கே குறியீடுகளாக - படிமங்களாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. கலாஹிதத்தின் செயல்கள் நாட்டினுடைய பசுமையான - வளமான நிலையை மாற்றிக் குருதிவெள்ளம் பாயச் செய்யும் கொடுமை வாய்ந்தவை என்பதைக் குறிப்பாக உணர்த்துகின்றன. இதனை மலர்க்கொடியின் புலம்பலால் அறியலாம். உலகியல் நிலையில் சாதாரணமான குறியீடாகப் பயன்படும் இந்நிறங்களைக் கையாண்டிருந்தாலும் காவியத்தில் இவை தனிச்சிறப்பிடம் பெறுகின்றன.

பாத்திரப்படைப்பு:

'அலையோசையில்' இடம்பெறும் காவியமாந்தர் அனைவரும் நெஞ்சை விட்டு நீங்காத சிறப்புடையவர்கள். சங்க

இலக்கியங்கள் போற்றிப் பாடும் தமிழர் வீரத்தின் எதிரொலியாகச் செழியனையும், வளவனையும் படைத்துள்ளார் கவிஞர். நாட்டுப்பற்று மிக்க ஆழியன் கலாஹிதத்தின் கலகச்செயல்களை முறியடிக்கும் தியாகவேள்வியில் தன்னை மட்டுமன்றித் தன் மகளையும் இழக்க முன்வரும் மிகப்பெருந் தியாகி. இவன் தந்தை சோழ மன்னனுக்கு மெய்க்காப்பாளனாக வந்தவன். தந்தை ஆழியூர் அணங்கனைப் போலவே நாட்டிற்காக ஊழியம் செய்து அறிவில் - தியாகத்தில் - நாட்டுப்பற்றில் தலைசிறந்து விளங்குகிறான். மதிநுட்பம் வாய்ந்த இவன் விடும் இரண்டு ஓலைகள் கதையமைப்பில் மிகச் சிறந்த பங்காற்றுகின்றன. ஆழியன் ஆண்டில் மட்டும் முதியவனல்லன்; அறிவில் - அனுபவத்தில் அனைத்திலுமே முதிர்ந்தவன். இதனைக் குணமாலை பொருத்தமுறப் பாராட்டுகிறாள்.

"ஆழியன் என்றும் ஆழிய நெஞ்சன்
ஆழ முடைத்தவன் மூளையிலே - இடர்
வீழிய தீயோர் ஏமுறத் தானே
விளைத்தனன் மாற்றம் ஓலையிலே"16

குணமாலையின் புகழுரை பொய்யுரையன்று. கலாஹிதத்தின் கலகச் செயல்களை முறியடித்துச் சோழர் படைக்கு உதவி செய்யக் காவியம் முழுதும் துணைநிற்பவன் ஆழியன். வாசகர் நினைவை விட்டு நீங்காத - நினைவலையாகத் திகழும் ஆற்றல் மிக்க பாத்திரம் ஆழியன்.

காவியத்தில் இடம் பெறும் பெண்பாத்திரங்கள் மூவரும் ஒவ்வொரு கோணத்தில் சிறக்கின்றனர். அறிவாற்றலில் தலைநிற்கும் குணமாலை; வீரத்தின் விளைநிலமாக மலர்க்கொடி; காதலோவியமாய்த் திகழும் அல்லி ஆகிய மூவரும் தமிழ்ப்பெண்களின் சிறப்புக்களை உணர்த்தும் அடையாளங்கள்! இம்மூவரும் தமிழ்ப் பெண்களின் பெருமைகளைப் பாரறியச் செய்யும் பைங்கிளிகளாய் இக்காவியச் சோலையில் உலவுகின்றனர்! பாரதிதாசன் படைத்துக்காட்டும் இலட்சியப் பெண்டிரைப் போலக் கவிஞர் காரைக்கிழாரும் ஏற்ற-

மிகு எழிலரசியரைப் பாத்திரங்களாக்கியுள்ளார். ஆகவே அலேயோசை என்ற காவியம் 'பெண்ணின் பெருமை' பேசும் காவியமாகத் திகழ்கிறது. கதையமைப்பில் மலர்க்கொடி, குணமாலே ஆகியோர் பெறுமிடம் இவ்வுண்மையைச் செவ்வனே செப்பும். கவிஞர் காரைக்கிழார் கூறியது போலவே 'சாதலுக்கும் வாழ்வுக்கும் இடையில் நாட்டின் சாதனேக்குப் படத் துணியும்' பெண்களாக - தியாகச் சித்திரங்களாக ஒளிர்கின்றனர் இப்பெண்பாத்திரங்கள்.

**உவமைச்சிறப்பு:**

'உவமை என்னும் தவலருங் கூத்தியின்' எழில் நடனத்தை அலேயோசையில் காணலாம். மரபுவழிப்பட்ட உவமைகளேக் கையாள்வதோடன்றிப் பல புதிய உவமைகளேயும் படைத்துள்ளமை கவிஞரின் புலமைத் திறத்துக்குக் கட்டியம் கூறுவது. கவிச்சுடர் காரைக்கிழாரின் உவமைத்திறம் கற்பார் உள்ளத்தைக் காந்தமாய்க் கவரும் ஆற்றலுடையது. காவியத்தின் நடையழகுக்கு மேலும் மெருகூட்டுவதாய் அமைவன பல உவமைகள்.

கடாரக் கரையிலே நுளேச்சியர் (நெய்தல் நில மகளிர்) கூந்தலிலே நெய்தல் மலரைச் சூடி அன்னத்தைப் போன்று நடை பயில்கின்றனர். அன்னநடை மகளிரின் வண்ணநடை கவிஞர்க்குப் புதியதொரு காட்சியை வழங்குகிறது. ஆகலின் புதிய உவமை பிறக்கிறது.

"வேய்ந்தசிறு பூம்பந்தல் இடம்பெயர்தல்போலும்"17 நுளேச்சியரின் நடை தென்படுகிறது. கற்பனேநயம் மிக்க உவமையாகக் களிப்பு நல்குகிறது இவ்வுவமை.

கடாரக் கரையிலே சோழர் படையைக் கொண்ட கப்பல் நங்கூரமிட்டு நிற்கிறது. அதனேக் கண்ட சுங்கத் தலேவனின் ஆட்கள் தங்களின் மரக்கலத்தைக் கப்பலே நோக்கி விரைவாகச் செலுத்துகின்றனர். இந்நிலேயில் நங்கூரம் இட்ட கப்பலுக்கு நல்ல - புதிய உவமையைக் கையாள்கிருர் கவிஞர்.

"புலந்தயல் போகும் பெண்ணின்
புறத்துகில் முள்பட் டாற்போல்"18

என்ற உவமை கவிஞரின் புதிய பார்வையைக் காட்டுகிறது.

அலைகடலின் மத்தியிலே படகு ஆடிக்கொண்டு செல்வது கடலன்னை பாடும் பாட்டுக்குத் தாளமிடுவதாய் மட்டும் அமையாமல் "காற்றுக்கு மேல்வாங்கிப் பின்கூம்பும் வயிற்றையே"19 நினைவூட்டுகிறது. இவ்வுவமை கவிஞரின் நுட்பமான நோக்கிற்குச் சான்றாகிறது. பற்களுக்கு முத்துக்களையும், மாதுளை முத்துக்களையும் உவமை கூறுவது மரபு. ஆயின் கவிஞர், பற்களுக்குப் பாளையை உவமிக்கிறார். செழியன் சிரிப்பது பாளை உதிர்வதைப் போன்று புதுமையாக உள்ளது. செழியனின் பற்கள் பாளையின் நிறத்தைப் பகை கொள்ளச் செய்த பான்மையின. எனவே செழியனின் சிரிப்பைப் புதுமையான முறையில் வருணிக்கிறார் கவிஞர் காரைக்கிழார். இதனை,

"பாளைநிறம் பகையான பல்லெல்லாம்
உதிர்வதுபோல்"20

எனப் புதுமைப் பொலிவோடு வருணனை நயம் சிறக்கப் பாடுகிறார்.

காலத்துக்கேற்ற உவமைகளைக் கையாளும் போக்கும் கவிஞர் காரைக்கிழாரிடம் உண்டு. கலத்திலே வரும் படைவீரர்கள் உரையாடும் காட்சியை வருணிக்கும் வேளையில்

"பாதி சுட்டவேர்க் கடலை தின்றதோர்
பாங்கி னிற்கதை பண்ணி வைத்தனே"21

என்ற உவமையைப் பொதிந்துள்ளார் கவிஞர். போதிசத்துவன் மன்னனாய் இன்னும் முடிசூடவில்லை என்பதை

அறியாமல் பேசிய இளையவீரனிடம் கிழவன் ஒருவன் உரைப்பதாய் அமைந்தது மேற்கண்ட உவமை. இளையவீரன் முழுமையாக எதனையும் அறியாமல் அரைகுறையாய்ப் பேசியதனால் - சுவையற்ற அப்பேச்சுக்குச் சுவையான வேர்க்-கடலை மூலம் உவமை கூறினார் கவிஞர் என எண்ணத் தோன்றுகிறது. வளவன் எவ்வாறு சிறையிலிருந்து தப்பி-னான் என்ற உண்மையைக் கலாஹிதம் ஆராய்ந்த செய்தியை,

"பெருச்சாளியாய்ப் பலரைக் குடைந்தே"22

என்னும் உவமை வழி விளக்குகிறார்.

பழமொழிகள் பலவற்றை உவமையாக்கியுள்ள பாங்கு பாவலரின் திறத்திற்குத் தக்க சான்றாகும். எனினும் கவிஞ-ரின் உவமையிலா உவமைத்திறத்தை உணர்த்தி - அவரின் தனித்தன்மையை - ஆளுமையை வெளிக்காட்டுவன புதிய உவமைகள். அலையோசை பல புதிய உவமைகளைத் தாங்கி வருவதும் காவியத்திற்குச் சிறப்புச் சேர்க்கின்றது. ஜரை குன்று சிறைச்சாலையிலிருந்து வளவனும் மலர்க்கொடியும் தப்பியதை அறிந்த கலாஹிதமின் ஆட்களுடைய நிலைக்கு அழகிய - நயமிக்க உவமையைக் கூறுவர் கவிஞர்.

"காரத்தை உண்டவர் நீர் தேடி ஓடும்
கதைபோலும் புரவியெலாம் பாயும்"23

எவ்வளவு சிறந்த, பொருத்தமான உவமை!

வைகறைப் பொழுதை வருணிக்கையில் கடலின் காணிக்கையையும், உலகியல் நிகழ்ச்சிகளுள் ஒன்றான துயிலும் சேயை எழுப்பும் தாயையும் ஒப்பிட்டுப் பார்க்-கிறது கவிஞர் மனம். கதிரவனின் வரவைக் கவினுறப் பாடுகிறார் அழகிய உவமையின் வழியே.

துயில்கின்ற சேய்மேனி தொட்டுத் தொட்டு
துயில்நீக்கும் தாய்போலும் கதிரின் ஆழி"24

வைகறையில் நிகழும் இரு நிகழ்ச்சிகளையும் ஒருங்கே எண்ணி உவமித்த திறம் போற்றுதற்குரியது.

கவிஞரின் தமிழுணர்வை - கவிதைப்பித்தைக் காட்டும் மற்றோருவமையும் வைகறை வருணனையில் மலர்கிறது. காம்போஜக் கரையில் ஒதுக்கப்பட்ட செழியன் கரையைத் தாண்டி அமைந்த ஒரு தோப்புக்குள் நுழைந்தான். அத்தோப்பில் ஒலிக்கும் புள்ளினங்களின் ஒலி கவிஞருக்குத் தமிழ்க்கவியின் சந்தத்தை நினைவூட்டுகிறது. அதனால்

"யாப்புக்குள் அடங்காநற் சந்தம் தேக்கி.
அமுதம்தான் செவிக்கென்றே அளிக்கும்"25

என உருவகமாக்கித் தாமும் மகிழ்ந்து, நம்மையும் மகிழ்விக்கிறார். இயற்கைக் காட்சியிலும் இன்றமிழே நிறைந்திருப்பதாய்க் காணும் கவிஞரின் தமிழுள்ளத்தை இவ்வுருவகம் தெளிவாகக் காட்டுகிறது.

ஆடவர்க்கு அழகு தரும் மீசையை அரும்பெனக் கூறுவது அவனியுள்ளார் மரபு. இதனைக் கவிஞர் அழகிய புதிய உவமையின் மூலம் வருணிக்கிறார். புதிய உவமை பொருத்தமானதாகவும் அமைகிறது.

"முதல்மழையில் தலைகாட்டும் இளம்புற்கள் என்ன"26

போதிசத்துவனின் அரும்புமீசையை, இளமையைக் காட்டுகிறார்.

கடலிலே செழியனைக் கடத்திச் செல்லும் கடற்கள்வர் நிலைக்குக் கவிஞர் கூறும் உவமை அவருடைய அறநெஞ்சை அறிவிக்கின்றது.

"நிதிகருதி நேர்கின்ற
நிலைகருதா நெஞ்சத்தால்
மதிதவறி மடுவீழும்

மனிதன்போல் கடல்வெளியில்
கதிதவறி அலைக்கழியும்
கடற்கள்வர் அனைவருமே
விதிகருதி விழிக்கின்றூர்"27

நன்னெறியை நாடிடுவோர் நானிலத்தில் அழிவதில்லை. மாருகப் புன்னெறியை நாடிடுவோர் பொறிகலங்கி அலைக்கழிவர் என்ற உண்மையைக் கூறத் தீயவனுக்குத் தீயவனையே உவமிக்கிருர்.

கவிச்சுடர் காரைக்கிழார் கையாளும் உவமைகளில் பல அவருடைய பன்னூற்பயிற்சியை - தமிழிலக்கியப் புலமையை வெளிக்காட்டுகின்றன. கடார நாட்டில் அமைந்துள்ள பாட்டைகள் (பாதைகள்) நீண்டு, அகன்று, ஒளிநிறைந்து காணப்படுகின்றன. இதனைக் கண்ட கவிஞர்

"கரவிலாக் கவிஞர் தம்மின்
கற்பனை ஒக்க நீண்டும்
வரவிலா தென்றும் வாரி
வழங்குளம் போல்அ கன்றும்
இரவிலாத் தகைமை ஞான்றும்
இலங்கவே ஒளிநி றைந்தும்
மரபிலாய் நடந்த பாட்டை
மாண்புசேர் அரசைச் சொல்லும்"28

என நயந்தோன்ற விளக்குவர். கவிஞரின் இக்காட்சி கம்பனின் ஆற்றுக்கற்பனையை நினைவூட்டுகிறது.29 ஆற்றின் பெருக்கிலே கவிப்பெருக்கைக் கண்ட கம்பநாடன் கவிதைகளிலே காரைக்கிழார் கொண்ட பயிற்சியை இக்கவிதை காட்டுகிறது. மற்ருேரிடத்தேயும் காரைக்கிழார் கவிச்சக்கரவர்த்தி கம்பனிடம் கொண்ட ஈடுபாடு தெற்றெனப் புலனுகிறது. கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை மனச்சிறையில் கவர்ந்த காரணத்தால் இராவணனுடன் இராமன் போருடற்றினுன். போரிலே ஆயுதங்களை எல்லாம் இழந்து சானகியின் நகைப்பிற்கு ஆளாவோமே என்று

உளம்நைந்தான் இராவணன். இலங்கை வேந்தனின் இந்நிலைக்குக் "கடன்பட்ட நெஞ்சை"30 உவமிப்பான் கம்பன். கவிஞர் காரைக்கிழார் கடன்பட்ட நெஞ்சை மட்டுங் காட்டாது, கடன்பட்டுப் பண்பட்ட நெஞ்சத்தை உவமை கூறுவர். செழியனும் மலர்க்கொடியும் காட்டினுள் செல்லும்போது காடு அவர்களை வரவேற்ற பான்மையை,

"கடன்பட்டுப் பண்பட்டார் நெஞ்சம் போலக்
கார்சூழுங் காடிருவர் வரவை ஏற்கும்"31

என்று பாடுவர். சங்க இலக்கியம், திருக்குறள் போன்ற இலக்கியங்களில் பயிலும் தொடர்களை உவமைகளாக்கிப் பாடியிருப்பதும் இவண் நினைந்து இன்புறத்தக்கது. "செம்புலப் பெயல்நீராய்" இலக்கியத் தொடர்கள் இக்காப்பியத்திலே விரவியுள்ளன. ஆகவே கவிச்சுடரின் முந்துநூற்புலமையை அறியலாம்.

### வருணனைத்திறம்:

கவிச்சுடரின் புலமையை வெளிக்காட்டுவன சுவைமிக்க, சுடர்விடும் வருணனைப்பகுதிகளாம். இப்பகுதிகளில் அணிநயங்கள் சிறக்கின்றன; காவியத்தாய்க்குக் ·கவினூட்டும் தொடை நயங்கள் மலர்கின்றன. செழியனும் மலர்க்கொடியும் செல்லும் காடு மலையகமண்ணின் காட்டுவளத்தை வருணிக்கும் பகுதியாகத் திகழ்கிறது.

"ஓரடிப் பாதை இருமருங்கும்
ஓங்கிய மூங்கில் மூச்சுவிடும்
ஓரடி சற்றே விலகி னும்
உடலை அறுக்கும் நாணலின்வாள்"32

என்று காட்சிப்பொருளாய்க் கானகத்தைக் காட்டுகிறார்.

சிறைப்பட்ட வளவனும் மலர்க்கொடியும் இருளில் ஜெரைகுன்று சிறைச்சாலையிலிருந்து தப்பிச்செல்லுகின்ற காட்சியைத் தற்குறிப்பேற்ற அணிநயம் அமைய அழகுற வருணிக்கிறார். நிலவு வாராமைக்குரிய காரணமாகக் காரைக்கிழார் காட்டுவது கருத்துச்சிறப்பு வாய்ந்த பகுதியாகும்.

"உலகத்தைச் சிலகாலம் பார்த்துப் பார்த்தே
ஓய்ந்ததனால் விழிமூடி விட்ட வானத்
திலகத்தை அன்றிரவு காணு தாலே
திசைதோறும் தீமைக்கு வழியைக் கோலும்
கலகத்துக் கருள்கூறும் இருளின் ஆட்சி
கையோங்கி நிற்கின்ற நடுயா மத்தில்"33

என்ற இருள் வருணனையில் கவிஞரின் திறம் காணலாம்.

போருக்குச் செல்லுமுன் அல்லி என்னும் பெண்கொடியைச் சந்திக்கச் செழியன் செல்கின்றான். அவனுடைய தயக்கத்தைப் பொருத்தமான உவமையின் வழியே வருணிக்கின்றார் கவிஞர். கருத்துப் பொருளைக் காட்சிப்பொருளாக்கும் கவினுறு வருணனையைக் கீழ்க்கண்ட பகுதி காட்டும்.

"பெருந்தனவான் மாளிகையின் வாயில் ஓரம்
பிச்சைக்குச் சென்றமனம் உள்ளே போக
விரும்புவதும் திரும்புவதும் செய்தல் போலும்
விழைவிரண்டை உட்சுமந்து வந்த காளை"34

செழியனின் மனநிலையைத் துல்லியமாக அல்லவோ காட்டுகிறார் கவிஞர்.

அலையோசை என்னுமிக்காவியத்தில் சிலேடை நயம் சிறந்து விளங்குகிறது. 'கூடாரம்' என்னும் சொல்லை இரட்டுறமொழிதலணி வழியே

"கூடாரம் சேர்ந்து படைதூங்கக் காதலெனும்
கூடாரம் தேடிச் செழியன் நடந்தானே"35

எனச் சிறப்புறப் பாடுவர். இங்ஙனமே அந்தாதித் தொடை போன்ற நயங்களும் (பக்.110 & 111) ஆங்காங்கே அமைந்து காவியத்திற்குச் சுவையூட்டுகின்றன.

இயற்கை மக்கள் வாழ்வுக்குப் பின்னணியாக விளங்குவது. இதனுல் சங்க இலக்கியங்கள் இயற்கைப் பின்னணியிலேயே தமிழரின் இனிய வாழ்வைச் சிறப்புற விளக்கின. இயற்கையைப் பாடாத இலக்கியம் என்றென்றும் செயற்கையான இலக்கியமாகவே கருதப்படும். இதனை

"மக்களை விடுத்து இயற்கையையும், இயற்கையை விடுத்து மக்களைப் பற்றியும் புலவர் பாடினுல் அவ்விலக்கியம் குறையுடைய இலக்கியமாகும்."36

என்பர் அறிஞர் சி. பாலசுப்பிரமணியன். அலையோசை என்னும் இக்காவியத்தில் இயற்கை வருணனைகள் எழிலுறக் காவியக் கதைப்போக்குடன் ஒன்றிணைந்துள்ளன. செழியனும் அல்லியும் திருமணம் புரிகின்றனர். இவர்களின் திருமணத்திற்கு இயற்கைதான் வாழ்த்துக் கூறுகிறது. கடிமணக் காட்சியை இயற்கை மணத்தோடு காட்டுகிறுர் கவிஞர் காரைக்கிழார்.

"செண்பகத் தருதான் தெளிபன் னீரும்
சந்தன மணமும் மங்களம் சேர்ப்ப
காற்றெனும் தேவன் கடிமலர் தூவி
நாற்றிசை பரந்த கையினுல் வாழ்த்தினன்
மாங்கிளை துளைக்கும் மத்தளப் பறவையும்
தீங்குரற் குருவியும் இன்னிசை வழங்கின."37

தமிழ்ப்பற்று:

கன்னற்றமிழால் இன்னேசையுடன் காப்பியம் வடித்த காரைக்கிழாரின் மொழிப்பற்றும், இனப்பற்றும் வானிடையே தோன்றும் மின்னலெனக் காவியத்திடையே பளிச்சிடுகின்றன. தமிழ்மொழியைப் போற்றுவதும்; தமிழர் மாண்பைப் போற்றுவதும்; தமிழ்ப்புலவர்களைப் போற்றுவதும் கவிஞரின் மொழிப்பற்றைத் தெளிவாக்குகின்றன.

"தன்னைக் காண்டொறும் தண்டமிழ் வேண்டுவன்"38

"எண்ணச் சிமிழதிலே உயிர்த்துறையும் செந்தமிழே"39

என்று செந்தமிழைப் போற்றுகிறுர் கவிஞர். இக்காவியத்தில் தமிழர் நாகரிகத்தையும், தமிழர் பண்பாட்டையும் கவிஞர் பல இடங்களிலே பாராட்டியுள்ளார். 'நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம்புமின்' என நினையும் அறநீர்மை கொண்டதன்றோ தமிழர் நெஞ்சம்! இதனைக் கவிஞர் எங்ஙனம் உயர்வாகப் பாராட்டுகிறுர்!

"ஒருவர்க்கு மற்றொருவர் உதவி வாழும்
உயர்வான தத்துவத்தை உணர்ந்த பின்னே
இருவர்க்கும் இடைநிற்ப தெதுவோ! அந்த
எழில்ஞானம் உள்ளவராம் தமிழ நாட்டார்"40

தமிழர் வீரம், தமிழரின் காதல்நெறி, தமிழ்ப்புலவர் மாண்பு எனப் பல கோணங்களில் பாராட்டிப் பாடியுள்ளமை தமிழ்நெறி மீது கவிச்சுடர் காரைக்கிழார் கொண்ட தணியாத தாகத்தை வெளிப்படுத்துகிறது.

நாட்டுப்பற்று:

மலையக வரலாற்றைக் கருப்பொருளாக்கி மண்மணம் கமழுமாறு காவியம் படைத்த காரைக்கிழார் தாய்நாடாம் மலேசியா மீது மாருத அன்புடையவர். "மண்ணை எம்முயிர்-

காண் என்றே மதித்திடும்" மாண்பை அலேயோசை வலியுறுத்துகிறது. காவியத்தினூடே தாய்நாட்டுக்குத் தம்மையே நல்கும் தியாகத்தை வற்புறுத்துகிருர் கவிஞர்.

"தன்னுயிரின் மேலாம்எம் நாட்டிற்கே என்றெண்ணித்
தகையுண்ணும் இதயம் வேண்டும்"41

நாட்டின் வளர்ச்சியில் மக்களின் பங்கு எத்தகையது? என்ற உண்மையை உணர்த்துவதற்காக ஆழியன் என்னும் பாத்திரத்தைப் படைத்து, அவன் வழியே தாய்நாட்டு மக்களுக்கு அறைகூவல் விடுக்கிருர் காரைக்கிழார்.

"தளர்ச்சிக்கு வழிகோலும் முதிர்ந்த நாளில்
தளராத நெஞ்சத்தைத் துணையாய்க் கொண்டு
கிளர்ச்சிக்குத் தடையாகித் தொண்டு செய்த
கிழவோனும் ஆழியனும் இருந்தான்! நாட்டின்
வளர்ச்சிக்குச் சிலரேனும் இவர்போல் உண்டேல்
வன்போக்கும் பழிநோக்கும் வருமோ?"42

ஒவ்வொரு தனிமனிதனும் ஆழியனைப் போல் நாட்டுணர்வுடன் செயலாற்றின் நாடென்பது நாடா வளத்ததாய், நாட வளந்தருவதாய்த் திகழுமல்லவா?

**சந்தநயம்:**

கவிஞர் காரைக்கிழார் பல்வேறு பாக்களையும், பாவினங்களையும் கொண்டு இக்காவியத்தைப் பாடியுள்ளார். எனவே பல்வேறு சந்தங்களை அலேயோசை வெளியிடுகிறது. மொழி என்பது கருத்தின் வாகனமன்றோ? கருத்துச்சிறப்பும், சொற்சிறப்பும் கொண்ட இக்காவியம் விழுமிய சந்தத்தையும், கெழுமிய உணர்ச்சியையும் கொண்டுள்ளது. ஆபர்கிராம்பி என்னும் மேனாட்டுத் திறனாய்வாளர் கூறுவது போன்று43 இலக்கியக்கலேயின் மிகச் சிறந்த கருவியான ஓசைநயத்தை உணர்ச்சிச் செறிவோடு வழங்கியுள்ளார் கவிஞர்.

பெயர்க்காரணம்:

அமைதி காக்கவும், உதவி வேண்டினுர்க்கு உதவும் நல்மனத்துடனும் சென்ற சோழர் படை அலேயோசை மிக்க கடலேக் கடந்து, அலேயோசையென ஆர்ப்பரித்த கலாஹிதமை அடக்கி மீண்டது. கடாரத்தின் வரலாறும், தமிழகத்துக்கும் கடாரத்துக்கும் இடையே நிலவிய தொடர்பு அலேயோசையாக நின்று நிலவ வல்லது. மேலும் இக்காவிய மாந்தர் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் ஒவ்வொருவிதமான ஓசை கடலலே போல விடாது ஒலிசெய்கின்றது. மலர்க்கொடியின் இதயத்தில் செழியன்பால் கொண்ட காதல் பேரோசையாய் முழங்குகின்றது. இதனேக் 'கன்னியவள் நெஞ்சில் அலேயோசை ஆர்ப்பரிக்கும்' எனக் கவிஞர் சுட்டுகிருர். அலேயோசை ஒய்வதில்லே. உலகத்துக்கு எதையோ உரைக்க வேண்டுமென அலேகள் அலேந்துகொண்டிருக்கின்றன. அந்த அலேகள் உரைப்பதாக நீதி கூறி முடித்துள்ளார் ஆசிரியர்.

"அலேயிடை உழன்றே ஆர்ப்புறும் மாசுபோல்
உலகிடைத் தீமையும் உறழ்வதே வாழ்க்கை
கரையிடை மாசெலாம் ஒதுங்குதல் போல் - ஒரு
வரையிடைத் தீமையு மடங்குதல் நியதியே"44

காவியம் அலேயோசையோடு தொடங்கி, இடையிலும் அலேயோசையுடன் நடந்து இறுதியில் அலேயோசையுடன் நிறைவுறுகிறது. காவியத்தின் பிறப்புக்கும் அலேயோசையே காரணமாகிறது. ஆதலால் அலேயோசை என்ற தலேப்பு காவியத்திற்குப் பொருத்தமாக அமைகிறது.

முடிவுரை:

கல்கியின் சமூக நாவலான 'அலேயோசை' இந்திய விடுதலே வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டிலங்குவது போன்று, இவ்வரலாற்றுக்காப்பியமும் கலாஹிதம்' போன்ற தீயவர்களிடம் சிக்கிய கடார நாட்டின் விடு-

தலையை - கடாரத்தின் அமைதிக்கான போராட்டத்தைச் சித்திரிக்கிறது. தரமிக்க இலக்கியப்படைப்பான அலை-யோசைக் காவியம் மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் 'அலையோசையைப்' போல என்றென்றும் நிலைக்கும் என்பது அங்கை நெல்லி. இக்காவியத்திற்குப் பாயிரம் வழங்கிய கவிப்புயல் கரு. வேலுசாமியின் கருத்தும் கவிச்சுடர் காரைக்கிழாரின் புலமைத்திறத்தை நிறுவு-கின்றது.

"பாப்புனை திறனில் பயில்நடை நலனில்
யாப்பெனும் அறனில் நலமார் உவமைகள்
அனைத்தினும் பயனுய் அணிபெறக் காப்பியம்
வினைத்திறம் புரிந்தார் காரைக் கிழாரிவர்
நின்று நிலைக்கவும் நெடும்புகழ் தாங்கவும்
இன்று பிறந்தார் இயலலை புரந்தே"

## புரியாப்புதிர்

கவிஞர் காரைக்கிழாரின் கவிதைத்தொகுப்பான பூச்சரத்தில் இடம்பெற்றுள்ளது 'புரியாப்புதிர்' என்னும் காவியம். பதின்மூன்று இயல்களைக் கொண்ட, அளவால் மிகச் சிறிய கதைப்பாடலாகும் இது.

**கதையமைப்பு:**

கதையின் கரு மிகச் சாதாரணமானதுதான். ஆயின் கவிச்சுடர் காரைக்கிழார் கதையை வளர்த்துச் செல்லும் பாங்கு சிறப்புடையது. ஏழையான காவிய நாயகன் அமுதனும், செல்வரின் மகளான கோதையும் ஒருவரை ஒருவர் காதலிக்கின்றனர். ஆயின் இவர்களின் காதலைக் கோதையின் தந்தை ஏற்காததுடன் மட்டுமன்றித் தன் ஆட்களை அனுப்பி அமுதனின் முகத்தில் திராவகத்தை ஊற்றுமாறு ஏவுகிறார். இதனால் அமுதனின் ஒரு கண் பார்க்கும் சக்தியை இழந்து விடுகிறது. அமுதன் ஓவியக்கலையில் வல்லவன். அமுதாவை மாதிரியாகக் கொண்டு அவன் வரைந்த ஓவியத்திற்குக் கண்கள் மட்டும் வரையப்படாமல் இருக்கும் வேளையில் அக்காட்சியைக் கண்ணுற்ற கோதையின் தந்தை அவர்களின் காதலை அறிந்து கட்டுப்பாடுகள் விதித்து அமுதனின் கண்பார்வையையும் இறுதியில் பறித்து விடுகிறார். தன் மகள் கோதையை வேறொருவருக்கு மணமுடிக்கிறார். ஓவியனான அமுதன் வரைந்த கண்ணில்லா ஓவியத்தைக் கோதையின் கணவர் கோதையிடம் காட்டுவதற்காக வாங்கிச் செல்கிறார். ஓவியத்தைக் கண்ட மாத்திரத்தில் கோதையின் உயிர் பிரிகிறது. அக்கணமே அமுதனும் வலிப்பு வந்து இறக்கிறான். இது காவியத்தின் கதையமைப்பாகும். எவ்விதச் சிக்கலில்லாமல் கதையைத் தெளிவாகச், சரளமாகக் கவிஞர் சொல்லியுள்ளார். ஆகலின் கதை சுவை பயக்கிறது.

கவிதைநயம்:

காவியத்தின் கதை சாதாரணமானதாக இருப்பினும் கவிதைச்சிறப்பால் காவியம் சிறக்கிறது. பெண்கள் இயல்பாகவே அதிகமாகப் பேசும் பண்புடையவர்கள். இதனை உளங்கொண்ட கவிஞர் நிலவுமங்கையும் வம்பளக்க வந்ததாகக் கற்பனை செய்து பாடுவர். உலகியல் வழக்கில் பெண்கள் பேசுவதனை 'வம்பளப்பது' என்று சுட்டுவது உண்டு. ஆகவே கவிஞர் காரைக்கிழாரும் நிலவுப் பெண்ணின் வருகையை நயமாக,

"வம்பளக்க வந்தநிலா மங்கை என்பாள்
வட்டமுகம் காட்டியொரு குறும்பு செய்தாள்"45

என்று பாடுவர்.

கோதையின் தந்தையாகிய மாறப்பன் அமுதனின் முகத்தில் திராவகத்தை ஊற்றியதும் கோதையை உந்து வண்டியினுள் கட்டாயப்படுத்தி எடுத்துச் செல்கின்றனர். உந்துவண்டி பிரிந்ததனைத் தற்குறிப்பேற்ற அணிநயம் படப் பாடுவர் கவிஞர்.

"காதலுக்கும் வாழ்வுக்கும் உளதூரத்தைக்
காட்டுகின்ற கருவியைப்போல்"46

காதலுக்கும் வாழ்வுக்கும் உள்ள தூரத்தை அளக்கும் கருவியாகவே கவிஞர் உந்து வண்டியைக் காண்கிறார்.

காவியத்தின் ஊடே கவிச்சுடர் காரைக்கிழாரின் சமுதாய உணர்வு தெற்றெனப் புலப்படுகிறது. காதலினை ஏற்காத சமுதாயத்தைக் கவிஞர் சாடுகிறார். இதன் எதிரொலியைக் கீழ்க்கண்ட பகுதியில் நாம் கேட்கிறோம்.

"தூசில்லா உடைதன்னைத் தட்டி விட்டுத்
தொடர்பவரைத் துதிப்பதற்குக் கண்ணிங்குண்டு
காசில்லா நிலைமைக்காய்த் தவறுவோரைக்

கண்டுநகை சிந்துதற்குக் கண்ணிங்குண்டு
தேசில்லார் சிலர்கூடிச் சிரித்துக் காட்டும்
சிறுகலையைச் சுவைத்திடவுங் கண்ணிங்குண்டு
மாசில்லாக் காதலினைக் காண மட்டும்
மாநிலத்தில் கண்ணில்லை; கண்ணே யில்லை!

வாழ்க்கைக்கு இலக்கணங் கண்ட தமிழர் - அகவாழ்வு, புறவாழ்வென அரிய வாழ்க்கையைப் பகுத்துப் பண்போடு வாழ்ந்த தமிழர் இன்று காதல் வாழ்வினை ஏற்கவில்லையே என ஏங்குகிறார் கவிஞர். இப்பகுதியில் சிறுமை கண்டு சீறியெழும் பண்பைக் காண்கிறோம். இக்காவியத்தில் ஓசைச்சிறப்பையும் உணர்ச்சிப்பெருக்கையும் காணலாம்.

பெயர்ப்பொருத்தம்:

காவியத்திற்குப் 'புரியாப்புதிர்' எனத் தலைப்புக் கொடுத்துள்ளமையால் இப்பெயர்ப் பொருத்தத்தைத் தெளிவுறுத்தும் வண்ணம் காவியத்தின் ஓரிரு இடங்களில் 'புரியாப்புதிர்' என்ற சொற்றொடர் பயின்று வந்துள்ளது.

"காதற் பயிரென்ன அழகோவியந்தான் அங்கே
பலருக்குப் புரியாத புதிரா யிற்றே"

'காதலுக்குக் கண்ணில்லை' என்ற பழமொழி இன்று வரை புரியாத புதிராகவே திகழ்கிறது என்ற உண்மையைக் கதைக்கருவாக்கிக், கதையை முடிக்கும் போது மேற்கண்ட உண்மையையே நினைவுறுத்தி முடிப்பதால் 'புரியாப்புதிர்' என்னும் தலைப்பு பொருத்தமாக உள்ளது.

## மேற்கோள் விளக்கம்


1. *New Caxton Encyclopaedia, Vol. 7, P-2213.*
2. *Cassel's Encyclopaedia of Literature, Vol. 1, P.195.*
3. *C.M. Bowra, From Virgil to Milton, P.1*
4. எஸ். வையாபுரிப்பிள்ளை, காவியகாலம், ப. 264.
5. வ. சுப. மாணிக்கம், கம்பர், ப.42.
6. *John Clark, The History of Epic Poetry, P.32.*
7. மா. இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.184.
8. ச.ஞானசேகரன், பாரதிதாசன் - கண்ணதாசன் காப்பியங்கள் ஓர் ஒப்பாய்வு, அச்சில் வாரா முனைவர்பட்ட ஆய்வேடு, ப. 37.
9. கா. அப்பா துரை, அலையோசை முகப்பு.
10. சுவாமி சத்தியாநந்தர், மலாயா சரித்திரம், ப.63
11. காரைக்கிழார், அலையோசை, ப.31.
12. இராமசுப்பையா, மலாக்கா மன்னர்கள் வரலாறு, ப.149
13. காரைக்கிழார், அலையோசை, ப.158.
14. மேலது, ப.62.
15. மேலது, ப.80
16. மேலது, ப.128.
17. மேலது, ப.21.
18. மேலது, ப.26.
19. மேலது, ப.33.
20. மேலது, ப.34.
21. மேலது, ப.28.
22. மேலது, ப.88.
23. மேலது, ப.88.
24. மேலது, ப.102.
25. மேலது, ப.106.
26. மேலது, ப.99.
27. மேலது, ப.94.
28. மேலது, ப.96.
29. கம்பர், இராமகாதை, ஆரண்யகாண்டம், சூர்ப்பனகைப்படலம், பா-1.

30. மேலது, கும்பகர்ணன் வதைப்படலம்.
31. காரைக்கிழார், அலேயோசை, ப.45.
32. மேலது, ப.73.
33. மேலது, ப.87.
34. மேலது, ப.140.
35. மேலது, ப.140.
36. சி. பாலசுப்பிரமணியன், மலர் காட்டும் வாழ்க்கை, ப.7.
37. காரைக்கிழார், அலேயோசை, ப.144.
38. மேலது, ப.17.
39. மேலது, ப.17.
40. மேலது, ப.173.
41. மேலது, ப.84.
42. மேலது, ப.173.
43. *L. Abercrombie, Principles of Literary Criticism, P.50.*

    *"Rhythm is no doubt the most valuble use in literary art of the sound of the words. Since for the most part it is rhythm which conveys the emotional atmosphere without which experience could not live.*
44. காரைக்கிழார், அலேயோசை, ப.175.
45. காரைக்கிழார், பூச்சரம், ப.104.
46. மேலது, ப.117.
47. மேலது, ப.125.

## கிணற்றுத்தவளை

'பிள்ளைத்தமிழ்ப் பாவலர்' என்று பெருமையாகப் போற்றப்படும் கவிஞர் சி.அன்பானந்தத்தின் அழகிய படைப்பு இக்காவியம். நாடறிந்த நற்கவிஞரான இவர் அருட்கவிச்செல்வர், திருவருட்கவிஞர் என்ற சிறப்புப்பெயர்களையும் பெற்றவர்.

*நூலமைப்பு:*

*மலையகப் பின்னணியில் மலர்ந்த இக்காவியம் அறுசீர் விருத்தத்தால் இயன்றது. மனித சமுதாயத்தை நோக்கிய அங்கதமாக அமைந்துள்ளது இக்காவியம். காவியத்தின் நோக்கம்,*

"ஒள்ளிய நேர்மைக் கருத்தெல்லாம்
உரைக்கும் வண்ணம் பயனுக்கி
மள்ளிய சீர்மைச் சமுதாய
மலர்ச்சி எண்ணிக் கவிபாட"1

என நூலிறுதியில் வெளிப்படுகின்றது. குறைகளைக் களைந்து நிறைகளைப் பெருக்குவதே இவ்வங்கதக் காவியத்தின் நோக்கம்.

*பாட்டுடைத்தலைவன்:*

காவியங்கள் தன்னிகரற்ற தலைவனையோ அல்லது தலைவியையோ கொண்டிருப்பது தமிழ்க்காப்பிய மரபு. இந்நூற்ருண்டில் இம்மரபு தகர்ந்த நிலைக்கு இக்காவியம் ஓர் உதாரணமாகும். இருபதாம் நூற்ருண்டுக் காவியங்கள் ச்ாதாரண மனிதனைப் பாடுவதாக மட்டும் அமையாமல், மனிதனிலும் கீழான விலங்குகளைப் பாட்டுடைத் தலைவனுக்கிப் பாடும் தகைமைய என்ற புதுப்போக்கினை உருவாக்கித் தந்த பெருமை இக்காவியத்துக்கு உண்டு. பாரதியின் 'குயில் பாட்டு' குயிலைப் பாட்டுடைத்

தலைவியாக்கி அதன் நெட்டைப் புலம்பலை வெளிப்படுத்துவதாய் உள்ளது. பாரதி கண்ட வழியில் பாவலர் சி.அன்பானந்தமும் கிணற்றுத்தவளையை நூலின் தலைவனுக்கிப் பாடுகிறுர். சிற்றிலக்கியங்களிலே ஒரு வகையான தூது இலக்கியத்தில் நாரை, மயில், கிளி, பூவை (நாகணவாய்ப்புள்) போன்ற பறவையினங்களைத் தூதாக அனுப்பும் மரபுண்டு. தலைவனுடைய தார் பெற்று வருமாறு பறவைகளைத் தூதனுப்பி மகிழ்வாள் தலைவி. பாட்டுடைத் தலைவனைப் புகழ்வதை விட அதிகமாகத் தூதுசெல்லும் இப்பறவையினங்களை வாழ்த்துவது தூது இலக்கிய மரபு. ஆழ்ந்த தமிழிலக்கியப் புலமை கொண்ட கவிஞர் சி.அன்பானந்தம் தூது இலக்கிய மரபை உளங்கொண்டு கிணற்றுத்தவளையைத் தூதுவனுக்கி மனித சமுதாயத்தின் குறைநிறைகளைக் கண்டு வருமாறு செய்துள்ளார். நூலின் தலைவன் கிணற்றுத் தவளையாயினும் தவளை போற்றிப் புகழும் தலைவன் வேலுசாமி.

**கதையமைப்பு:**

'கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பம் தெரியுமா?' என்ற பழமொழி கதைக் கருவாக அமைகிறது. பினுங்கு நகரைச் சேர்ந்த வேலுசாமி - வள்ளி தம்பதியர் மகள் இந்திரா. இவள் சந்திரனைக் காதலிக்கிறுள். இவர்களின் காதல் திருமணத்தைப் பெற்றேரும் உடன்படுகின்றனர். திருமணம் நிகழ்வதற்கு முன்பாகத் தனக்கு முடிக்க வேண்டிய கடமை ஒன்றிருப்பதாயும்; அதனை முடித்ததும் இந்திராவைத் திருமணம் புரிவதாகச் சந்திரன் கூறுகிறுன். சந்திரன் தன்னுடைய பேச்சில் கிணற்றுத்தவளையை உவமையாகக் கூறுகிறுன். இதனைக் கேட்டுக்கொண்டிருந்த ஆண் கிணற்றுத்தவளை நடந்த நிகழ்ச்சிகளைக் கூறத் தன் மனையாளைச் சென்றடைகிறது. பெண் கிணற்றுத்தவளை 'மனத்திமிர் கொண்ட மாந்தரின் மதியீனத்தை' எண்ணி,

"சொன்னதைக் கேட்ட பின்னும்
சொரணைதான் இல்லை கொல்லோ

பின்னடை யாமல் மாந்தர்
பிழைப்பெலாம் கண்டே வாரீர்"2

எனச் சொல்லி நாட்டுவளப்பம் அறிய அனுப்பி வைக்கிறது. தவளையும் வேலுசாமியின் காரிலேயே நொய்வத்தோட்டத்திற்குச் செல்கிறது. லாரியில் பயணம் செய்து கோலாலும்பூர் செல்கிறது. மனித சமுதாயத்தை மதிப்பிட்டுப், பின் இந்திரா - சந்திரன் திருமணத்தைக் கண்டு களித்துச், சிறுவரின் குறும்புகட்கு இலக்காகி மீண்டும் கிணற்றையே அடைகிறது.

காவியப்பண்பு:

கதையமைப்பு முற்றிலும் கற்பனை வாய்ந்தது. தவளையின் தகவற் பயணம் புதிய கற்பனை. ஆயினும் இக்கற்பனைக் கதையின் வாயிலாகச் சொல்லப்படும் மாந்தர் வாழ்வு நடப்பியலை எதிரொலிப்பதேயாகும். காவியத்தில் கற்பனையும் நடப்பியலும் கலந்த இப்போக்கைக் கவிஞர்

"சற்றே மிகுந்த கற்பனையாய்த்
தானே இத்தொடர் இருந்தாலும்
உற்றே புகுந்து நோக்கிடிலோ
உண்மை நிலையே கூறுமெனும்
பற்றே மனத்துக் கொண்டதனால்
பாவில் வடிக்கும் எண்ணமுடன்
கற்றே தெளிந்தோர் திருமுன்னர்
கற்பனைக் கடையைத் திறக்கின்றேன்"3

எனப் பாடியுள்ளார்.

நாட்டுவளம், நகர்வளம் ஆகியவற்றை விரிவுறக் கிளப்பது பழங்காவியமரபு. இம்மரபினைக் கவிஞர் 'அன்பு' போற்றியுள்ளார். மலையக நாட்டின் விரிவான வளங்களை நான்கு விருத்தங்களில் சுருக்கமாகப் பாடியுள்ளார். இனவெறி, நிறவெறி, மதவெறி ஆகிய 'வெறிகள்' மிகுந்து வரும்

இன்றைய உலகில், எவ்வித வெறியுணர்வுமின்றி மலாயர், சீனர், இந்தியர் என்ற மூவின மக்களும் ஒற்றுமையாக வாழ்வது மலேயகமண்ணின் பெருமை உரைப்பதாய் - இவண் வாழும் மக்களின் மனவளம் உரைப்பதாய் அமைகிறது.

தவளையின் பயணத்துக்குத் தூண்டுதலாய் அமைந்தவர்கள் வேலுசாமியின் மகளும் மருகருமே. குறைகள் மலிந்த சமுதாயத்தில் நல்லவரான வேலுசாமியை இனங்கண்டு கொள்கிறது தவளை. காவிய மாந்தருள் வேலுசாமி மன்னு உலகத்து மன்னும் புகழ் வாய்ந்தவர். இதற்குக் காரணமாக அவருடைய நற்பண்புகளே திகழ்கின்றன.

தமிழிலக்கியங்களைப் பாடும் புலவர்கள் தெய்வத்திடம் காப்பு வேண்டுவது தொல்லிலக்கியமரபு. இதனை உளங்கொண்ட கவிஞர் தவளையும் தன்னுடைய பயணத்திற்குக் காப்பு வேண்டுவதாகக் காட்டியுள்ளார். வாட்டம் ஏதும் நேராமல், வாய்த்த பயணம் சோராமல், மீட்டும் தன் வீட்டை அடைய முருகன் அருளை நாடுகிறது தவளை. மனிதனுடைய செயல்களைத் தவளையின் மேல் ஏற்றிப் பாடும் பகுதியாகும் இது.

காவியத்திற்கு இன்றியமையாத - கவிதைக்கு இன்றியமையாத கற்பனை இக்காவியத்தில் சிறப்புற அமைந்துள்ளது.

> "பொதுவாகக் கற்பனை மனத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைகின்றது என்பது உளவியலார் கருத்து. மனத்தின் உரம் அதன் கற்பனையாற்றலில் உள்ளதென்றும், அத்தகைய நல்லுணர்வைத் தருவது கவிதை என்றும் கூறுவர் ஆபர் கிராம்பி"4

கிணற்றுத்தவளை என்னும் இக்குறுங்காவியக்கற்பனை மனித இனத்தின் மாண்புக்கு வழிகாட்டும் ஆக்கக்கற்பனையே.

*சமுதாய எள்ளல்:*

சமுதாய உணர்வினில் ஒன்றிப் பிறக்கும் எந்த ஒரு படைப்பும் காலத்தின் கண்ணாடியாகவே திகழ்கின்றது. இது சிறந்த இலக்கியத்தினுடைய பண்புகளுள் ஒன்று. இவ்விலக்கியப் பண்பு 'கிணற்றுத்தவளை' என்னும் குறுங்காவியத்திலும் சிறப்புற அமைந்துள்ளது. "நிகழ்கால, இறந்தகாலத் தொடர்புகள் இல்லாமல் எந்த ஓர் ஆசிரியரும் தனித்து இருந்துவிடுவதில்லை. இத்தொடர்புகளினால் பாதிக்கப்பட்டு எழுதப்படும்போது ஓர் இலக்கியம் தேசிய இலக்கியத்திற்குரிய இயல்புகளைப் பெற்றுவிடுகிறது. ஒரு நாட்டின் இலக்கியம் என்பது ஏதோ ஒரு நூல் தொகுப்போ அல்லது குறிப்பிட்ட பூகோள எல்லைக்குள் எழுதப்பட்டவையோ அல்ல. ஒவ்வொரு காலகட்டத்திலும் அந்நாடு எவ்வாறு சிந்தித்துச் செயல்பட்டு வந்தது என்று காட்டும் நூல்களே இலக்கியமாகப் போற்றப்படுகின்றன"5 என்பர் அட்சன். இக்கருத்துக்கியைய இன்றைய மலேசியத் தமிழ்ச்சமுதாயத்தைச் சித்திரித்துக் காட்டும் குறுங்காவியமாகத் திகழ்கின்றது 'கிணற்றுத்தவளை'. மனித சமுதாயத்தில் மலிந்து காணப்படும் குற்றங்களையும் தீமைகளையும் படைப்பிலக்கியங்கள் பல வழிகளிலும் படம்பிடித்துக்காட்டும். இவற்றில் பெரும்பான்மையும் படைப்பிலக்கியவாதிகளோ அல்லது பாத்திரப்படைப்புக்களோ சமுதாயத் தீமைகளைக் காட்டுவதாய் அமையும். ஆயின் இக்காவியத்திலோ சமுதாயத் தீமைகளையும், குற்றங்களையும் தவளையின் எண்ணங்களாலும், வாய்மொழிகளாலும் வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர். இது புதிய உத்தியாம். மாந்தரினத்தையும் தம்மினத்தையும் தவளை ஒப்பிட்டு ஆய்வு செய்வது கற்பனைக்கு விருந்தாவதுடன் அன்றி

"மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில்"6

என்ற முடிவுக்கும் நம்மை இட்டுச்செல்கின்றது.

மனித சமுதாயம் எப்படிப்பட்ட கீழ்மக்களைக் கொண்டிருக்கிறது என்பதனை எவ்வளவு நயமாகக் கவிஞர் காட்டியுள்ளார்! பதவி ஆசை மக்களைப் படுத்தும் பாட்டை எள்ளற்சுவையோடு கவிஞர் பாடும் பகுதி நயமுடைத்து.

"வாய்த்தால் போதும் நாற்காலி
வச்சிரம் தடவி அமர்கின்றான்
ஏய்த்தார் பலரை அவன்கட்டி
இந்திர லோகம் படைக்கின்றான்
சாய்த்தால் அவனை அப்பதவி
தனக்கே எனத்தான் அதிலொருவன்
காய்த்தான் ஆனால் அணிசேர்ப்பான்
கடிதாம் குருச்சிப் போர்நிகழும்"7

பதவிமோகம் மக்களைப் பண்பற்ற விலங்குகளாய் மாற்றும் பான்மைதான் என்னே! எனத் தவளை வியக்கிறது. இன்றைய உலகில் எதற்கெடுத்தாலும் சங்கம், குழு என்ற அமைப்புக்கள் தோன்றுவது தன்னலங் கருதியே என்றும்; உதவி செய்திட எண்ணமில்லாமல் தொல்லை கொடுப்பதற்குத் தயாராய் உள்ள கயவர்களே மிகுதி என்றும் அறிகிறது தவளை.

தோட்டப்புறங்களில் தூய்மையற்ற சூழலில் மக்கள் வாழ்வதனைக் கண்டு வேதனைப்படுகிறது தவளை. இவ்வேதனை எள்ளலாகக் கீழ்க்கண்டவாறு ஒலிக்கிறது.

"காரை விட்டே இறங்கியதும்
கண்ணில் பட்டது சாக்கடைதான்"8

ஆகாறு சிறிதாய்க் கொண்ட மக்கள் போகாறு அறிவதில்லை; சேமிக்கும் பழக்கமும் இல்லை; வேதனை கண்டு விதியை நோவதும் தோட்டப்புற மக்களின் இயல்பாகும் எனத் தோட்டப்புற மக்களின் நிலைக்கு இரங்குகிறது தவளை. தொழிலாளி வாடுவதும்; முதலாளி உயர்வதும் தோட்டப்புறங்களில் கண்கூடெனக் கண்டறிகிறது தவளை. இதனைக்

கண்டு இரங்கும் தவளையின் இரக்கத்தை இனிதுறக் காட்டுவர் கவிஞர்.

"பாலை வெட்டும் பாட்டாளி
பாலைப் போல்நீர் வடிக்கின்றான்
பாலை விற்கும் முதலாளி
பாய்மரம் போல நிற்கின்றான்
காலை எழுந்து பாடுபட்டுக்
கையில் காணும் சிறுபொருளை
மாலை வந்தால் குடிப்பதிலே
மைனஸ் ஆக்கி விடுகின்றான்"9

தோட்டப்புற மக்களுக்குக் கல்வியறிவில்லை; அதனால் பிள்ளைகளையும் கல்வி கற்க அனுமதிப்பதில்லை. பிறப்புச் சான்றிதழ் எடுக்கும் முறைகளைக் கூட அறிவதில்லை. கிணற்றுத்தவளை கூடத் தோட்டப்புற மக்கள் வாழ்வை இழிந்ததென வெறுக்கிறது. தோட்டத்து மக்கள் 'சம்சு' குடித்துச் சீரழிவதைப் பார்த்து,

"கருவினைக் குடியைக் கெடுக்குமந்தக்
கள்ளச் சம்சோர் எமனன்றோ
இதைத்தான் குடித்தே உயிரும்விட
இங்கீர் கூட்டம் இருக்குமெனில்
எதைத்தான் மனிதர் பகுத்தறிவால்
எம்மினும் செய்தே உயர்ந்துள்ளார்?"10

என வினவுகிறது தவளை. தவளையின் கேள்வி நியாயமானதுதான்.

வேலுசாமியின் காரில் பயணம் செய்த தவளை சந்திரன் காரில் பயணம் செய்து துப்பறிகிறது. சந்திரன் துப்பறியும் நிபுணன். சந்திரனோடு சென்று தவளையும் காட்டில் வாழும் கயவர் கூட்டத்தைப் பற்றித் துப்பறிகிறது. துப்பாக்கி முனையில் கயவர் கூட்டம் சந்திரனைக் கைது செய்வதற்கு வருந்துகிறது. மது, மாது ஆகியவைக்கு

அடிமையாகும் கயவரின் இழிசெயலை ஏளனம் செய்கிறது தவளை.

நாகரிகம் என்ற பெயரால் ஒழுங்காக உடை உடுத்-தாது திரிபவர்களைப் பார்த்ததும் ஆண், பெண் வேறுபாடு அறிய இயலாமல் மயங்குகிறது தவளை. தமிழினத்தில் சிலர் 'தாறுமாறாக' உடையணிவதையும் எள்ளி நகைக்கிறது தவளை. வானூர்தியில் பயணம் செய்யும் தவளை, தலைநகராம் கோலாலும்பூர் விமான நிலையத்தில் 'ஹிப்பிகளை'க் கண்-ணுற்று,

*"எங்கள் இனத்தில் இதுபோல*
*எக்கச் சக்கம் கிடையாது*
*திங்கள் தனிலே ஆராய்ச்சி*
*செய்திடப் புகுந்த மனித இனம்*
*தங்கள் நாட்டின் அவலமதைச்*
*சற்றும் ஆய்ந்திட நினைத்திலது"11*

என எண்ணுகிறது. தவளையின் எண்ணம் தவறல்லவே?

**தமிழ்ப்பயணம்:**

தவளையின் தலைநகர்ப்பயணம் தமிழ்ப்பயணமாக அமைகிறது. தமிழ் எழுத்தாளர் சங்கக் கண்காட்சிக்குத் தலைமை தாங்க வேலுசாமி செல்வதாக ஒரு நிகழ்ச்சியை உருவாக்கி, அவருடன் தவளையையும் பயணம் செய்ய-வைக்கிறார் கவிஞர் அன்பு. தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தொண்டினைப் போற்றுகிறது தவளை. மலையகத்தில் தமிழ் வளர்ச்சிக்கென எழுத்தாளர் சங்கத்துக்கு உறுப்பினர்களைச் சேர்த்தும், எழுத்தாளர்களை ஊக்குவிக்கப் பரிசுகள் வழங்க இசைந்தும் வேலுசாமி பணிபுரிவதைத் தவளையின் தமிழ்-நெஞ்சம் கண்டுகளிக்கிறது. மலேசியத் தமிழ் எழுத்தாளர்-களை எழுத்தாளர் சங்கம் பேணிக்காப்பதனைக் கண்டு தவளை வாழ்த்துகிறது.

"விழுதும் தாங்கும் ஆலெனவே
விளங்கும் சங்கம் வாழியவே"12

தவளேயின். இவ்வாழ்த்து 'உண்மை; வெறும் புகழ்ச்சியில்லே' என்று காவியங்கற்பாரை உள்ளச்செய்வது உறுதி. 'நல்ல மரத்தில் புல்லுருவி' போன்று தமிழ் எழுத்தாளர் சங்கத்திலும் சில புல்லர்களேக் காண்கிறது தவளே. தூய மனத்தோர் தொடர்ந்து தொண்டாற்ற வேண்டும் எனத் தூயமனத்துடன் வாழ்த்துகிறது தவளே.

"வல்லார் தமிழைக் கண்போல
வளமாய் இங்கே காக்கின்றூர்
பொல்லா அறிஞர் சிலர்வந்து
புறமும் காட்டிச் செல்கின்றூர்
சொல்லால் பொருளால் இச்சங்கம்
தொடர்ந்தே வாழ்க. . . . . . . ."13

என்று வாழ்த்துவது பாவலரின் பைந்தமிழ்ப்பற்றைக் காட்டுகிறது.

மலேசியத் தமிழர்கள் பெரும்பாலும் தம் குழந்தைகளேத் தமிழ்ப்பள்ளிக்கு அனுப்புவதில்லே என்ற குற்றச்சாட்டு பரவலாகச் சொல்லப்படுகின்றது. இதனேத் தவளேயும் கேட்கிறது. தவளேயின் தமிழ்நெஞ்சத்தில் ஏக்கம் பிறக்கிறது. அதன் எதிரொலியை,

"சொந்தத் தாய்மொழி அறிவதையே
துயராய்க் கருதி ஒதுக்கிடுவோர்
இந்தக் காலம் எமதுமொழி
இனிமை நினேத்துப் பயிலுவரோ"14

என்ற வேண்டுதலில் செவிமடுக்கிறோம். தாய்மொழிக் கல்வியின் அவசியத்தைத் தவளே அறிந்திருக்கத் தமிழர்கள் உணராதது ஏன்? என்ற சிந்தனேயும் பிறக்கிறது.

மலேசியத் தமிழர்களிடையே வாழ்க்கைநிலை, கல்வி, சமுதாயம், அரசியல், பொருளாதாரம் எனப் பல துறைகளிலும் குறை கண்டு எள்ளி நகைக்கிறது கிணற்றுத்தவளை.

**நகைச்சுவை:**

"எள்ளல் இளமை பேதமை மடனென
உள்ளப்பட்ட நகை நான்கு என்ப"15

என்று நகைச்சுவை பிறப்பதற்குரிய நிலைக்களன்களைத் தெளிவுறக் கூறுகிறது தொல்காப்பியம். மனித சமுதாயத்தைப் பற்றிய அங்கதமாக, எள்ளல் அடியாகப் பிறந்த குறுங்காவியமாகக் 'கிணற்றுத்தவளை' விளங்குவதால் நகைச்சுவை காவியம் முழுவதும் இழையோடுகிறது. மண்ணிலுள்ள மனிதர் செய்கையை மதிப்பிடச் செல்லும் ஆண்தவளையின் செயல் "பெண்மகள் ஆதிக்கத்தில் பிறந்ததிவ் வுலகம்"16 என்ற உண்மையை உணர்த்துவதாய்க் கவிஞர் சுட்டுகிறார். மனித இனத்தில் மட்டுமின்றித் தவளையினத்திலும் பெண்களின் ஆதிக்கத்தைக் காட்டியுள்ளது நகைப்பைத் தருகிறது.

தவளை சம்சு குடிப்பது வேடிக்கையான நிகழ்ச்சி. குவளையில் இருப்பது என்னவென்று அறியத் தவளை தாவி அருகில் செல்லச் சிறிதளவு சம்சு அதன் வாய்க்குள் சிதறி விழுவதாகக் காட்டுவது ஆசிரியரின் கற்பனைத்திறத்துக்குச் சான்றுவதோடு நகையும் பயக்கிறது. மனிதர்க்குப் போதை ஏறுவது போல் தவளைக்கும் போதை உண்டாகிறது. கள் மயக்கத்தில் காதல் மயக்கமும் சேர்ந்ததால் கனவுகள் தவளையை ஆட்கொள்ளுகின்றன. இதனால் சாலை விபத்து ஏற்படுகிறது; தவளைக்குச் சாவும் நேர்கிறது. காதல் மனையாள் ஒப்பாரி பாடுகிறாள். தவளையின் இளையமனைவிக்கு ஏற்பட்ட விதவைக் கோலத்துக்கும் சேர்த்தே மூத்தாள் வருந்துகிறாள். இறந்துபோன தவளையை எக்குழு எரிப்பது எனத் தவளைக் குழுக்களிடையேயும் தகராறு. இப்படிப் பல வேடிக்கையான சம்பவங்கள் நகைப்பை

விளைவிக்கின்றன. மனிதர்களின் செயலைத் தவளையின் மேல் ஏற்றித் தற்குறிப்பேற்றமாகக் கவிஞர் பாடியிருப்பது கவிஞரின் புலமைக்கும் நகைச்சுவைத் திறத்துக்கும் நல்லதொரு சான்றும்.

எள்ளி நகையாடுவதை 'நையாண்டி' செய்வதாக வழக்கில் கூறுவதுண்டு. "சமுதாயத்தின் ஊழல்களைக் கண்டறிந்து குத்தலான முறையில் கண்டிப்பது நையாண்டியாகும். இத்தகையதொரு நையாண்டியில் நூலாசிரியர் தமது வெறுப்பையோ, கசப்பையோ, விரக்தியையோ பட்டவர்த்தனமாகக் காட்டிக் கொண்டுவிட்டால் அவர் எடுத்துக்கொண்ட கருமமே நிலைகுலைந்து பயனற்றதாகிவிடும். இத்தகையதொரு கருமத்தில் அந்தரங்கமான அனுதாபத்தோடும் பரிவோடுந்தான் அவர் எழுத முனைய வேண்டும். இவ்வாறு எழுதுவதை ஆங்கிலத்தில் நன்மை பயக்கும் நையாண்டி (*Benevolent Satire*) என்பர் ரகுநாதன்."17 இவ்வடிப்படையில் மலேசியத் தமிழர்களின் நன்மை கருதிச் செய்யப்பட்ட அங்கதத்தையே அன்பானந்தம் கையாண்டுள்ளார்.

**உவமைநயம்:**

கருத்துச் செறிவும் கற்பனை நயமும் கொண்ட இக்காவியத்திற்கு மேலும் எழிலூட்டுவன அழகிய, நயமான உவமைகளாம். பிறர்க்குதவா வீணர்களைக் கவிஞர் அன்பானந்தம் நயமான உவமைகள் வழியே நமக்கு அறிமுகம் செய்கிறார்.

"உப்பிப் பெரிதாய் எழுந்தேறும்
உதவா ரப்பர்ப் பந்தெனவே
இப்பித் துலகில் உறவாடும்
இவரால் யார்க்கும் பயனுண்டோ
சப்பித் துப்பிய பழங்கொட்டை
தனிலும் கீழாம் மனிதரிலே"18

பந்தினையும் விசையையும் இணைத்துப் பாடுவது பாவலர் மரபு. 'சிந்துக்குத் தந்தையாம்' பைந்தமிழ்ப் புலவன் பாரதி 'விசையுறு பந்தினைப்போல்' வேண்டியபடி செல்லும் உடல் வேண்டியவன். ஆயின் கவிஞர் அன்பானந்தமோ பந்தின் விசையை மட்டும் குறிக்காது அதன் வடிவத்தையும் பாடுகிறார். ரப்பர்ப்பந்து பெரிதாக இருப்பின் மட்டும் பயனில்லை; அது மேலேற விசையன்றோ வேண்டும்? உடலால் பெருத்திருந்து உள்ளத்தால் சிறுத்திருக்கும் - உள்ளத்தால் பண்படாத வீணர்களின் சக்தி வீணனதே என்ற கருத்தை விளக்குகிறது இவ்வுவமை. சப்பித் துப்பிய பழக்கொட்டைக்கு மதிப்பில்லை; அதனால் பயனுமில்லை. வீணர்களுக்கு அன்பானந்தம் தரும் மதிப்பும் இவ்வளவுதான். கழுதையைக் கயவர்களுக்குக் கவிஞர் உவமிப்பதும் பொருத்தமுடையதே. பொதியைச் சுமக்கும் கழுதை போலப் பாவச்சுமைகளைக் கயவர்கள் சுமக்கிறார்கள் அல்லவா? பேச்சு வழக்கில் உள்ள இவ்வுவமையைக் கவிஞர் இலக்கிய வழக்கிற்குக் கொண்டுவந்துள்ளார்.

மீனைக் கண்ணுக்கு உவமிப்பது இலக்கியமரபு. ஆயின் கவிஞரோ மீனை நெஞ்சுக்கு உவமிக்கிறார். இது முற்றிலும் புதுமையே! மீன் துள்ளுவது போன்று இந்திராவின் நெஞ்சும் துள்ளிற்று என்பது கவிஞர் கூற விழைந்த கருத்து. மீனுக்கு அடைமொழி கொடுத்து "நெய்தல் நிலத்துக் கயலெனவே"19 நெஞ்சம் துள்ளியது என்ற உவமை கற்பார்க்குக் களிப்பு நல்குவது.

ஆசிரியரின் இலக்கியப் பயிற்சியை இனிதுறக் காட்டும் உவமைகளும் இடம்பெற்றுள்ளன. கடலை 'லாஞ்சு' மூலமாகக் கார் கடந்து செல்வதனைச் 'சீதையைப் பிரிந்த ராமர் சேதுவைக் கடந்தாற் போல' என்ற உவமை மூலம் விளக்குவர். சீதையின் பேச்சைக் கேட்ட இராமன் அடைந்த துயரைப் போலத் தானும் அடையவேண்டி வருமென ஆண்தவளை எண்ணுகிறது. இவ்வுவமைகள் கவிஞர் இராமகாதையின்பால் கொண்ட ஈடுபாட்டைத் தெரிவிப்பன.

உணர்ச்சிச் செறிவான உவமைகளையும் இக்குறுங்காவியத்தில் காண்கிறோம். தோட்டப்புற மக்களின் வாழ்க்கைநிலை 'விரலற்றோர் மீட்டும் வீணையாகவும்', 'தேனில் விழுந்த ஈயாகவும்' தோற்றமளிக்கிறது. பழமொழிகளையும் உவமைகளாக்கியுள்ளார் பாவலர்.

**சோதிட ஈடுபாடு:**

கவிஞர் சோதிடக்கலையிலும் வல்லவர். இந்திரா - சந்திரன் திருமணம் மரபு, இன, உறவுமுறைகள் தவறாமல் கற்றவர் போற்ற நடந்தது என்று மட்டும் கூறாமல், 'வரமும் பெற்றிணை ஜாதகத்தால்' எனக் குறிப்பிடுகிறார். இதன் மூலம் மலேசியத் தமிழர்களின் சோதிடக்கலை ஈடுபாடும், ஆசிரியரின் ஈடுபாடும் தெரியவரும். கவிஞர் சோதிடக்கலையிலும் வல்லவர். ஆதலால் ஜாதகப் பொருத்தம் பார்ப்பதைச் சாதகமாகச் சுட்டியுள்ளார்.

**திரைப்படச் செல்வாக்கு:**

மலையகத் தமிழர்களை மிகவும் கவர்ந்த சாதனங்களுள் ஒன்று திரைப்படம். இதனைக் கவிஞர் நன்குணர்ந்தவர் ஆதலால் 'பரமசிவன் கழுத்திலிருந்து பாம்பு கேட்டது' என்ற திரைப்படப் பாடலைப் பயன்படுத்தி ஆண்தவளைக்கு அறிவு கொளுத்துகிறார். இப்பாடலின் பொருளைப் புரிந்துகொண்டு தவளை தன் இருப்பிடமான கிணற்றை மீண்டும் நாடிச்செல்கிறது. இப்பாடலைத் தவளைக்கு மட்டுமன்றி மலேசியத் தமிழர்களுக்கு அறிவுரை கூறுவதற்காகவும், திரைப்பட மோகத்தை எள்ளி நகையாடுவதற்காகவும் கவிஞர் கையாண்டுள்ளார் என்பதில் தவறில்லை.

**முடிவுரை:**

கிணற்றுத்தவளை மலேசியப் பின்னணியில் பயணம் மேற்கொண்டாலும் அது மக்களிடம் எதிர்பார்க்கும் நல்ல

செயல்களும், உயரிய கொள்கைகளும் தமிழ்ச்சமுதாயம் முழுமைக்கும் உரியன. கிணற்றுத்தவளையின் பயணம் நடுநிலை கொண்ட நல்லெண்ணப்பயணம் என்பது அங்கை-நெல்லி. தவளையின் பயணம் புதுமை வாய்ந்தது. இப்-பயணத்தைக் கருவாகக் கொண்ட இக்குறுங்காவியம் மலேசியத் தமிழ்க் குறுங்காவியங்களிடையே வேறுபட்டுத், தனித்தன்மையுடன், அங்கதக்காப்பியமாக அழகுடன் திகழ்கிறது.

## மேற்கோள் விளக்கம்

1. சி.அன்பானந்தம், கிணற்றுத்தவளை, ப. 104.
2. மேலது, ப-24.
3. மேலது, ப - 18.
4. ந.சுப்புரெட்டியார், கவிதையனுபவம், ப - 160.
5. Channing, Remarks on American Literature, P-44.
6. திருவள்ளுவர், திருக்குறள், 'கயமை', குறள் - 1.
7. சி.அன்பானந்தம், கிணற்றுத்தவளை, ப - 37.
8. மேலது, ப - 35.
9. மேலது, ப - 38.
10. மேலது, ப - 38.
11. மேலது, ப - 83.
12. மேலது, ப - 65.
13. மேலது, ப - 66.
14. மேலது, ப - 78.
15. தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல், நூற்பா எண் - 4
16. சி.அன்பானந்தம், கிணற்றுத்தவளை, ப - 26.
17. ரகுநாதன், சமுதாய இலக்கியம், ப - 80
18. சி.அன்பானந்தம், கிணற்றுத்தவளை, ப - 67.
19. மேலது, ப - 90.

# கலாவள்ளி காவியம்

தமிழ் இலக்கிய வளர்ச்சியில் இசுலாமியர்களின் பங்கு குறிப்பிடத்தக்க அளவுண்டு. தமிழகத்தில், பெரும்பான்மையான இசுலாமியப் புலவர்கள் இலக்கியப் படைப்புக்களைச் சமயத்தைப் பரப்ப ஒரு சாதனமாகவே பயன்படுத்தினர். ஆகவே இசுலாமியப் படைப்பிலக்கியங்களில் பெரும்பாலானவை இசுலாமியக் கோட்பாடுகளின் விளக்கங்களாகவே அமைந்துள்ளன. கடல்கடந்து வந்தும் கன்னித்தமிழ் மீது தணியாத பற்றுக்கொண்டு சில இசுலாமியர்கள், சமயத்தைப் பரப்புவதையே நோக்கமாகக் கொள்ளாமல், எல்லோரும் படித்து மகிழத்தக்க வகையில், சமயவேறுபாட்டையும் கடந்து, இறவாப்புகழ் கொண்ட இலக்கியங்களைப் படைத்துள்ளனர். இவ்வணியில் பினுங்கைச் சேர்ந்த ஓ.எம். காதிர் சுல்தான் என்ற கவிஞரும் இடம்பெறுவர். செந்தமிழ்க்கவிமணி, கவிகாசு என்னும் சிறப்புப் பெயர்களைக் கொண்ட இவர், பினுங்கு செந்தமிழ்க் கலாநிலையத்தைத் தோற்றுவித்த சுவாமி இராமதாசரின் மாணவர்.

**நோக்கம்:**

சமுதாயத் தொடர்பின்றிப் படைக்கப்படும் எந்த ஓர் இலக்கியமும் பயனற்றது. மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் நல்வாழ்வைக் கருத்தில் கொண்டு கவிஞர் இக்காவியத்தை உருவாக்கியுள்ளார். தமிழினம், தமிழ்மொழி, தமிழ்ப்பண்பாடு ஆகியவை இந்நாட்டில் சிறந்தோங்கிச் செழிக்கவேண்டும். தமிழ்ச்சமுதாயத்திலே மண்டிக்கிடக்கும் சீர்கேடுகள் மறைந்து தமிழினம் மங்காது ஒளிரவேண்டும் என்னும் நன்னோக்கின் அடிப்படையில் இக்கலாவள்ளி காவியத்தைக் கவிஞர் படைத்துள்ளார். காவியநோக்கின் ஏற்றத்தை,

"நிலாவெள்ளி வட்டம் வெய்யில்
நெருப்பினை எதிர்த்தல் போலே

கலாவள்ளி என்னும் இந்தக்
காப்பியம் சமுதா யத்தில்
உலாவரும் ஏற்றத் தாழ்வை
ஒழித்திடும் . . . . . . . . . . . ."1

என உவமைக்கவிஞர் சுரதா உயர்வாகப் பாராட்டுவர். எனவே தமிழ்ச்சமுதாயத்தின் மேம்பாடே காவியநோக்காகும்.

**கதையமைப்பு:**

இக்காவியத்தின் கதை தெலுக்கான்சன், பினங்கு, சிங்கை ஆகிய மூவிடங்களிலும் நிகழ்கிறது. தெலுக்கான்சன் அருகே கலாவள்ளித் தோட்டத்தில் வாழ்ந்த செல்வச்செழிப்பு மிக்க அரங்கநாதர் - மீனுட்சி இணையரின் அருமை மகள் கலாவள்ளி. பெயருக்கேற்றவாறு கல்வி மற்றும் கலைகளில் தேர்ச்சிபெற்றவள் கலாவள்ளி. பெற்றோர் திருமணம் செய்ய முயற்சிக்கின்றனர். பெற்றோர் பார்க்கும் மாப்பிள்ளைகளையெல்லாம் தன் மனத்திற்கும் குணத்திற்கும் பொருந்தாத காரணத்தால் கலாவள்ளி நிராகரிக்கிருள். தன் மனதுக்கிசைந்த மணவாளனுக்கே மாலை சூடவேண்டித் தெய்வ வழிபாட்டுடனும் பொறுமையுடனும் காலங்கழிக்கிருள். அரசியல் மற்றும் காலமாற்றத்தால் அவள் குடும்பம் வறுமையடைகிறது. வறுமைத் துயரில் பெற்றதாயையும் இழக்கிருள். தாயை இழந்ததும் தந்தையுடன் தோட்டத்தைவிட்டு வேலைதேடிச் செல்கிருள். அவர்கள் சென்ற வாகனம் விபத்துக்குள்ளாகிறது. அவள் சிகிச்சை பெற்ற அம்மருத்துவமனையிலேயே தலைமைத் தாதியாய்ப் பணிபுரிகிருள்.

தொழில்நேரம் தவிர எஞ்சிய வேளைகளில் சமூகத்தொண்டு செய்கிருள். நாளிதழ்களுக்குக் கவிதை எழுதுவது கலாவள்ளியின் வழக்கமாயிற்று. தரமான கவிஞராகப் புகழ் பெறுகிருள். இந்நிலையில் 'ஒளிவிளக்கு' வாரஇதழின் ஆசிரியர் சிவநேசன் அவளிடம் கவிதைகள் வேண்டுகிருர். இலக்-

கியநட்பு இருவருக்குமிடையே வலுப்பெறுகிறது. இவ்விருவரும் இல்லறத்திலும் இணைகின்றனர். மக்களைப்பெற்றும், மாண்புற வாழ்ந்தும், தமிழ்ச்சமுதாய உயர்வு கருதிப் பாடுபட்டும் உயர்கின்றனர். மன்னரிடம் டத்தோ, டத்தின் பட்டமும் பெறுகின்றனர். இவர்கள் இறந்ததும் இவர்களுக்குச் சிலைகள் அமைக்கப்படுகின்றன. தோட்டமக்களிடையே குறிப்பாகத் தமிழ்மக்களிடையே 'சிலைமேல் எழுத்தாக' வாழ்கிறார்கள்.

சிக்கலில்லாத தெளிவான கதையமைப்புடையது இக்காவியம். கதையின் கரு சாதாரணமானதுதான். ஆயின் கதை வளர்த்துச் செல்லப்பட்டிருக்கும் பாங்கு தரமான நாவலுக்குரிய கதையமைப்பை நினைவூட்டுகிறது. சுருங்கக் கூறின் அறிஞர் மு.வரதராசனார் கையாளும் போக்கையே கவிஞர் காதிர் சுல்தானும் பின்பற்றியுள்ளார். எளிய கதையின் மூலம் அரிய கருத்துக்களைக் காவியத்திலே கூறியுள்ளார். கதைநிகழ்ச்சிகள் பொருத்தமுற, அளவாக அமைந்துள்ளன. சிவநேசனின் வரலாறும், சபாபதியின் வரலாறும் பின்னோக்கு உத்தியின் மூலம் உணர்த்தப்படுகின்றன. ஆர்வநிலையும் இக்காவியத்தில் சிறப்புற அமைகிறது. சிவநேசன் - கலாவள்ளி ஆகியோரின் நட்பு வளர்ந்து இல்லறவாழ்வில் இருவரும் இணைவதற்காகப் "பின்னொன்று எழுதினாரே" எனக் கவிஞர் ஆர்வநிலையைப் பயன்படுத்துகிறார். கடிதம் மூலமாகவே நட்பை வளர்த்துக்கொண்ட சிவநேசன் அவளை மணப்பதற்குரிய அனுமதியை நாடுகிறான். இவ்வனுமதியையே 'பின்னொன்று' எனச் சுட்டுவர் கவிஞர்.

கலாவள்ளிக்கும் அவள் தந்தைக்கும் ஏற்படும் விபத்து கதைப்போக்கில் திருப்பத்தை உண்டாக்குகிறது. வறுமைத்துயரில் வாடிய கலாவள்ளிக்கு வேலைவாய்ப்பைத் தருகிறது. திருமணத்துக்கு முன்னும் கலாவள்ளி குறுகிய காலமே துன்புறுகிறாள். திருமணத்துக்குப் பின்னும் , குழந்தைகள் பிறந்த பின்னும் அவளுக்குப் பொருளாதார நெருக்கடி

ஏற்படுகிறது. கதைப்போக்கில் அமையும் போராட்டங்கள் புறப்போராட்டங்களே. கவிஞரே புறநோக்குநிலையில் நின்று கதை கூறிச்செல்கிருர்.

**பாத்திரப்படைப்பு:**

காவியத்தலைவி கலாவள்ளி. இவள் பெயராலேயே காவியமும் அழைக்கப்படுகிறது. ஆகவே காவியம் கற்பார் நெஞ்சங்களில் நீங்கா நினைவாக இடம்பெறுகிருள். 'குடும்ப விளக்கு' என்னும் காவியத்தில் பாவேந்தர் படைத்த தங்கம் போலக் கலாவள்ளியும் ஒப்பற்ற பாத்திரம். தமிழினப் பெண்களின் உயர்வுக்கு வழிகாட்டும் உயரிய பாத்திரம்! எண்ணம், சொல், செயல் என்ற மூன்ருலும் தமிழின உயர்வையே நாடும் நல்ல பாத்திரம். பாரதியும், பாரதி-தாசனும் காணவிழைந்த புதுமைப்பெண்ணின் பிரதிபலிப்பு.

இக்காவியம் எழுந்த காலகட்டத்தில் (அனைத்துலக மகளிராண்டு 1975-இல் கொண்டாடப்பட்ட பின்னரும்) கூடப் பெண்களைத் தாழ்வாக எண்ணியும், பேசியும், நடத்திவந்த ஒரு சமுதாயம் தமிழ்ச்சமுதாயமே. இதனைக் கவிஞர்,

"பெண்டுநீ படித்திட் டாலும்
பிழையிலா தெழுதி ஞலும்
இன்றிதிற் பயன்பெ ருதே
என்றவர் சென்றிட் டாரே"2

எனப் பாடுவர். இத்தகு பிற்போக்கான எண்ணங்கொண்ட இத்தமிழ்ச்சமுதாயம் உயர வேண்டுமெனில் பெண்கள் முன்னேற வேண்டும். வீட்டு முன்னேற்றம், நாட்டு முன்-னேற்றம், உலக முன்னேற்றம் அனைத்தும் பெண்களின் முன்னேற்றத்தில்தாம் அடங்கியுள்ளன என்பது கவிஞரின் ஆழமான நம்பிக்கை. ஆகவேதான் கலையரசியாக மட்டு-மின்றிச் சிறந்த இல்லத்தரசியாகவும் கலாவள்ளியைப் படைத்துள்ளார் கவிஞர்.

"கல்வியில் லாத பெண்கள் களர்நிலம் அந்நி லத்தில்
புல்விளைந் திடலாம் நல்ல புதல்வர்கள் விளைதல் இல்லை
கல்வியை யுடைய பெண்கள் திருந்திய கழனி - அங்கே
நல்லறி வுடைய மக்கள் விளைவது நவில வோநான்"3

"கல்வியில்லாமின்னுளை மின்னுள் என்பேன்"4

எனும் பாவேந்தர் கூற்றுப்படிக் கலாவள்ளி படைக்கப்பட்டுள்ளாள்.

தனக்கென வாழாத் தகைசால் பூங்கொடி கலாவள்ளி. பிறர்க்கென வாழும் பேருள்ளம் வாய்த்தவள். தொண்டென்னும் தூயநெறி நின்ற தூயவள். பொதுத்தொண்டில் ஈடுபட்டால் சமுதாயம் அவதூறு பேசுமே என அஞ்சி நிற்கும் கோழைப் பெண்களுக்கு வழிகாட்டுபவள். கலாவள்ளி பட்டம், பதவிக்கெனத் தொண்டு செய்தாளில்லை. பொதுநலங் கனியும் அப்பூவையின் தொண்டுநெறியை,

"இரவதனிற் பெண்மக்கள் பயிலு தற்காய்
இடம்பிடித்துத் தையலொடு சித்திரங்கள்
உறவுடனே கற்பித்தாள் தமிழில் நல்ல
உறுதிபெறு நூலறிவை யூட்டி வந்தாள்"5

என்று போற்றுவர் பாவலர்.

கல்வி, கலைகளில் மட்டுமின்றி இலக்கியத்துறையிலும் பலரை ஈடுபடுத்தினுள். தமிழகத்தில் கவிதைத்துறையிலும் பெண்கள் கணிசமான அளவில் பங்காற்றியுள்ளனர். ஆயின் இந்நாட்டில் மரபுக்கவிதை இயற்றும் பெண்களே இலர். கவிதை இலக்கணங்களை ஆர்வத்துடன் கற்க இவண் பெண்கள் முன்வருவதில்லை. பெண்கள் கவிதைகள் வடிக்கவேண்டும் என்பது கவிஞரின் பேரவா. ஆகவே கலாவள்ளியைச் சிறந்த கவிஞராகவும் காட்டியுள்ளார்.

"கரவதுதான் ஒன்றின்றிக் கவிதை மார்க்கங்
கற்பித்தாள் பலபேர்கள் பாடி னார்கள்
கரவைபிரி கன்றானார் மக்க ளெல்லாம்
கலாவள்ளி தனைக்காணா திருந்த போதே"6

மேலும் மலேசியநாட்டைப் பொறுத்தவரை தமிழ்ப்பெண்களின் பிற்போக்கான எண்ணங்களை முறியடிக்கும் புரட்சிப்பெண்ணாக - புதுமைப்பெண்ணாகக் கலாவள்ளியைப் படைத்துள்ளார் ஆசிரியர். இலக்கியத்துறையிலும் இவள் முன்னேறியதாகக் காட்டியிருப்பதற்கு மற்றொரு சிறப்புக்காரணமும் உண்டு. நாளிதழ்களில் எழுதினால் நற்பெயர் கெட்டுப்போகும் என்று அறியாமையில் உழலும் படித்தபெண்கள் பலரும் இந்நாட்டில் உள்ளனர். இம்மங்கையரின் மடமையைப் போக்கவென்றே கலாவள்ளி தமிழ்நேசன், தமிழ்முரசு ஆகிய நாளிதழ்களுக்குத் தன் கைவண்ணங்களை அனுப்புகிறாள். இதனை,

"தண்ணிய தலை நகர்க்கும்
தகைமைசால் சிங்கப் பூர்க்கும்
கண்ணென அனுப்பு கின்றார்
கவிநிறை நாளின் தாளில்"7

என்று குறிப்பிடுகிறார் கவிஞர்.

தலைமைப்பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கும் கலாவள்ளிக்கேற்பவே அவள் துணைவர் சிவநேசனும் குறிக்கோள் பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கிறார். தனக்கேற்ற இலட்சியக் கணவரைக் கலாவள்ளி பெறவேண்டும் என்ற காரணத்தினாலேயே பெற்றோர் பார்த்த வரன்களை ஒதுக்கிவிடுகிறாள். கலாவள்ளியின் திருமண உரிமையை அவள் பெற்றோரும் மதிக்கின்றனர். கலாவள்ளி தனக்கமையவேண்டிய கணவன் எப்படியிருக்கவேண்டும் என்பதனைக் கூறும் பகுதி சிவநேசனின் சீரிய பண்புகளைக் காட்டும்.

"என்னுடைக் கலைவன் மைக்கும்
இனியவென் மனத்தி னிற்கும்
புண்ணென வாய்க்கும் எந்தப்
புருடனும் அறவே வேண்டாம்
நன்மையிற் குணத்தில் நல்ல
கலைதனில் என்னை வென்ற
செம்மைசேர் ஒருவன் வேண்டும்"8

கலாவள்ளியும் சிவநேசனும் இணையற்ற - இலட்சியப்பிடிப்பு மிக்க இணையராகக் காட்சியளிக்கின்றனர். பெண்களை மதித்து, அவர்களின் ஆற்றலுக்குத் தூண்டுகோலாய் இருக்-கும் கணவன்மார் தமிழ்ச்சமுதாயத்தில் உருவாதல் வேண் டும் என்ற விழைவுடன் சிவநேசன் படைக்கப்பட்டுள்ளார் முருகன் என்னும் இயற்பெயர்கொண்ட சிவநேசன்

"பெண்ணுக்கு விடுதலை நீர் இல்லையென்றால்
பின்னிந்த உலகினிலே வாழ்க்கையில்லை"9

எனும் பாரதியின் வேண்டுகோட்கிசைய உருவாக்கப்-பட்டுள்ளார்.

துணைப்பாத்திரங்களான அரங்கநாதர், இரத்தின-சபாபதி ஆகியோர் நற்குணங்களின் உருவங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர். அரங்கநாதர் இனியசொற்களைக் கூறும் 'அமிழ்தவாயு'டையார். அரங்கநாதரின் தோழராக-வும், சிவநேசனின் மாமனுகவும் படைக்கப்பட்டுள்ள இரத்தினசபாபதி நட்பிற்கு இலக்கணமானவர். உடுக்கை இழந்தவன் கை போல10 உற்றுழி உதவும் பொன்மனத்தர்.

சொந்த முயற்சியால் முன்னேறிய சிவநேசன் மீது அழுக்காறு கொண்ட பரஞ்சோதியார் எதிர்நிலைப் பாத்-திரமாகச் செயல்படுகிறுர். ஆயின் இவரை முற்றிலும் எதிர்நிலைப் பாத்திரமாகக் கூறுதற்கில்லை. துணைப் பாத்-திரங்களுள் ஒன்ருகிய சிவநேசன் பாத்திரத்திற்கு மட்டுமே இவரால் தொல்லை நேரிடுகிறது. ஆயினும் கலாவள்ளிக்கு

நேரடியாகத் துன்பம் தராமல் மறைமுகமாகவே துன்பம் கொடுக்கிருர். எனினும் இவர் துன்பம் கொடுத்திராவிட்-டால் இரத்தினசபாபதி பாத்திரத்தை அறிமுகப்படுத்துதற்கு வாய்ப்பின்றிப் போயிருக்கும். ஆகவே மிகச் சிறு பாத்திர-மாயினும் கதைப்போக்கிற்குத் தேவையின்றிப் படைக்கப்-படவில்லே என்பது காவியத்தின் சிறப்பு அம்சமாகும்.

சிவநேசன் - கலாவள்ளி இணையரின் மகன் ரவிச்-சந்திரன் தமிழரின் பொருளாதார உயர்வுக்கு வழிகாட்டும் நல்ல படைப்பு.

"மகன் தந்தைக்காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்ருன் கொல்லெனுஞ் சொல்"11

என்னும் குறளுக்குத் தக்கதோர் எடுத்துக்காட்டு. பெரும்-பாலான சமூகச்சீர்கேடுகளேச் சுட்டிக்காட்டும் பாத்திர-மாகவும் படைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாம். தமிழ் இளேஞர்களிடையே மொழியுணர்வு அருகிவரும் வேளேயில் முன்மாதிரியாக விளங்கும் வண்ணம் ரவிச்சந்திரனேக் கவிஞர் படைத்துள்ளார். பெற்ருேரின் சொத்துக்களுக்கு மட்டும் வாரிசாக அமையாது அவர்களுடைய இலக்கிய உணர்வுகளுக்கும் அவன் வாரிசாக அமைகிருன். ஒளி-விளக்கு வாரஇதழ் அவன் பொறுப்பில் தமிழ்ச்சமு-தாயத்துக்கு ஒளியூட்டுகிறது.

நிகழ்ச்சிகளேத் தொய்வின்றிப் படைத்திருப்பது போலவே பாத்திரப்படைப்பையும் சங்கிலிக்கோர்வையாக இணேத்துப் படைத்துள்ளார். மிகக் குறைந்த எண்ணிக்கை-யில் பாத்திரங்களே உலவவிட்டு நல்லதொரு காவியத்தைப் படைத்துள்ளார் ஆசிரியர்.

**நன்றியுணர்வு:**

ஓர் எழுத்தாளனே இனங்காண உதவுவது அவன் படைத்த இலக்கியமே. உவமைக்கவிஞர் சுரதா இந்நூலுக்கு வழங்கியுள்ள வாழ்த்துரையில்,

"கப்பலை நங்கூ ரந்தான்
காப்பாற்றும் அறிஞர் போற்றும்
ஒப்பற்ற சிறந்த நூலே
ஒருவனைச் சிறந்தோ னாக்கும்"12

என்பர். இவ்வாறே கவிஞரின் நன்றியுணர்வை அறிவதற்கு இக்காவியம் வாயிலாக அமைகிறது. பொதுவாகவே புலவர் பெருமக்கள் நன்றியுணர்வு மிக்கவர்கள். சங்ககாலந்தொட்டு இன்றுவரை எண்ணற்ற புலவர்கள் செய்ந்நன்றி மறவாச் செம்மல்களாகத் திகழ்ந்துள்ளனர். கவிஞர் காதிர் சுல்தானும் விதிவிலக்கல்லவே?

செந்தமிழ்க் கலாநிலைய நிறுவனரான, முதுபெரும்புலவரான சுவாமி இராமதாசர் கவிஞரின் தமிழ்ப்புலமைக்குக் கால்கோள் செய்தவர். அன்னாரிடம் கவிஞர் இலக்கிய இலக்கணங்களைப் பழுதறக் கற்றார். ஆகலின் செந்தமிழ்க்கலாநிலையம் கவிதைப்போட்டி நடத்தியதாகவும், அதில் கலாவள்ளி பங்கேற்றுப் பரிசு பெற்றதாயும் கவிஞர் சில நிகழ்ச்சிகளைக் காவியத்தில் இடம்பெறச் செய்துள்ளார். இக்காவியம் உருவாவதற்குத் தூண்டுகோலாய் இருந்த கவிஞர் வீ. கே. சுப்பிரமணியனையும் நன்றியுணர்வுடன் நினைந்துள்ளார். இராமதாசரைப் பாராட்டும் கவிஞர் கூற்று கீழ்வருமாறு:

"துதிதமி ழவைக்கு நல்ல
துறையெலாம் அறிந்து தேர்ந்த
முதுதமிழ்ப் புலவ ரென்று
மொய்ம்புடன் யாரும் போற்றும்
மதிநிறை இராம தாசர்
மாட்சியாய்த் தலைமை யேற்று
விதியெலாம் எடுத்துச் சொன்னார்
வித்தகர் பாடி னாரே"13

பாரகாவியம் பாடிய கம்பரைப் போலத் தமக்குக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தி நன்றியுணர்வை வெளிப்படுத்துகிறார் கவிஞர் காதிர் சுல்தான்.

*சமுதாயச் சீர்கேடுகள்:*

சமுதாய நலிவுகளைப் போக்கும் மருத்துவரே எழுத்தாளர். சமுதாயம் நலிவடைவதற்குரிய காரணங்களைக் காட்டுவதோடு மட்டும் அமையாது அந்நலிவுகளைத் தீர்க்கும் வழிகளையும் எழுத்தாளர் காட்டவேண்டும். அப்பொழுதுதான் அவருடைய பணி முழுமையடைந்ததாய்க் கருதப்படும். இவ்வடிப்படையில் கலாவள்ளி காவியம் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்டிலங்கும் பெட்டகமாகத் திகழ்கின்றது. சீர்திருத்தக் கருத்துக்களைச் சொல்வதற்கென்றே சில பகுதிகளைக் கவிஞர் கதைப்போக்குடன் இணைத்துள்ளார். பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, இருபது ஆகிய இயல்கள் சமூகச் சீர்திருத்தச் சிந்தனைகளைச் சொல்வதற்காகவே படைக்கப்பட்டவை. பொங்கல் திருநாளில் கலாவள்ளி - சிவநேசன் கலந்து கொள்ளுதல்; பண்பாட்டுக்கழகம் அமைத்தல், ரவிச்சந்திரன் தொழில் மாநாடு கூட்டுதல் ஆகியவை சீர்திருத்தச் சிந்தனைகளை விதைக்கும் களங்களாகப் படைக்கப்பட்டுள்ளன.

தமிழர் திருநாள் மலேசியா மற்றும் சிங்கப்பூரில் தமிழ்ச் சமுதாய எழுச்சிக்கு வழிகாட்டும் விழாவாகக் கொண்டாடப்பட்டு வந்தது. தமிழர் திருநாள் பற்றிய சிந்தனைகளை மக்களிடையே பரப்பிய தமிழவேள் கோ. சாரங்கபாணியின் பங்கு மலேசிய, சிங்கை வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியதாகும். தமிழர்களை ஒன்றுபடுத்தும் தமிழர்திருநாள் தமிழரிடையே நிலவும் ஒற்றுமைக்குலைவைப் போக்க வழிகாட்டுகிறது.

தமிழர்களிடையே உள்ள சாதிவேறுபாடுகள், தமிழ்ப்பண்பாட்டில் பற்றின்மை, தன்னினத்தைக் காட்டிக் கொடுக்கும் 'எட்டப்பன் மனப்பான்மை', தலைவர்களின் பொறுப்பற்ற - பிரித்தாளும் மனப்போக்கு ஆகியவற்றால் தமிழ்ச்சமுதாயம் நாளுக்குநாள் நலிவடைதல் கண்கூடு. இதனைப் போக்க வழிமுறைகளையும் கூறுகிறார் சிவநேசன்.

எடுத்துக்காட்டாக ஆயிரம் சாதிகளை வைத்துக்கொண்டு அலைக்கழியும் தமிழினத்தைச் சிவநேசன்,

"சாதியென்ன சாதியடா மனிதருக்குள்ளே
சாதியெல்லாம் ஒன்றாகி முஸ்லீ மார்க்க
நீதிவழி நிலைபட்டு உரிமை யோடு
நிற்பதனைக் கண்டுமிவர்க் குணர்வே இல்லை"14

எனச் சாடுகிறார். இசுலாம் சமயம் சாதியை மறந்து மக்கள் அனைவரும் சமமே என்று கூறும். இத்தகு சிந்தனை தமிழரிடையேயும் திகழவேண்டும்.

ரவிச்சந்திரன் தொழிலாளர் மாநாடு கூட்டித் தமிழினத்தின் நலிவுக்கான காரணங்களைக் காட்டிச் சிறப்பாகப் பேசுகின்றான். மலேசியாவில் தமிழர்களின் கைவண்ணத்தில் உருவான பொருட்களுக்குக் கதறியழும் ஆற்றல் இருக்குமாயின் தமிழரின் இழிநிலைக்கு வருந்திப் புலம்பியிருக்கும். மேலும்,

"பின்னே வந்த சீனர்களும்
பெரிதாய் உயர்ந்து நிற்கின்றார்
கண்ணே போன்றிந் நாடதனைச்
காத்த தமிழர் நலிவுற்றார்
என்னே என்றால் மதுக்குடியோ
டிவர்கள் செயலின் இழிவொன்றே"15

என்று தமிழினத்தின் குடிப்பெருமையை அழிக்கும் குடியின் தீயவிளைவைச் சாடுவர். மற்ற இனத்தார் எள்ளும்படித் தெருக்களிலே வீழ்ந்து கிடக்கும் தமிழினத்தைக் கண்டு தலைகுனிவன்றோ ஏற்படுகிறது?

தமிழர்கள் உயர்வதற்குப் பல தடைக்கற்கள் உள்ளன. தமிழினம் தம்மைத்தாமே காட்டிக்கொடுக்கும் இழிவான பண்பினைக்கொண்டு விளங்குவது ஒரு தடைக்கல்லாகும். இதனைக் கவிஞர்,

"தங்கள் உயர்வை அழிப்பதற்குத்
தானே முயற்சி செய்வாரே"16

எனப் பொருத்தமுறப் பாடுவர். நுணலும் தன் வாயால் கெடுவது போலத் தமிழினமும் தமிழினத்தாலேதான் அழிகின்றது. தமிழினத்தை உயர்த்துகிறோம் என்று மார்தட்டிப் பேசும் தமிழினத்தலைவர்களின் பேச்சுகளும் செயல்களும் கவிஞர்க்கு ஆத்திரத்தையே உண்டாக்குகின்றன.

"இவர்கள் தம்மை உயர்த்துதற்கு
இங்கே தலைவர் சிலபேர்கள்
'பவர்கள்' மிக்கப் பட்டமொடு
பரிந்து வருவார் மேடைக்கு
அவர்கள் இவர்கள் என்பார்கள்
அவர்க்குட் பகைபல விளைப்பார்கள்
இவர்கள் வாழ்வைச் சுரண்டிமிக
எண்ணி வயிறு வளர்ப்பாரே"17

தமிழினக் காவலர்கள் தமிழினத்தை ஏமாற்றித் தாங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இத்தகு தலைவனை நம்பிய தமிழ்ச்சமுதாயம் எவ்வாறு ஈடேறும்? இதன்வழி தலைமைப் பதவி ஏற்போர் சமுதாயத்தை உயர்த்தப் பாடுபடவேண்டும் என்பதனைக் கவிஞர் உணர்த்துகிறார்.

உழைத்துப் பொருளீட்டும் தமிழர்கள் அதனை இந்தியாவிற்கு அனுப்பி ஏமாறும் இழிநிலையையும் கவிஞர் காட்டத் தவறவில்லை. இதனால் இவர்களும் நலம் பெறுவதில்லை. தமிழ்நாட்டாரும் நன்மையடைவதில்லை. பொருள் விழலுக்கு இறைத்த நீராக வீணாகின்றது. இதனை எதிர்த்து முதன்முதலில் அஞ்சாநெஞ்சோடு குரல்கொடுக்கிறான் ரவிச்சந்திரன்.

"கிடைத்த உடனே யப்பொருளைக்
கிடுகி டெனவே ஊருக்கு
உடைத்து நொறுக்கி அனுப்பிடுவார்

அங்கே யதுதான் பயனின்றி
விடைத்து விழித்தார் தமக்காகும்
இவர்க்கோ அங்கும் ஒன்றில்லை
கிடைத்த பொருளை ஈரிடத்தும்
கிடைக்காப் பொருளாய் ஆக்குவரே"18

எனக் கூறும் ரவிச்சந்திரன் தமிழர்களின் பொருளாதாரம் நலிவடைதற்குரிய கூறுகளில் ஒன்றை இனங்காட்டியுள்ளான். கவிஞர் கூற்றில் உண்மை அடங்கியுள்ளதை மறுக்கவியலாது.

**கவிநயம்:**

காதிர் சுல்தானின் கவித்திறம் காவியம் கற்பாரைக் களிப்படையச் செய்கின்றது. கவிஞரின் கவியாற்றலை மற்றொரு கவிஞரான சுரதா கீழ்வருமாறு போற்றுகிறார்.

"நெற்பயிர் வளர்ந்து வெள்ளை
நிலவினில் கதிர்கள் முற்றி
நற்பயன் தருதல் போலே
நலந்தரும் நூலே இந்நூல்"19

கற்றோரைக் கற்றாரே காமுறுவது இயல்பன்றோ? இவ்வடிப்படையில் கவிஞர் சுரதாவின் பாராட்டு பொய்யுரையன்று. மெய்யுரையே என நிறுவப் பல சான்றுகள் காவியத்துள் அமைந்துள்ளன.

அணிகளுக்கெல்லாம் தாயான உவமையணி இக்காவியத்தில் அழகொழுகப் படைக்கப்பட்டுள்ளது. நாட்டு வாழ்த்தில் கதிர்கள் விளைந்துள்ள காட்சியை,

"கிளிமூக்கன்ன வரிசைமணிப் பொற்கதிர்கள்"20

என வருணிப்பர். மலேசிய நாட்டுக்குப் பொருளாதார பலத்தை வழங்கும் இரப்பர் மரங்களைக் கவிஞர் கற்பனையுடன் அழகிய உவமையால் விளக்குகிறார். இரப்பர் மரத்தில் இழியும் பால் முதலாளிகளின் கொடுமைக்குள் சிக்கிய தொழிலாளிகளின் கண்ணீரேயாம்.

"பதமிழந்த தொழிலாளர் விட்ட கண்ணீர்
பால்மரமும் அழுகுமென்றாற் சொல்லப்
(போமோ"21

கலாவள்ளியும் அவள் தந்தையும் சென்ற காரின் வேகத்தை நயமுற,

"...........................
புயலான அவள்மனது போலக் காரும்
உரப்புற்று ஓடினது வேகத் தோடே
உறுங்கதியை மிகநாடிச் சென்றார் போல"22

என்பர்.

கலாவள்ளியின் கவிதை கற்போருக்கு எவ்வாறு இனிமையளித்தது என்பதனை உருவக நயம்படப் பாடுவர் கவிஞர்.

"கண்டொடு கனியின் சாறும்
கலையதன் சாறுங் கூட்டி
மண்டிய அடுப்பி லேற்றி
வளர்பசும் பாலுந் தேனும்
கொண்டதிற் கலந்தே யுண்ட
வாறுகாண் கவிதை என்றார்"23

இவண் தமிழினிமை குறித்துப் பாவேந்தர் பாடியது24 நினையத்தக்கது.

இக்காவியத்தில் பற்பலவிடங்களில் அந்தாதித் தொடை அழகுற அமைந்துள்ளது. பலவித யாப்பு வடிவங்களைக் கவிஞர் கையாண்டுள்ளார். மலேசியாவில் சில கவிஞர்கள் சமுதாய மதிப்பைப் பெற்றிருந்த போதிலும் யாப்பின் மதிப்பறியாமல் பாப்புனைகின்றனர். இதனால் 'புகழ்பெற்ற கவிஞர்கள்' படைப்பிலும் தவறுகள் உள்ளன. இந்நிலையில் காதிர் சுல்தான் போன்ற கவிஞர்கள் யாப்பில் பிழையின்றிக் கவிதைகள் புனைவது பேருவகை தருகின்றது.

இம்மலேசிய மண்ணில் பலருக்கும் தமிழ்க்கவிதை மரபுகளை ஆழமாகப் பயிற்றுவித்தது செந்தமிழ்க்கலாநிலையம். கவிஞர் காதிர் சுல்தானும் இங்கே கற்றவராதலின் அவருடைய புலமைத்திறத்தை வெளியிடும் தக்க சான்றாக இக்காவியம் அமைந்துள்ளது. இக்காவியத்தைப் பாடுமாறு தூண்டிய வீ. கே. சுப்பிரமணியன் கவிஞரின் திறமையை,

"யாப்பணி குன்றலில் லாவுயர் காவியம் யாத்தனனே"25

எனப் போற்றுவர்.

**சொல்லாட்சி:**

சொற்களைக் கொண்டு சித்துக்கள் புரியும் ஆற்றல் மிக்கவர் கவிஞர் என்பதனை நயமான சொற்கள் நன்கு புலப்படுத்துகின்றன. பாலைநிலம் வறட்சியைக் கொண்டிலங்குவது; வெப்பம் மிக்கது. பாலை என்னும் சொல்லைச் சிறப்புறப் பயன்படுத்தியுள்ளார் கவிஞர். சான்று கீழ்வருமாறு:

"எஸ்டேட்டு ஒழிப்பாலே அனேகம் பேர்கள்
இருந்த தனம் குறைந்ததினாற் பாலையானார்"26

ஆங்கிலச்சொற்கள் (நர்சு, பவர்) அவ்வாறே கையாளப்பட்டுள. கவிஞர் என்னும் சொல் ஆண், பெண் என இருபாலாரையும் குறிக்கும். ஆயின் பெண்கவிஞரை இனம்-

பிரித்துககாட்ட 'கவிஞை' என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார். விகசித, லிகிதம் ஆகிய ஓரிரு வடசொற்களும் இடம்பெற்றுள்ளன. வழக்குச் சொற்களும் கையாளப்பட்டுள்ளன.

*மண்ணின்மணம்:*

மலேசிய மண்ணில் கதை நிகழ்வதாகக் காட்டி, மலேசியத் தமிழ்ச் சமுதாயம் உயர்வுபெற வழிகாட்டி மண்ணின்மணத்தை வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர். மலேசியா சுதந்திரம் அடைந்த பின்னர் மலேசியத் தந்தையாம் துங்கு அப்துல் ரஹ்மானின் தலைமைத்துவத்தில் நாடு பல்லாற்றுனும் சிறந்து விளங்கியது. மலேசியத் தந்தையாம் துங்குவைப் புகழாத இந்நாட்டு இலக்கியங்களே இல. காந்திமகான் வழிவந்த துங்கு எனப் பாராட்டுவதோடு அமையாமல் காப்பியத்தினுள்ளும் கலைக்கழகத் திறப்புவிழாவிற்கு வந்து சிறப்புச் சேர்க்குமா று காட்டியுள்ளார்.

*முடிவுரை:*

இனவேறுபாடுகளை மறந்து ஏற்றமிக்க பெருவழியில் மலேசிய நாட்டை நிர்வகித்த துங்குவைப் போன்று இக்காவியமும் தனிச்சிறப்புடையதாக விளங்குகிறது. காவிய ஆசிரியர் காதிர் சுல்தான் சமயப்பொறை மிக்கவர். கன்னற்றமிழின் மீதும், தமிழ்ச் சமுதாயத்தின் மீதும் அக்கறை கொண்டவர் என்பதற்குக் கலாவள்ளி காவியமே தக்க சான்று.

## மேற்கோள் விளக்கம்

1. கலாவள்ளி காவியம், வாழ்த்துப்பா, ப.ix
2. மேலது, ப.10
3. பாரதிதாசன், குடும்பவிளக்கு, ப. 69-70
4. மேலது
5. காதிர் சுல்தான், கலாவள்ளி காவியம், ப.18
6. மேலது, ப.18
7. மேலது, ப.21
8. மேலது, ப.8
9. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப-228
10. திருவள்ளுவர், திருக்குறள் 788
11. மேலது, குறள் 70
12. கலாவள்ளி காவியம், வாழ்த்துப்பா, ப.ix
13. மேலது, ப.28
14. மேலது, ப.68
15. மேலது, ப.93
16. மேலது, ப.95
17. மேலது, ப.96
18. மேலது, ப.97
19. மேலது, வாழ்த்துப்பா, ப.ix
20. மேலது, ப.2
21. மேலது, ப.12
22. மேலது, ப.14
23. மேலது, ப.23
24. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் - தொகுதி 1, ப.87

கனியிடை ஏறிய சுளையும் - முற்றல்
கழையிடை ஏறிய சாறும்
பனிமலர் ஏறிய தேனும் - காய்ச்சுப்
பாகிடை ஏறிய சுவையும்
நனிபசு பொழியும் பாலும் - தென்னை
நல்கிய குளிரிள நீரும்

இனியன என்பேன் எனினும் - தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்

25. கலாவள்ளி காவியம், வீ. கே. சுப்பிரமணியன், வாழ்த்துப்பா.
26. மேலது, ப.13

## கண்ணம்மா - திறனுய்வு

செந்தமிழ் மணக்கும் 'சந்தனக்கிண்ணத்தை' வழங்கிய மலேயக்க் கவிவாணர் ஐ.உலகநாதனின் மற்றுமொரு படைப்பு 'கண்ணம்மா' என்னும் காவியம். இக்கதைப்பாடல் தமிழ்நேசன் ஞாயிறு மலரில் 'அணையும் ஆணையும்' என்ற பெயரில் வெளியிடப்பட்டது. அச்சுவாகனமேறி இலக்கியச் சந்தைக்கு வருகையில் 'கண்ணம்மா' என்னும் காரிகையின் பெயரைத் தாங்கி வெளிவந்துள்ளது.

**கதையமைப்பு:**

தமிழ்ச்சமுதாயத்தின்மாட்டு அதிக அக்கறை கொண்டவர் கவிவாணர் ஐ.உலகநாதன். இக்கருத்திற்குச் சான்ருக அமைவன கவிவாணரின் கன்னிமுயற்சியாம் 'சந்தனக்கிண்ணக்' கவிதைகள். அவை உறங்கும் தமிழனை எழுச்சி கொள்ளவைக்கும் ஏற்றமிகு நறும்பாட்டுக்கள்! 'கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுடியாம்' தமிழ்க்குடியின் நல்லிசை இவர் இதயங்கவர்ந்த இன்னிசை! ஆகலின் வீரத்தின் விளைநிலமான - தமிழ்ப்பண்பாட்டின் விளக்கமாக - விளையாட்டு வீரனும் மணியனைக் காவிய நாயகனுக்கி உள்ளார் கவிஞர். எடை தூக்கும் வீரன் மணியன் - தமிழர் வீரம் காட்டும் படைப்பு! விளையாட்டுத்துறையில் விற்பன்னனுன இப்பெருவீரனுக்கு மனைவியாக வாய்த்தவள் கண்ணம்மா. இவ்விருவரின் இல்லற வாழ்வை அடிநாதமாகக் கொண்டது 'கண்ணம்மா' என்னும் குறுங்காவியம். இந்நூலைப் பதிப்பித்த தாமரைப் பதிப்பகத்தாரும், நூலாசிரியரும் குறிப்பிடுவது போல இக்காவியத்தின் கதையமைப்பு 'புதிய அலைக்' கதையமைப்பே! நாவல்துறையில் புதிய அலைக் கதைகள் புற்றீசல் போலப் புறப்பட்டதன் விளைவாகக் காவியத்திலும் இத்தகையதொரு போக்கைப் புகுத்தினர் போலும் கவிஞர் ஐ.உலகநாதன்!

'புதிய அலே' பாணியில் கதை அமைந்துள்ளதால் கதையில் சிக்கல்கள் - போராட்டங்கள் இவற்றை எதிர்பார்க்க இயலவில்லே. இக்காவியத்தில் மணியன் எதிர்நோக்கும் சிக்கல்கள் உடற்கூறு அடிப்படையிலானவை. மருத்துவ அறிவு உடையோரும், உடற்கூறு வல்லுநர்களும், அறிவியல் கண்ணேட்டம் உடையோரும் மட்டுமே இச்சிக்கல்களின் வன்மை மென்மைகளேச் சீர்தூக்கி ஆய்வர். ஆயின் தமிழ்க்கவிதை கற்பார் இக்கதையமைப்பில் உண்மைக்கூறு நிரம்பியுள்ளதா? இல்லேயா? என்று ஆராயத் தேவையில்லே. கவிதையின் கருப்பொருளேப் பற்றி மர்ரே என்னும் மேனுட்டறிஞர் கருத்து கவிதைத்திறனுய்வுக்கு அளவுகோலாக அமைந்ததாகும்

"கவிதையின் அழகு கவிதையில் உள்ளதே
தவிரக் கவிதை கூறும் பொருளிலன்று"1

இவ்வடிப்படையில் நோக்கினுல் கவிவாணர் தாம் எடுத்துக்கொண்ட கருப்பொருளே எங்ஙனம் பாடியுள்ளார் என்பது ஆய்வுக்குரியது. ஆயின் இவ்விலக்கியக் கோட்பாடு நந்தமிழ் இலக்கியங்களுக்கு எங்ஙனம் பொருந்தும் என்பதும் இக்கட்டுரையின் பிற்பகுதியில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

உலகம் போற்றும் உயர் வீரனுகும் கொள்கைப்பிடிப்பு - கொள்கைவெறி கொண்ட மணியனிடம் இன்பந்துய்க்கும் எண்ணமும் 'வெறிகொண்ட போக்கைப் போன்றே' அமைந்திருந்தது. இவ்வெண்ணம் உயிருக்குத் தீங்கு பயக்கும் என்ற உண்மையைக் கவிஞர் கீழ்க்கண்டாங்கு மொழிகுவர்.

"மகிழ்ச்சிக்கும் எல்லேயுண்டு
மகிழ்ச்சியது மீறிவிட்டால்
மரணம் நேரும்"2

இக்காவியத்தில் மணியமோ, அவன் மனேவி கண்ணம்மாவோ மரணம் அடையவில்லே. ஆயினும் கண்ணம்மாவின் இன்பத்திற்கு மரணம் நேர்ந்தது. உடலுக்கு இறப்பு நேர-

வில்லையே தவிர உள்ளத்திற்கு இறப்பு நேர்ந்தது உண்மையன்றே? ஆகவே புதிய அலைக் கதையைக் காவியமாக்கினுலும்கூட உடற்கூறு அடிப்படையிலான உண்மையைப் படிப்பினையாக்கி அதனை மக்களுக்கு உணர்த்தியுள்ளார் கவிவாணர். 'கழிமிகு காமத்தின்' விளைவைக் கண்ணம்மா என்னும் கதைப்பாடல் காட்டுகிறது என்பதில் தவறில்லை. மணியன் கொண்ட பெருவேட்கை கண்ணம்மாவை இன்பத்திற்கு ஏங்கவைக்கும் ஏந்திழையாக்கி - இளமையிலேயே மூப்படையச் செய்கிறது. சுருங்கக்கூறின் இந்நூல் கண்ணம்மாவின் கண்ணீர்க் காவியம். இக்காவியக்கதையைக் கவிஞரே கூறுகிறுர். பாத்திர உரையாடல்களும் கவிஞர் கூற்றுகவே வெளிப்படுகின்றன.

**காப்பியப்போக்கு:**

கவிஞர் கவிதை வடிவ முன்னுரையான படையலில்

"..................
காவியத்துக் கல்வெட்டில்
நாற்றங்கால் பண்ணைகளை
நானறிவேன்; அன்னவர்முன்
ஏற்றிவைத்தேன் இவ்விளக்கை
இலக்கணமாய் வேலியிட்டே"3

என்று கூறியபடி காவிய மரபுகளைச் செவ்வனே பேணியுள்ளார். நாட்டுவளம், நகர் வளம், ஊர் வளம், பாத்திர அறிமுகம் எனக் காவியப் போக்கு தொடர்கிறது. காப்பியக் கதையினூடே தமிழ்ச் சமுதாயத்தின் மாட்டுக் கவிவாணர்க்குள்ள அக்கறை தெற்றெனப் புலனுகிறது. தமிழர்களிடம் உள்ள குறைகளைச் சுட்டிக்காட்டியுள்ளார். மருத்துவர் கூற்றுக இக்குறைகள் வெளிப்படுகின்றமை சிறப்பம்சமாகும். எழுத்தாளன் சமுதாயத்தின் நோய் தீர்க்கும் மருத்துவன். அவனுடைய எண்ண வெளிப்பாடுகள் மற்றும் சமுதாய மேம்பாட்டுக் கருத்துக்கள் நோய் தீர்க்கும் மருத்துவர் வாயிலாக வெளிப்படுவது பொருத்தமேயன்றே?

தமிழர்களின் தாழ்வுக்குக் காரணம் இன்னதென்பதை,

"வருமுன்னர்க் காப்பதில்லை வந்தபின்னர் நொந்து
வாடுவதே நந்தமிழர் வருத்தமெனக் கொண்டார்
பெருமன்னர் காலமுதல் வருமிந்தப் போக்கு
பிற்போக்குக் குயிர்கொடுத்து முற்போக்கைக் கொன்று
தருமின்னல் குறைவன்று தமிழ்மக்கள் இன்று
தாழ்ந்தற்குக் காரணமித் தன்மையினு - லன்றோ"4

என மொழிகுவர்.

தமிழர்களிடையே காணப்படும் குறைகளை மற்றோ-ரிடத்தும் சுட்டுகிறார் கவிவாணர்.

"நினைப்பதெலாம் மறந்துவிட்டு மறப்பதெலாம்
(நினைப்பார்
நேற்றின்று நாளையென்று முக்காலங் கண்டு
வினைபுரிந்த மரபுதித்து வீணுகிப் போனார்"5

காப்பியப்போக்கில் நல்ல உவமைகளும் கவிஞரின் பன்னூற்பயிற்சியும் வெளிப்படுகின்றன. கவிவாணர் 'பாவேந்தர்' விருதும் பெற்றவர். காப்பியப்போக்கில் கவிஞரின் கவித்திறன் வெளிப்படுமிடங்களும் உள. கவிஞ-ரின் தமிழுணர்வு சிறப்புறப் புலப்படுகின்ற பகுதிகளும் காவியத்தில் உள்ளன. மலையகத் தமிழர்களில் பெரும்-பாலோர் தாய்மொழியாம் தமிழ்மொழியைத் 'தெரியாது' எனக் கூறிக்கொள்வதில் பெருமையடைகின்றனர். இவ்வறியாமை கண்டு வேதனைப்படுகிறார். இவ்வேதனை

"பழக்கொத்துத் தமிழ்மொழியைப்
படியாத தமிழன்போல்
நிலையில்லாமல்"6

என்ற உவமையின் மூலம் எதிரொலிக்கிறது.

பாவேந்தர் பாரதிதாசன் மாத்தமிழின் இனிமைக்கு மங்கையொருத்தி தரும் சுகமும் ஈடாவதில்லை என்று புதுமையாய்த் தமிழ்ச்சுவை பற்றிக் கிளப்பர்.7 பள்ளியறைப் பாடம் பற்றிக் குறிப்பிடும் ஐ.உலகநாதன் தமிழினிமையை எண்ணுத நெஞ்சங்களையே உவமிக்கிறுர்.

"நினைக்குந் தொறும் நெஞ்சை இயக்கி
இனிக்குந் தமிழை எண்ணுர் போல"8

என்பது ஐ.உலகநாதனின் உவமை.

கவிஞர் மலையக நாட்டில் உள்ள நொய்வ மரங்களை மாவீரர்களாகவே காண்கிறுர். ஒப்பந்தக் கூலிகளாக வந்த தமிழர்கள் மலையக நாட்டை வளப்படுத்திய செய்தி யாவராலும் மறுக்க இயலா உண்மையாகும். இதனை,

"வந்தவர் என்றும் வாழ்பவ ராகி
செந்தமிழ் மாந்தர் தினந்தினம் சிந்திய
செந்நிறக் குருதியின் சிதறலில் விளைந்து
வெண்ணிறக் குருதியை வியப்புற வழங்கி
தென்கிழக் காசியத் திருநிலம் எங்கும்
மலையக நாட்டை வளமுறச் செய்து
கலையக மாக்கிக் காட்டிடும் நொய்வ
மரங்களின் வரிசை மறவரின் வரிசை
கரங்களைக் கோத்துக் காட்டுதல் போல"9

என்ற இப்பகுதி கவிஞரின் கற்பனைக்கு நல்ல சான்று. தமிழர் வீரம் சங்க இலக்கியங்கள் சால்புறப் போற்றுந்தகையது. இதன்மீது கொண்ட ஈடுபாடு உவமைகளாக வெளிப்படுகின்றது. வீரனை உவமை கூறும் போக்கு மீண்டும் மீண்டும் இடம்பெறுவது தமிழர் வீரத்திற்குக் கவிவாணர் தரும் மதிப்பையே காட்டுகின்றது. புகைவண்டி செல்லும் தோற்றம்,

"பகையினைச் சாடும் வீரனைப் போலே
புகையினை விட்டுப் புறப்படும் வண்டி"10

என்று வீரனுகக் காட்சியளிப்பதைப் பாடுவர்.

கடன்பட்ட நெஞ்சத்தின் தவிப்பை இராவணன் மூலம் கம்பன் காட்டுவான். இக்காட்சி தமிழ்க் கவிஞர் அனைவரையும் ஈர்க்கும் தகையது. இக்காட்சியைச் சற்று மாற்றிக் காலத்திற்கேற்றவாறு பாடுவர் கவிஞர்.

"கொடுக்கா திருந்தால் கொடுத்தவன் நெஞ்சம்
படும்பாட் டைத்தான் பட்டார் இருவரும்"11

இன்று கடன்கொடுத்தவன் கலங்கும் நிலையைக் குறிப்பாகச் சுட்டுகிருர் கவிஞர்.

காப்பியநடை:

காப்பியத்தின் கருப்பொருளைப் பற்றிக் கருத்துரைக்கையில் கவிவாணர்

"அகமும் புறமும் அடித்தளமாய்க் கொண்ட சங்க
காலப் பழைய அலையின் சாரலும் இடைக் -
காலத் தூறலும் இதில் உண்டு"12

என்பர். அகமும் புறமும் தமிழ்ப்பண்பாடு என்ற நாணயத்தின் இருபக்கங்கள். வீரத்தை விளையாட்டின் வாயிலாகச் சித்திரித்த கவிஞர் அகத்தைப் பாடுவதில் 'கூளப்பநாயக்கன் காதல்', 'விறலிவிடுதூது' போன்ற நூல்களைப் போலக் காமச்சுவை ததும்ப வெளிப்படையாகப் பாடியுள்ளார். சங்க அகப்பாடல்கள் தமிழ்க்காதலை - உயர்காதலை - உயிர்க்காதலை - இலைமறைகாயாகப் பாடியுள்ளன. ஆயின் 'கண்ணம்மா' என்னும் காவியத்தினைக் 'காமம் மிக்க கிளவி'யாகத்தான் கருதமுடிகிறது. சங்ககாலப் பழைய அலையின் சாரல் அடித்திருப்பதாகக் கவிவாணர் கூறியது புறத்துறைக்கு மட்டும் பொருந்துவதே தவிர அகத்துறைக்குப் பொருந்துவதன்று.

"காதல் அடைதல் உயிரியற்கை அது
கட்டில் அகப்படும் தன்மை யதோ"13

என்பர் பாரதிதாசன். "மக்களினத்தின் காதல் நினைவில் இனித்து அறிவில் விளங்கிக் கல்வியில் வளர்வது. நெறியாகவும் அளவாகவும், உரமாகவும், நாணமாகவும், கற்பாகவும் காமக்கூறுகளைச் செவ்வனம் காட்டும் ஓர் உலக இலக்கியம் தமிழிற்றான் உண்டு. அதுவே அகத்திணை"14 என்பர் மூதறிஞர் வ.சுப.மாணிக்கம். மனுக்குலம் தழைக்கத் தேவையான உணர்வுகளுள் காதலும் ஒன்றே. இது மலரினும் மெல்லிது. ஆயின் இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்கள் சிலர் காதலைக் கடைச்சரக்காக்கி இலக்கியச் சந்தையில் பரபரப்பான பெயர், புகழ் இவற்றைப் பெறுவதற்காக விற்றுள்ளனர்; விற்றும் வருகின்றனர். காதலென்ற பெயரில் விரசத்தைப் பாடும் போக்கு இவர்களிடம் உள்ளது. இத்தகைய கீழ்நிலைப்பட்ட - வெளிப்படையான வருணனையால் இக்கவிதைகளைப் படிப்போர் உள்ளமும் தாழ்ந்துவிடுகிறது.

பெண்ணின்பத்தை வெளிப்படையாகப் பாடும் தமிழகக் கவிஞர்கள் கண்ணதாசன், சுரதா, முருகுசுந்தரம் போன்றோரைப் போலக் கவிவாணர் ஐ.உலகநாதனும் இவ்வரிசையில் சேர்த்து எண்ணப்பட வேண்டியவரே. பெண்ணின்பத்தை வெளிப்படையாகப் பாடியமையால் அவர்களிடம் புலமையில்லை என்றோ கவித்துவசக்தி இல்லையென்றோ பொருளன்று. அவர்கள் தங்கள் புலமையை மடைமாற்றம் செய்து விழலுக்கு நீரிறைத்துள்ளனர் என்பதே பொருத்தமாகும். கவிஞன் வெளிப்படுத்தும் - எழுத்தாளன் வெளிப்படுத்தும் கருத்துக்கள் அவனுடைய மனவளத்தையும் வெளிப்படுத்த வேண்டும்.

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே உண்மையொளி உண்டாகும்"15

என்று மகாகவி பாரதி குறிப்பிட்டது போல உயர்வான எண்ணம் உள்ளத்தில் குடியிருக்குமானால் அது உயர்வான

கருத்துக்களாக வெளிப்படும். ஆகவேதான் "நடை கருத்துக்களின் உடை"16 என்ருர் போலும் போப். மேலும் கவிவாணர் இலக்கியங்களை மூவகைப்படுத்தி மூவண்ணங்களைக் கொண்டு தன் சுயசரிதையில் கூறுகிருர்,

"ஒன்று தலைமையைப் பாடுவது; மற்ருென்று புலமையைக் காட்டுவது. இன்னுென்று நிலைமையைச் சொல்லுவது. இதில் நான் விரும்புவது மூன்ருவது வகை."17

என்பர். பச்சை, மஞ்சள், சிவப்பு என மூவண்ணங்களைக் கொண்டு இலக்கியங்களைப் பாடும் அவர் அவற்றை விளக்கியும் உள்ளார்.18 அவருடைய விளக்கத்தைக் கொண்டே அவருடைய காப்பியத்தை நோக்கினுல் மஞ்சள் நிறத்தைத்தானே சொல்ல நேரும்? "எதைப் பற்றிப் பாடுகிறோம் என்பதில்தான் ஆபாசம் உள்ளதே தவிர எப்படிப் பாடுகிறோம் என்பதில் ஆபாசம் இல்லை"19 என்று கூறும் கவிஞர் கண்ணம்மா காவியத்திற்குத் தேர்ந்தெடுத்த பொருளில் ஆபாசம் நிறைந்துள்ளதாகக் கருதுவதில் தவறில்லையல்லவா? திறனுய்வு என்னும் துலாக்கோலில் இட்டுப் பார்க்கும்பொழுது தாழ்வான பொருட்களாக நாம் நினைப்பவற்றைக் (குப்பைத் தொட்டி, குண்டூசி போன்றவை) கவிஞன் உயர்வாகப் பாடுந்திறம் தெரியும். அதுபோன்றே உயர்வான பொருட்களையும் கவிஞன் தாழ்த்தி விடுகிருன். காலங்காலமாக இலக்கியங்களுக்கு வற்ருத ஊற்ருக இருந்து வரும் ஆண் - பெண் உறவைக் 'கொச்சைப்படுத்திய' நிலையைக் கண்ணம்மாவில் காண்கிறோம்.

"புலவனுக்கு மதம் எனப்படுவது ஆண் பெண்காதலே. அக்காதல் இலக்கியத்தின் வற்ரு ஊற்றிடங்களுள் ஒன்று. கவிதையெண்ணத்தை உருவாக்கும் சார்புகளுள் ஒன்று."20

என்னும் மொழி கவிஞனுக்கும் காதலுக்கும் உள்ள நட்பைக் காட்டுகிறது. ஆயின் கவிஞர் ஐ.உலகநாதன் தம் முன்னுரையில்

"காமச்சுவை இதில் அதிகம் இருந்தால் அதற்கு நான் பொறுப்பல்ல. கதைப்பொருள் அப்-படி"21

என்று கூறுவர். உணர்ச்சி மேலீட்டால் இப்படி உரைத்தார் போலும்! ஏனெனில் கவிஞர்கள் உணர்ச்சிவயப்படுபவ-ரன்ஞே?

சிறந்த கவிதையைச் சான்ஞேர்கவி22 என்பர் கம்பர். இக்கவிதையில் உயர்ந்த பாடுபொருள் உயர்ந்த முறையிலே சொல்லப்பட்டிருக்கும். இவ்வடிப்படையைக் கொண்டு நோக்கினுல் ஆண் - பெண் காதலைப் பாடிய கவிஞர் தன் சொற்களுக்கு ஆடையிட்டு வருணித்திருப்பின் காமச்சுவை நிரம்பியிராது. சிறந்த கவிதை வெறும் புலனின்பத்தைத் தருவதல்லவே? முழுவதும் மஞ்சள்நூலாக மாறவேண்டிய நிலையைக் கவிவாணரின் கவித்திறம் தடுத்துக் காப்பாற்றி-யுள்ளது என்பதில் தவறில்லையல்லவா?

## மேற்கோள் விளக்கம்


1. *G.Murray, The Classical Tradition in Poetry, P.131.*
   *And the beauty of the poem is the poem itself not in the thing described by the poem.*
2. ஐ.உலகநாதன், கண்ணம்மா, ப.57.
3. மேலது, ப.15.
4. மேலது, ப.63-64.
5. மேல்து, ப.67.
6. மேலது, ப.56.
7. பாரதிதாசன், பன்மணித்திரள், ப.85.
8. ஐ.உலகநாதன், கண்ணம்மா, ப.21.
9. மேலது, ப.26.
10. மேலது, ப.26
11. மேலது, ப.23.
12. மேலது, என்னுரை, ப.11.
13. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், முதற்தொகுதி, ப.69
14. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், முகவுரை.
15. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.43
16. சி. பாலசுப்பிரமணியன், நெஞ்சின் நினைவுகள், ப.157.
17. ஐ.உலகநாதன், ஒரு பாலைவன ஒட்டகத்தின் சோலைவனப் பயணம், ப.15.
18. மேலது, ப.15-16.
19. மேலது, ப.17.
20. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.9-10.
21. ஐ.உலகநாதன், கண்ணம்மா, ப.12.
22. கம்பர், இராமாயணம், ஆரண்யகாண்டம், சூர்ப்பனகைப்படலம்., பா-1.

## கொலைகாரி

தமிழ்ச் சமுதாயத்தின் மீது, குறிப்பாகப் பெண்ணி-னத்தின் மீது அக்கறை கொண்ட இளங்கவிஞர் இளங்கோ கொலைகாரி என்னும் குறுங்காவியத்தைப் படைத்துள்ளார். காரைக்கிழார் படைத்த புரியாப்புதிர் காவியத்தினைவிட அளவால் மிகக் குறுகிய காவியம் இது.

**நோக்கம்:**

பண்பட்ட பாவலராம் கவிவாணர் ஐ.உலகநாதன் பாராட்டியுள்ளது போலக் கவிஞர் இளங்கோ சிறந்த நோக்கோடு இச்சிறு காவியத்தைப் படைத்துள்ளார்.

"ஏமாறும் தமிழி னத்தை
    ஏமாற்றும் பகைபு லத்தை
யாமுருவம் காட்டி டுவோம்
    எழுச்சியைக் கூட்டி டுவோம்
தேமாவில் - புளிமாவில்
    தேன்பிலிற்றும் தனிச்சீரில்
சீமாஇளங்கோ காண்
    செய்கின்றான் தமிழ்த் தொண்டே"1

தமிழ்ச்சமுதாயம் ஏமாற்றப்பட்டு வருவதற்கான காரணங்-களை வெளிப்படுத்தித் தமிழ்ச்சமுதாயத்திற்கு அறிவு-கொளுத்துவதே கவிஞரின் நோக்கமாகும். தமிழர்கள் - தோட்டப்புறத் தமிழர்கள் பலவாறு ஏமாற்றப்பட்டாலும், சமுதாயத்தை வாழவைக்கவேண்டிய பெண்கள் ஏமாற்றப்-படுவதனைக் கண்டு மனம்பொறாமல், 'உடனிருந்தே கொல்-லும் பகை போலத் தமிழனே தமிழ்ப்பெண்களை இழிவு-படுத்துவதையும் ஏமாற்றுவதையும் கண்டு மனம் வெதும்பி இக்குறுங்காவியத்தைப் படைத்துள்ளார் கவிஞர். காவிய-நோக்கம் அகச்சான்றாக வெளிப்படுகின்றது. இதனை,

"பெண்ணின் பெருமையினைப் பேணுது வாழும்வரை
மண்ணுலகில் நீதி மறந்துமுயிர் வாழாது
இச்சைவெறி கொண்டலையும் ஈண்டுசில ஆடவர்க்கு
எச்சரிக்கை காணீர் இது"2

என்னும் வரிகள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. காமவெறிகொண்டலைபவர்கள் பெண்ணின் கற்புக்குப் பங்கம் விளைவிப்பது பெண்ணினத்திற்கு இழைக்கப்படும் கொடுமையாகும். இக்கொடுமை என்று அழிகின்றதோ அன்றே சமுதாயம் நல்வாழ்வு பெறும் எனக் காவியத்தின் வழியே கவிஞர் விடுக்கும் வேண்டுகோள் சுவாமி விவேகானந்தர் (இந்திய சமுதாயத்தினரை நோக்கி) விடுத்த அறைகூவலின் எதிரொலியே!

"பெண்களுக்குத் தரவேண்டிய முறையான மதிப்பைக் கொடுத்த எல்லா நாடுகளும் மகத்தான நிலையை அடைந்துள்ளன. எந்த நாடு, எந்த மக்கள் பெண்களை மதிக்கவில்லையோ அவை எந்தக் காலத்திலும் சிறந்த நிலையை அடைந்ததில்லை. அடையவும் முடியாது. உங்கள் இந்து இனம் இவ்வளவு கேவலமாக நாசமாகிப் போய்விட்டதன் காரணம் உயிருடன் வாழும் சக்திகளான பெண்களுக்கு நீங்கள் மரியாதை அளிக்காததால்"3

இலக்கியங்களிலும், புராணங்களிலும் ஏற்றமுடன் போற்றப்பட்ட பெண்ணினத்தை நடைமுறை வாழ்வில் நசித்துக் கொல்வது ஏன்? என்னும் வினு இக்காவியம் கற்பார் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் எழுவது இயல்பே!

**கதையமைப்பு:**

மலேசியத் தோட்டப்புற வாழ்வைச் சித்திரிக்கும் படைப்புக்கள் பெரும்பான்மையானவற்றில் கங்காணிகளின் கொடுமைகள் மிக விரிவாகப் பேசப்பட்டுள்ளன. இன

உணர்வின்றி, மனிதப்பண்பின்றி, விலங்குகளை விட இழிவாகத் தொழிலாளர்களைக் கங்காணிகள் நடத்திய கொடுமை காலத்தால் மறக்க முடியாத செய்தி. இது தோட்டப்புறத் தமிழர் வரலாற்றில் கல்வெட்டாக நிலைத்த உண்மை. இவ்வடிப்படையே இக்காவியத்திலும் அமைகிறது. பெண்ணொருத்தியின் - தோட்டத்தொழிலாளி ஒருத்தியின் கற்பைச் சூறையாடிய கங்காணியை அவள் கொன்று விடுகிறாள். இதுவே கதையின் கரு.

காவியக்கதை நீதிமன்றத்தில் தொடங்குகிறது. கொலைகாரியான குற்றவாளி நீதிபதிக்கு முன் தன் கதையைக் கூறுகிறாள். பின்னோக்கு உத்தியின் மூலம் முன்னிகழ்ந்த நிகழ்ச்சிகள் காட்டப்பட்டுள்ளன. பாத்திரமே கதைகூறும் அகநோக்குநிலை என்னும் உத்தியின் மூலம் கதை நடத்திச் செல்லப்படுகின்றது. கங்காணி, தொழிலாளியான ஒரு பெண்ணை ஏமாற்றித் தன் இல்லத்திற்கு அழைத்துவரச் செய்து அவள் கற்பைச் சூறையாடுவது காவியக்கதையின் சிக்கல் ஆகும். இக்கதை சிறுகதைக்குரிய செறிவும் இறுக்கமும் கொண்டது. ஒரே மைய நிகழ்ச்சி, மிகக் குறைவான பாத்திரங்கள், உணர்ச்சி கெழுமிய நடை, சொற்செட்டு ஆகிய சிறுகதை இலக்கணங்கள் இக்காவியத்தில் சிறப்பாகப் பொருந்தியுள்ளன. சிறுகதை உரைநடையில் எழுதப்பட, இக்குறுங்காவியமோ கவிதை வடிவில் எழுதப்பட்ட சிறுகதையாகும். கவிஞரின் கருத்துக்களை வெளிப்படுத்த இக்கதையமைப்பு அரிய வாய்ப்பினை வழங்கியுள்ளது.

கொலைகாரியான குற்றவாளி எழுச்சியுற்ற பெண்ணினத்தின் (பிரதிநிதி) சார்பாளர். பொதுவாக நல்லவர்களையே முன்மாதிரியாகப் படைத்துக்காட்டுவது இயல்பு; இலக்கிய மரபுமாகும். ஆயின் இக்காவியத்தில் கொலைகாரியின் துணிவும், எதிர்த்துப்போரிடும் ஆற்றலும் ஒவ்வொரு பெண்ணிடமும் இருக்கவேண்டியவை. இப்பண்புகள் இல்லாவிடின் எப்படி ஒரு பெண் தன்னைக் காத்துக்கொள்ளமுடியும்?

"கொன்றேன்என் பெண்மைதனைக் கொன்ற நாயை
கொடுத்திடுவார் தூக்கெனினும் விரும்பி யந்த
இன்பத்தைப் பெறுவேனே யன்றி, இந்த
இழிவினையென் னுயிர்போயின் ஒப்ப மாட்டேன்"4

என்று திண்ணிய நெஞ்சினளான கொலைகாரி பேசுகிறாள். ஆடவர்களால் வஞ்சிக்கப்பட்டுக் கற்பினைப் பறிகொடுத்துத் தற்கொலை செய்துகொள்ளும் மலேசியத் தமிழ்ப்பெண்கள் கொலைகாரியைப் போலத் துணிவுகொண்டிருப்பின் கற்பழிப்பு நிகழ்ச்சிகளும் பெருகா. அவற்றைச் செய்யும் கயவர்களும் பெருகார்.

விலங்குகள்கூடப் பகையிடமிருந்து தப்பிக்கப் போராடுவது இயற்கை நியதி. ஆயின் மனிதருக்கு இந்நியதி மாறுனதா? கொலைகாரியின் சொற்களில் நியாயம் இருக்கின்றது அல்லவா? மகளிரின் பணி எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை,

"இளமேனி நங்கையரை ஆண்கள் சில்லோர்
ஏமாளிக் கூட்டத்தா ரென்றே எண்ணி
புலிபோன்று பாய்கின்றார் காம நோயால்
புத்திவரச் செய்வதுதான் மகளிர் வேலை"5

என்று கொலைகாரி கூறுகிறாள். ஒரு பெண்ணுடைய கற்புக்குச் சோதனை வருமானால் அவளுடைய கரங்களும், பற்களும் ஆயுதமாகப் பயன்படவேண்டும் என அகிம்சை-நெறி நின்ற அண்ணல்காந்தி உரைத்தார். அன்னவர் கூற்றின் நியாயம் கொலைகாரியின் சொற்களில் எதிரொலிக்-கின்றதன்றோ?

தமிழ்ச்சமுதாயம் கற்புடைப் பெண்டிரைத் தெய்வமாய்ப் போற்றுந் தகையது. கற்புக்கு விழுமிய மதிப்புக்-கொடுத்த சமுதாயத்தில் பிறந்த பெண்ணொருத்தி அச்-சமுதாயப் பண்பாட்டுநெறியிலே தலைநிற்கிறாள். வறுமை காரணமாக அவள் வாழ்வியற்கோட்பாடுகளை - மனித

மதிப்புக்களை வறிதாக்க விரும்பவில்லை. செல்வர் - ஏழை என்னும் இரு சாராருள்ளும் ஏழைகளே பண்பாட்டையும் மனித மதிப்புக்களையும் பெரிதும் பேணுகின்றனர். இன்றைய நிலையிலும் இந்நிலையைக் கண்கூடாகக் காண்கிறோம். ஆகவேதான் கவிஞர்,

"பட்டினிப் பட்டாளப் பண்பதனைக் காத்தேன்"6

எனக் கொலைகாரியைக் கூறவைக்கிறார். சட்டத்தின் கண்களுக்குக் கொலைகாரியின் குற்றம் பெரிதாக அமையலாம். ஆயின் சமுதாயமதிப்பு - மனிதப்பண்பு என்ற சட்டத்தின் முன் கொலைகாரியின் செயல் குற்றமன்று.

"சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை"7

என்பது தமிழரின் கற்புநெறி. 'நிறை' காக்கப்படவேண்டின், அந்நிறைக்கு ஊறுசெய்யும் நீசர்கள் தண்டிக்கப்படவேண்டும். கொலைகாரியின் துணிவு

"........ இன்று புவியின் பெண்கள்
சிறுநிலையில் இருக்கவில்லை விழித்துக் கொண்டார்
கொல்லவந்த வாளினை நீ குறைசொல்லாதே
கொடுவாள்போல் மற்றொருவாள் உன்மனைவி"8

என்னும் பாவேந்தரின் கூற்றையே நினைவூட்டுகிறது.

தோட்டப்புறங்களில் இளம்பெண்கள் எதிர்நோக்கும் சிக்கல்களை முடிவுக்குக் கொண்டுவரத் துணிவே துணையாகும் என்பதைக் கொலைகாரியின் வாழ்வு குறிப்பிட்டுக் காட்டுகிறது. வயதான பெண்களை வரம்பு கடந்து வேலை வாங்குவதும், கங்காணியின் குறுகிய நோக்கங்களுக்கு இசைந்துபோகும் பெண்களை ஏமாற்றுவதும் தோட்டப்புறங்களில் காணப்படும் வழக்கமான சூழ்நிலையாகும். இக்காவியத்தின் மூலம் ஏழைகள் பொருட்செல்வத்தில் -

வறுமை நிலையில் வாழ்ந்தாலும் பண்புச்செல்வத்தைப் பாதுகாப்பவர்கள் என்னும் உண்மையை உணர்த்துகிறார் கவிஞர்.

"ஏழ்மையில் பிறந்தேன் என்பதி னாலே
வாழ்க்கையில் யானும் வழுக்கிட வேண்டுமோ"9

எனக் கொலைகாரி கேட்பது வறுமையிற் செம்மையாய் வாழ வழிகாட்டும்.

*முடிவுரை:*

கொலைகாரி என்னும் இக்குறுங்காவியம் பெண்ணின் பெருமையினை - உரிமையினைக் காக்கக் குரல் கொடுக்கும் எழுச்சிக்காவியம்! "இலக்கியத்தின் அகலத்தையும் நீளத்தையும் அளந்து எக்காலத்திற்கும் உரிய விதிகளாக வற்புறுத்தல் தவறு"10 என்னும் கருத்தின் அடிப்படையில் நோக்கினால் இக்காவியம் மிகக்குறுகிய அளவில் இருப்பினும் காலத்திற்கேற்ற சிந்தனையைக் கவினுறத் தந்து சிறக்கிறது.

## மேற்கோள் விளக்கம்

1. சி. மா. இளங்கோ, இளங்கோ கவிதைகள், ப.73
2. மேலது, ப.17
3. விவேகானந்தர், இந்தியப் பெண்மணிகள், ப.53
4. சி. மா. இளங்கோ, இளங்கோ கவிதைகள், ப.11
5. மேலது, ப.12
6. மேலது, ப.17
7. திருவள்ளுவர், திருக்குறள் 57
8. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள் - தொகுதி 1, ப. 114.
9. சி. மா. இளங்கோ, இளங்கோ கவிதைகள், ப.15
10. W.H.Hudson, An introduction to literary criticism, p.132

# அணையாவிளக்கு

பாவேந்தர் பாரதிதாசனின் மாணவருள் ஒருவராகிய கவிஞர் மாச்சாங் மு.துரைசாமியின் கைவண்ணத்தில் உருவான காவியம் அணையாவிளக்கு. உடல்நோய் தீர்க்கும் மருத்துவரான இக்கவிஞர் மலேசியத் தமிழ்ச்சமுதாயத்தைப் பீடித்துள்ள குடிப்பழக்கம், சூதாட்டம் ஆகிய நோய்களை ஒழிக்க இக்காவியத்தைப் படைத்துள்ளார்.

**காவியநோக்கம்:**

> "இலக்கியம் என்பது நிகழ்கால வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் வெறுங் கண்ணாடி மட்டுமன்று. வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் அதே நேரத்தில் அந்தக் காலகட்டத்தின் சிந்தனைகளை வளர்ப்பதும் அதன் கடமை"*1*

என இலக்கிய நோக்கம் பற்றிக் கருத்துரைப்பர் டூன்கான் வில்லியம்ஸ் என்ற மேனாட்டுத்திறனி. இக்கருத்துக்கியைய எழுந்த சமூக எழுச்சிக் காவியம் அணையாவிளக்கு. தமிழர் வாழ்வுக்கு ஒளிகாட்ட வந்த ஒளிவிளக்கு இக்காவியம். மலேசியத் தமிழர் வாழ்க்கையின் உயர்வுக்குத் தடைக்கற்களாக விளங்குபவை குடிப்பழக்கமும் சூதாட்டமும். குடி தமிழ்க்குடியைக் கெடுப்பதை உணராமல் மதுவரக்கனின் கோரப்பிடியில் சிக்கித் துயருழக்கின்றனர் மலேசியத் தமிழர்கள். இக்கொடுமையின் பாதிப்புக்கு இலக்கான தமிழ்க் குடும்பம் ஒன்றின் துயரக்கதையை விவரிப்பது அணையாவிளக்கு.

மதுவை நாடியவர்கள் மாண்டதாகச் சரித்திரம் உண்டேயன்றி மீண்டதாய்ச் சரித்திரம் இல்லை என்பது அணையாவிளக்கு கூறும் அழுத்தமான உண்மை. காவியக் கருப்பொருளை, காவிய நோக்கத்தைக் கீழ்க்கண்ட கவிதை வலியுறுத்துகிறது.

"நோய் என்ன? மருந்தும் என்ன?
நுவலுமிக் கதைதான் என்ன?
தேய்ந்தேபோம் நிலவும் ஓர்நாள்
திரண்டுருப் பெறுவ துண்டு
போயந்த அரக்கன் வாயில்
புரண்டுவீழ்ந் தோர்கள் மானம்
சாய்ந்தேதான் அழிந்த தன்றி
மீண்டதாய்ச் சரிதம் உண்டோ"2

துன்பநீக்கத்திற்குக் குடியை நாடும் மலேசியத் தமிழர்களைச் சிந்திக்கவைப்பது இப்பாடல்.

**காவியக் கதையமைப்பு:**

குடிகார மாமனுர், நோயாளி மாமியார், சூதாடும் கணவன் ஆகிய இவர்களுக்கு மத்தியில் தங்கமலர் என்னும் பொற்கொடியாள் அனுபவிக்கும் துன்பங்களையும், அவள் எதிர்நோக்கும் போராட்டங்களையும் கண்ணீர்க் காவியமாக்கி உள்ளார் கவிஞர். மதுவரக்கனின் கொடுமைகளும், சூதாட்டத்தின் தீமைகளும் உள்ளத்தை உருக்கும் வகையில் சித்திரிக்கப்பட்டுள்ளன. குடிகாரனையும் சூதாடியையும் திருத்துவது முயற்கொம்பு; வெறும் கற்பனைவாதம் என்றுரைப்போரை இவ்அவநம்பிக்கையிலிருந்து விடுபடச் செய்கின்றது அணையாவிளக்கு. கதையின் கரு மிகச்சாதாரணமானது என்ருலும் கதைவளர்ச்சி தங்குதடையின்றி அமைகின்றது. கதை நிகழ்ச்சிகள் அன்ருட வாழ்வில் நாம் காணும் நிகழ்ச்சிகள்தாம். கற்பனை நிகழ்ச்சிகள் கலவாது அமைவது காவியக் கதையமைப்புக்கு மேலும் அழுத்தங் கொடுக்கின்றது.

கதை நிகழ்ச்சிகளை ஆசிரியர் பாத்திரங்கள் வாயிலாக நடத்திச் செல்கின்ருர். கதைநிகழ்ச்சிகள் பின்னேக்கு உத்தியின் மூலமாகவும் காட்டப்படுகின்றன. இக்காவியத்தில் எதார்த்தநிலை அல்லது நடப்பியல்நிலை சிறப்புறச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இக்காவியத்தின் நடப்பியற்றன்மை கீழ்க்-

காணும் இலக்கியச் சிந்தனைக்கியைய அமைவது இக்காவியத்தின் தனிச்சிறப்பாகும்.

> "வாழ்க்கையிலிருந்து நேரே முகிழ்த்து எழுவதே சிறந்த இலக்கியம் என்றும், முன்னைய இலக்கியத்தைப் பார்த்தோ அல்லது மரபுகளுக்குக் கட்டுப்பட்டோ எழுதுவது சிறந்த இலக்கியம் ஆகாது."3

**காவியமாந்தர்:**

இக்காவிய நாயகன் முத்து ஆவான். பழந்தமிழ்க் காவியங்கள் காட்டும் நற்பண்புகளின் உறைவிடமான காவியத் தலைவனை இக்காவியத்தில் நாம் காணமுடிவதில்லை. தந்தை குடிகாரராயும், தாய் நோயாளியாகவும் மாறிய காரணத்தால் சூதாடியாகத் தன்னை மாற்றிக்கொண்டவன் முத்து. மனைவி மகவீனும் நிலையிலும் சூதாட்ட அரங்கில் சூதாடிக்கொண்டிருந்தவன். ஆயின் குழந்தை பிறந்ததும் அக்குடும்பத்தின் நிலை முற்றிலும் மாறிவிடுகிறது. முத்துவின் தந்தை மணியமும் குடியை மறக்கிறார்; முத்துவும் சூதினைக் கைவிட்டுவிடுகிறான். முத்து, மணியம் ஆகிய இருவரும் காவியமுடிவில் முழுமை பெற்ற மாந்தராக (*Round Characters*) விளங்குகின்றனர். இம்மாந்தர் படைப்பின் மூலம் கவிஞர் படிப்பினை புகட்டுகிறார். மனிதர்கள் தவறு செய்வது இயற்கை. ஆயின் அத்தவறுகளை உணர்ந்து தம்மைத் திருத்திக் கொள்ள வேண்டும்; மீண்டும் அத்தவறுகளைச் செய்யக்கூடாது. இவ்வுண்மையை மணியமும், முத்துவும் வாசகர்களுக்கு உணர்த்துகின்றனர். மணியம், முத்து ஆகிய இருவரும் நற்பண்புகளை உடையவர்தாம். ஆயின் இடையே தம் துன்பங்களை மறப்பதற்கு அவர்கள் 'சேராத நெறி'யைச் சேர்ந்து பழிக்கு ஆளாகின்றனர். தங்கமலரின் உயிர்ப்போராட்டம் இவ்விருவரையும் மீண்டும் நல்லவர்களாக்குகிறது.

தங்கமலரின் கணவன் என்ற முறையில் காவியமாந்தருள் முத்து தலைமையுடையவனுகப் படைக்கப்பட்டிருப்பினும் காவியத்துள் இடம்பெறும் துணைமாந்தர்களுள் மணியமே வாசகர் நெஞ்சைக் கவரும் பாத்திரமாகப் படைக்கப்பட்டிருக்கிருர். மணியம் துன்பம் காரணமாகக் குடிகாரராக மாறுகிருர் என .'நியாயமான' காரணத்தைக் காட்டியுள்ள கவிஞர் மணியத்தின் பண்புமாற்றத்திற்கு அவருடைய நண்பரும் காரணமாவதைச் சுட்டத் தவறவில்லை. ஏமாற்றுவேலையும் நயவஞ்சகமும் கொண்ட ஒருவரால் மணியம் வஞ்சிக்கப்பட்டார் என்ற உண்மையையும் கதைப்போக்கினிடையே காட்டியுள்ளார். எனவே கூடாநட்பும் மணியத்தைக் குடிகாரராக்கிற்று. இப்படித் துன்பச்சுமை தாளாத மணியம் 'குடி'யை நாடினுர் என்று காட்டுவது உளவியல் அடிப்படையில் படைக்கப்பட்ட உண்மையாகும். நடப்பியல் நிலையிலும் பலரும் துன்பங்களை மறக்கவே குடியை நாடி மீண்டும் துன்பங்களை வளர்த்துக்கொள்ளும் போக்கினைக் கண்கூடாகக் காணலாம்.

குடி, சூது ஆகியவற்றின் கொடிய விளைவுகளை மக்கள் மனங்களிலே பதியவைக்க ஒரு குடும்பத்தில் தந்தையும், மகனுமே கருவியாகப் படைக்கப்பட்டுள்ளனர். இருவேறு குடும்பங்களில் உள்ள மாந்தர் குடி, சூது ஆகிய இருவேறு துன்பங்களுக்கு உள்ளாவதைக் காட்டியிருக்க வாய்ப்புண்டு. ஆயினும் கற்போருக்குக் கழிவிரக்கம் உண்டாவதில்லை. ஆனுல் ஒரு குடும்பத்தில் தந்தையும் மகனுமே பலியாயினர் என்று காட்டும்போது குடி, சூது ஆகியவற்றின் கொடிய விளைவுகளை உணர முடிகிறது. மேலும் நல்லவர்களான தந்தையும் மகனும் இக்கொடுமைகளுக்கு அடிமையாயினர் என்று காட்டும்போது கழிவிரக்கம் பெருகுவதுடன், பிரச்னைகளின் தீவிரத்தையும் உணரமுடிகிறது. சமுதாயத்திற்குப் படிப்பினை புகட்ட இத்தகைய களம் இன்றியமையாதது எனக் கருதி நல்லவர்களைத் தற்காலிகமாகத் தீயவர்களாக்கியுள்ளார் கவிஞர். தீயவர்கள் நல்லவராக மாறுவதைக் காட்டுவதே பெரும்பாலான இலக்கியங்களின் பொதுப்பண்பு. ஆயின் இக்காவியத்தில் முற்றிலும் மாறு-

பட்ட நிலையைக் கவிஞர் படைத்ததற்கும் காரணமுண்டு. வாழ்க்கைப் போராட்டத்தில் துன்பங்களைத் துணிவுடன் எதிர்நோக்க வேண்டுமே தவிரக் கோழைத்தனத்துடன் தீயநெறிகளைச் சாரக்கூடாது; தீயநெறியிலே சென்றால் தீமைகள் பெருகுமே தவிரத் துன்பங்களுக்கும் - பிரச்னை-களுக்கும் முறையான தீர்வு கிட்டாது என்ற உண்மைகளை உணர்த்த வேண்டியே கவிஞர் இத்தகைய பண்புமாற்றத்-தைப் படைத்துள்ளார். தீமையின் ஆற்றலைத் தெளிவுறக் காட்ட மணியமும் முத்துவும் நல்ல கருவிகள்.

*அணையாவிளக்கு* என்னும் குறுங்காவியம் மனித வாழ்வின் அடிப்படைப் பண்புகளான அன்பு, பொறுமை, நாணயம், தன்னலமின்மை போன்ற உயர்பண்புகளை வலியுறுத்த எழுந்த சீர்மைக் காவியம்! கொடுத்த வாக்கைக் காப்பது மனிதனின் நாணயம். இத்தகு நாணயத்தைக் காவியத்தலைவியாம் தங்கத்தின் பெற்றோர் போற்றிக் காக்கின்றனர். பொன்னும் பொருளும் கருதிப் பெற்றோர்கள் மனம் மாறி, நிச்சயிக்கப்பட்ட திருமணங்களைக் கூட மாற்றும் - 'நாணயம்' குறையும் இற்றைநாளில் நட்பைக் காக்க, கொடுத்த வாக்குறுதி பிழையாமல் காத்த தங்கத்தின் பெற்றோரும் நெஞ்சைவிட்டு நீங்காத பாத்திரங்களே! காவியத்தின் கதைவளர்ச்சிக்குத் துணைசெய்யும் இம்மாந்தர் மனிதவாழ்க்கைக்கும் துணையாக வேண்டியவர்களே!

*அணையாவிளக்கின்* காவியமாந்தருள் அணையாவிளக்-காக, குன்றின் மேலிட்ட விளக்காக ஒளிர்பவள் தங்கம். காவிய நாயகியாம் இத்தையல் மாற்றுக்குறையாப் பசும்-பொன்னே! மாலையிடப்போகும் மணவாளனின் குடும்ப-நிலைமை தெரிந்தும்; குடிகார மாமனார், நோயாளி மாமியார், சூதாடிக் கணவன் ஆகியோரிடம் காணப்படும் அவலங்களைக் களைந்து 'நல்லதொரு குடும்பமாக' மாற்ற எண்ணுகிறாள் இந்நங்கை. துன்பங்களைக் கண்டு துவண்டு தீநெறி நாடிய ஆண்கள் மத்தியில் - கோழைகளின் மத்தியில் துணிவுமிக்க பாத்திரமாகத் தங்கம் படைக்கப்பட்டிருக்-கிறாள். தியாக வேள்வியில் தன்னையே அர்ப்பணித்துக்-

கொண்ட தங்கம் பெயருக்கேற்ருற் போலப் பண்புடையவளாகத் திகழ்கிருள். பாரதிதாசன் பெண்ணுரிமை பேணிய பெருங்கவிஞர். அன்ஞர் போன்றே அவருடைய கவிதைப் பட்டறையின் வார்ப்பான கவிஞர் மாச்சாங் மு.துரைசாமியும் பெண்ணுக்கு ஏற்றந்தந்து இக்காவியத்தைப் படைத்துள்ளார்.

காவியத்தொடக்கத்தில் புகுந்த வீட்டைத் திருத்த அன்புநெறியே சிறந்தது எனக் கருதிய தங்கம் பின்னர் அன்புநெறி ஒவ்வாதது; அறிவுநெறியே பொருந்துவது என ஒருப்படுகிருள். இதனுல் அறப்போர் மேற்கொள்கிருள். புதுமைப்பெண்ணின் இப்போர்க்கோலத்தில் புரட்சிக்கவிஞரின் பெண்ணுரிமை முழக்கமே ஒலிக்கின்றது.

"ஆணுக்கோர் நீதியிங்குப் பெண்ணுக் கொன்ரும்
ஆண்பெண்ணை உதைத்திடுவான் உதைத்த காலைப்
பூணுமலர் சாத்திஅவள் பூசை செய்வாள்
புவியுள்ளார் 'இவளன்ருே தெய்வம்' என்பார்

நாணுமிந்தக் கொள்கையினி மாற வேண்டும்
நானிலத்தில் ஆணெடுபெண் நிகராம்! என்றே
காணுமொரு பூனையென இருந்த தங்கம்
கனல்கக்கும் எரிமலையாய் வெடித்தாள் ஓர்நாள்"4

இப்பகுதி தங்கத்தின் புரட்சிச்சிந்தனையைக் காட்டுவதோடன்றிக் கவிஞர் துரைசாமி பாவேந்தருடன் கொண்ட நட்புக்கும், பாவேந்தரின் புரட்சிக்கருத்துக்கள் கவிஞர் துரைசாமியிடம் மடைமாற்றம் கண்டிருப்பதற்கும் நல்லதொரு சான்ரும். அறிவுநெறி தலைப்பட்ட அணியிழையாள் தோல்வியைத் தழுவுகிருள். கவலைகொண்ட தங்கத்திற்கு அகல்விளக்கின் சுடர் அறிவுகொளுத்துகிறது. அகல்விளக்கின் சுடர் அவள் வாழ்விலும் ஒளியேற்றுகிறது. பெருங்காற்றுக்கும் வளைந்து கொடுத்து அணையாமல் எரியும் அச்சுடர் அன்பினுல் 'விட்டுக்கொடுத்துப் போகும்' உண்மையை அறிவுறுத்துகிறது. இக்கருத்தையே பாக்கியம்

மாமியும் தங்கத்திற்கு உரைக்கிறுள்.

"அன்பினுல் வெல்வ தொன்றை
அறிவினுல் வெல்லல் ஆமோ"5

தங்கமும் அன்புவழியைக் கைக்கொண்டு குடிகார மாமனே-யும், சூதாடிக் கணவனேயும் திருத்திப் புதியமனிதர்-களாக்குகிறுள்; வெற்றிவாகை சூடுகிறுள். அன்புவிளக்காய் ஒளிர்கிறுள். குலவிளக்காம் தங்கமெனும் மங்கை நல்லாள் இல்லற வாழ்வின் உண்மையை நமக்கு உணர்த்துகிறுள். அவள் அன்புவழியை விடுத்து அறிவுநெறி தலேப்படுவதும்; பின்னர் அன்புநெறிக்கே மீண்டுவருவதும் ஒவ்வொரு குடும்பப்பெண்ணும் உளங்கொளவேண்டிய சிந்தனே. இவண்,

"காதல் வாழ்க்கையில் ஒரு வகைக் கண்மூடி வாழ்வு வேண்டும். குழந்தை போல் வாழ-வேண்டும். தொடக்கத்தில்தான் ஆராய்ச்சி வேண்டும். பிறகு ஆயுள்வரைக்கும் ஆராய்ச்சி கூடாது. அறிவும் மிகுதியாகக் கூடாது. ஒருவர் குற்றம் ஒருவர்க்குத் தெரியாதபடி அன்பு வாழ்வு - கண்மூடி வாழ்வு வேண்டும்"6

என்பர் மூதறிஞர் மு.வரதராசனுர். இல்வாழ்க்கையில் அன்பு, ஆர்வம் இவைகளுக்கே அறிவு நெறியைக் காட்டி-லும் முக்கியத்துவம் அளிக்கவேண்டும் என்னும் மு.வ.வின் கருத்து இவண் நினேயத்தக்கது.

தங்கம் தனியளாய்ச் சுமந்த துன்பச்சுமைகள் அவளேத் தியாகவேள்வித் தீயில் புடமிட்டு 'ஒளிரும் தங்கமாக' ஒளி-விடச் செய்கின்றன. அவள் வாழ்க்கையெங்கும் துயரச்-சம்பவங்கள்! அவள் அடையும் இன்னல்கள் காவியங் கற்பார் நெஞ்சையும் கலங்கச் செய்வன. அவற்றைப் பொறுமையோடு எதிர்கொள்கிறுள். 'பொறுத்தார் பூமி-யாள்வார்' என்பது போல அவள் பொறுமையும் வெற்றி

பெறுகிறது. இவள் பொறுமைப்பண்பும், இவள் அனுபவித்த துன்பங்களும் இவளுடைய பாத்திரப்படைப்பிற்கு வலுவூட்டுகின்றன. ஆகவேதான் மிகச் சிறந்த பாத்திரமாகத் திகழ்கிருள் தங்கம்.

> "சாதாரண மனிதராகப் பிறந்து வளர்ந்து பொதுவான இன்பதுன்பங்களுக்கு ஆளாகி உயர்ந்த நோக்கங்களும் சிறந்த செயலார்வமும் உடையவர்களாகப் படைக்கப்பட்டால் அவர்களை மிகுதியாக என் மனம் விரும்புகிறது."7

இக்கருத்து தங்கத்தின் பாத்திரப்படைப்பிற்கும் பொருந்துவதாகும். கற்பார் நெஞ்சைப் பிணிக்கும் கவினுறு பாத்திரம் தங்கம்.

இந்தியப் பண்பாட்டில் மாமியார் - மருமகள் உறவு பெரும்பான்மையும் காலங்காலமாகக் கசப்பான அனுபவமாகவே கருதப்பட்டு வருகிறது. பெண்ணுரிமையை இருநிலைகளில் பகுத்துக் காணவேண்டும்.

1. பெண்ணுரிமையை ஆண்கள் மதிப்பது
2. பெண்ணுரிமையைப் பெண்கள் மதிப்பது.

இவ்விருநிலைகளிலும் பெண்ணுரிமையை இருபாலாரும் போற்றிஞல் சமுதாயம் சிறப்பாக இயங்கமுடியும் என்ற கருத்தைத் தங்கத்தின் மூலமாகக் குறிப்பாக உணர்த்துகிருர் கவிஞர். அன்புநெறியைக் கைக்கொண்ட தங்கம் பேறு காலத்தில் உயிருக்காகப் போராடும் வேளையில் சூதிலும், குடியிலும் மனமிழந்த முத்து, மணியம் ஆகியோரின் அறிவுக்கண்கள் திறக்கின்றன. பிறர்வாழவேண்டும் என்பதற்காகத் தன்னையே அழித்துக்கொண்டாலும் குற்றமில்லை எனக் கருதியே தங்கம் பேறுகாலத்தில் தனியே துயர்ப்படுகிருள். தாயின் உதவியையும் அவள் நாடவில்லை. இந்நிகழ்ச்சி தங்கத்தின் உயிர்ப்போராட்டமாக மட்டு-

மின்றிப் பெண்ணுரிமையின் பெரும் போராட்டமாகவும் திகழ்கின்றது. முத்துவும், மணியமும் தங்கத்தின் அருங்குணங்களை மதித்துச் சீர்ப்படுகின்றனர். அவளின் தியாகத்தை உணரத் தலைப்படுகின்றனர். இப்படித் தங்கத்தின் மாண்புகளை ஒவ்வொன்றாக உணர்கின்றனர். இந்நிகழ்ச்சியின் மூலம் கவிஞர் பெண்ணின் பெருமைகளை ஆண்கள் அறியச் செய்கிறார். பெண்ணுரிமை காப்பதில் ஆண்களின் பங்கினைப் பாரதியார் வலியுறுத்தினார்.

"பெண்ண றத்தினை ஆண்மக்கள் வீரந்தான்
    பேணு மாயின் பிறகொரு தாழ்வில்லை"
.............................. ..
    ..............................
பெண்ணுக்கு விடுதலைநீ ரில்லை யென்றால்
    பின்னிந்த உலகினிலே வாழ்க்கை யில்லை"8

என உணர்த்துகிறார்.

துன்பங்களைக் கண்டு சோர்ந்து விடும் பெண்களுக்குத் தங்கம் சிறந்த முன்னுதாரணமாகத் திகழ்கிறாள். தங்கத்தின் பண்புநலங்களைப் பாராட்டும் கவிஞர்,

"சத்தியம் தன்னைக் காக்கத்
    தாதைதன் சொல்லைக் காக்க,
இத்திரு மனைக்கா மங்கா
    ஒளிவிளக் கென்ன வந்த
உத்தமப் பெண்ணும் தங்கம்"9

என்று இயைபுறப் போற்றுகிறார். கவிஞரின் இப்பாராட்டு மொழிகள் உண்மை; வெறும் புகழ்ச்சியல்ல. ஒவ்வொரு குடும்பத்திலும் தங்கம் போன்ற பெண் உருவானால் மது, சூது போன்ற மாய அரக்கர்கள் மாள்வர் என உணர்த்துகிறார் கவிஞர். ஒவ்வொரு பெண்ணும் தன் குடும்பத்திலே உள்ள அவலங்களை நீக்க முற்பட்டால் சமுதாய அவலங்கள் பெருகா என்பது தங்கம் உணர்த்தும் அறிவார்ந்த படிப்பினை.

தங்கம் தமிழுணர்வும், இன உணர்வும் கொண்ட இணையில் பாத்திரம். தமிழின மாண்பும் தமிழ்மொழியின் மாண்பும் சூதாடிக்கணவனுன முத்துவுக்குத் தங்கத்தின் மூலமாகவே உணர்த்தப்படுகின்றன. ஆணுக்குப் பெண் அறிவுகொளுத்தும் இப்போக்கு பாவேந்தரின் சஞ்சீவி பர்வதத்தின் சாரலிலும் காணக்கூடியதாகும். சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் பெண்பாத்திரமான வஞ்சி, அறியாமை மிக்க ஆண்மகனும் குப்பனுக்கு அறிவுரை கூறுகிருள். பாவேந்தரின் மாணவரிடமும் இந்நோக்கு - பெண்ணுக்கு ஏற்றந்தரும் பெருநோக்கு அமைவதில் வியப்பில்லையே? தங்கம் முத்துவுக்குக் கூறும் முத்தான அறிவுரைகள் தமிழரிடமும் தமிழிடமும் அவள் கொண்ட பற்றைப் பறைசாற்றுவதோடு வாசகர்களுக்கு - மலேசியத் தமிழர்களுக்கு விழிப்புணர்வை ஊட்டுவன. சான்ருகக் கீழ்க்கண்ட பகுதியைக் கூறலாம்.

"பெற்றவர்கள் குறைபோக்க வேண்டும் நம்மால்
பெருங்களங்கம் தமிழினத்திற் கேற்ப டாமல்
உற்றகடன் நாமுடனே செய்தல் வேண்டும்
உடன்வாழும் மலாய், சீன இனத்தார் முன்நம்
நற்பெயரை நாம்காக்க வேண்டும்; அன்றேல்
நம்குடியை நம்மினத்தை இவர்கள் இங்கே
அற்பஇனம் என்றிகழ்வர் அன்ருே? அத்தான்!
அதைப்பொறுப்ப தெங்ஙனம்? நம் மேன்மை
(என்ன?"10

காவியநோக்கமும் இப்பகுதியில் வெளியிடப்பட்டுள்ளதை அறியலாம்.

இன்றைய நடைமுறையில் ஒரு பெண்ணை மற்ருெரு பெண்ணே கொடுமைப்படுத்துவதையும் காண்கிருேம். மாமியார் கொடுமைகளின் எண்ணிக்கை நாளுக்குநாள் அதிகரித்து வருவதையும் காண்கிருேம். இதனுல் பெண்களுக்கு உரிமைதரப் பெண்களே தயங்குகின்றனர் என்ற பேருண்மை புலப்படுகின்றது. ஆகவே பெண்ணினத்தைப்

பெண்ணினம் மதிப்பதாகக் காட்டவேண்டிய கடப்பாடும் கவிஞருக்கு உண்டு. ஆகவே தங்கம் தன் மாமியாரைத் தன்னுடைய மற்றொரு தாயாகவே கருதுகிறாள். தங்கத்தின் மாமியாரும் தங்கத்தை மகளாகவே மதிக்கிறாள். இத்தகு நல்லுறவு கதைகளில் இடம்பெறுமே தவிரப் பெரும்பாலும் உண்மை வாழ்வில் நடப்பதில்லை என்ற எண்ணம் தோன்றுவது இயல்பு. இத்தகு நல்லுறவையே கவிஞர் காண விழைகிறார். ஆதலின் இந்நிகழ்ச்சியைப் படைத்துள்ளார், இன்றைய பெண்களுக்கு நற்பாடம் புகட்டுவது இந்நிகழ்ச்சி எனலாம். தங்கத்தின் தாயும், மாமியாரும் ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக்கொண்டு நற்பண்புகளின் கொள்கலமாக விளங்க முனைகின்றனர். நல்ல நட்புக்கு இவ்விரு பெண்களும் சான்றாவர். தங்கத்திற்கு அறிவுரை கூறும் பக்கத்து வீட்டுப் பாக்கியம் மாமியும் உதவிமனப்பான்மைக்கு உதாரணமாகும் அறிவார்ந்த பாத்திரம். தங்கத்தின் துயரங்களைத் தாங்கும் சுமைதாங்கி. அறிவுரை கூறும் தகுதிகொண்ட பாத்திரம்.

சுருங்கக் கூறின் அணையாவிளக்கு மகளிருக்கு ஏற்றந்தரும் மாகாவியம்! காவியப்பெண்கள் அனைவரிடமும் ஒவ்வொருவிதமான படிப்பினை கிட்டுகிறது.

**குடும்பவிளக்கு - அணையாவிளக்கு ஒப்பீடு:**

பெண்ணின் ஆற்றலைப் புலப்படுத்த - பெண்ணின் பெருமையைப் பேசவிழைந்த பாவேந்தர் குடும்பவிளக்கின் தலைவியைப் படைத்துக்காட்டுவர். சிக்கலில்லாத வாழ்வையும், இல்லத்தரசியின் பொறுப்புணர்வையும் விளக்கி 'நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்' என நவில்வர் புரட்சிக்கவிஞர். அன்னாரிடம் மாணவராயும் மகனாயும் பழகிய மு.துரைசாமி பாவேந்தரின் படைப்புக்களில் தோய்ந்தவர். அவ்வீடுபாடு அணையாவிளக்கு என்னும் காவியத்தில் தெற்றெனப் புலனாகிறது. காவியப் பெயரொற்றுமை, காவியநாயகியின் ஏற்றமிக்க படைப்பு, பெண்ணுரிமை பேணுவது ஆகிய கோணங்களில் குடும்ப

விளக்கிற்கும் அணையாவிளக்கிற்கும் ஒற்றுமை நிலவுகிறது. அணையாவிளக்கின் தலைவி போராட்டங்களை எதிர்நோக்க வேண்டியவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். ஆயின் குடும்ப-விளக்கின் தலைவிக்குச் சிக்கலில்லாத வாழ்வமைந்தது.

**காவியநயம்:**

விருத்தப்பாவால் இயன்ற அணையாவிளக்கு காவியம் தொட்டனைத்தூறும் மணற்கேணி போலக் கவியின்பமளிக்க வல்லது. இக்காவியத்தின் ஓசை ஆற்றொழுக்கைப் போலத் தெளிவாக இசைக்கின்றது. வெள்ளத்தின் பெருக்கைப் போன்ற கவிப்பெருக்கு இக்காவியத்தில் உண்டு. கவிஞரின் தமிழ்ப்பற்றும், தமிழுணர்வும் காவிய இன்பத்திற்கு மேலும் மெருகூட்டுகின்றன. வாழ்விலக்கியமாம் வள்ளுவத்தின் மாண்பு காவியத்தின் பலவிடங்களில் பேசப்படுகின்றது. தங்கத்தின் தந்தை வள்ளுவம் போன்று வழுவாத வாக்குத்திறம் கொண்டவர். இதனை,

"வள்ளுவர் குறளே போன்று
வழுவாது அவர்தம் வாக்கு"11

காவியநயம் கவிஞரின் உவமைத்திறத்தால் மேலுஞ் சிறப்படைகிறது. தங்கத்தின் தாய் தன் கணவனின் இறப்-பிற்குப் பின்னர் அவருடைய நினைவாய்ப் பூசை அறையி-லேயே எப்பொழுதும் தவங்கிடப்பதற்குக் கவிஞர் ஏற்-புடைய உவமை கூறுவர். இறைவனையே நாடித் தவமிருக்கும் ஞானியைத் தங்கத்தின் தாய்க்கு உவமிப்பர். சந்தமும் கவியும் இணைபிரியாதவை. தங்கத்தின் பெற்றோர் இல்லறம் காத்த மாண்புக்குச் சந்தமும் கவியுமே உவமையாகின்றன.

பாவேந்தர் யாழினைப் பன்முறை உவமை கூறியுள்ளது போலக் கவிஞர் மு.துரைசாமியும் காவியத்தைப் பன்முறை உவமித்துள்ளார். முத்துவின் தாய் அவனுடைய வாழ்வைப் பற்றிய வண்ணக்கனவுகளைக் கண்டவள். ஆயின் அக்கனவு-கள் அனைத்தும் சீரழிந்ததனை எண்ணிப் புலம்புகிறாள்.

இப்புலம்பலில் முத்துவின் வாழ்வை எவ்வளவு உயர்வாக எண்ணியிருக்கிருள் அவன் தாய் என்ற உண்மை தெரியவரும்.

"வானுக்கோர் நிலவே போலும்
வையத்தோர் கதிரே போலும்
.......................
.......................
தேனுக்கோர் தமிழே போலும்
திசைக்ட்கோர் குறளே போலும்"12

வாழ்வின் விளக்கமாய் அமைவன இவ்வுவமைகள்.

'உருவகம் அடக்கிச் செறித்த உவமையாகும்'13

இவ்வுருவகங்களும் இக்காவியத்தில் சிறப்புற அமைந்துள்ளன. நட்பெனும் பயிர் வளர்ந்த வண்ணத்தை நற்றமிழால் பாடுவர் கவிஞர்.

"அன்பெனும் நீரைப் பாய்ச்சி
ஆசையாம் உரமும் சேர்த்துப்
பன்னெடும் நாள்வ ளர்த்த
நட்பும் ..................."14

இவ்வுருவகம் சிறப்புடையது. இல்லறத்தைத் தோணியாக உருவகிப்பது மரபு. இம்மரபினையும் கவிஞர் செவ்வனே போற்றியுள்ளார்.

அணையாவிளக்கெனும் காவியத்தில் உவமை, உருவகங்கள் பயன்படுத்தப்பட்டுள்ள பாங்கு கீழ்க்கண்ட கருத்தையே நினைவூட்டுகிறது.

"பொருளை விளக்கம் செய்வதற்காகவே உவமை உருவகங்கள் பயன்படுத்தப்பட வேண்டும்.

வாக்கியங்களை அழகுபடுத்துவதற்கு மட்டும் என்று பயன்படுத்தக் கூடாது. சிறந்து அமையும்போது திறனுற நிற்கும் பலவகை அணிகளிலும் முதலில் குறைந்த அளவானவற்றைப் பயன்படுத்தலே நல்லது. முயன்று தேடாமல் தாமாக அமையும் அணிகளே தக்கவை என்று கூறத் தகுவன"15

தங்கம் திருமணத்திற்குப் பிறகு அனுபவிக்கும் துன்பங்கள் மிகப்பல. குறிப்பாக இல்லற இன்பத்துக்கு அந்த ஏந்திழை ஏங்குகிறாள். இக்கொடுமையைக் காணப்பொறுமல் நிலவு மேகங்களுக்குள் மறைந்து கொண்டது எனத் தற்குறிப்பேற்ற அணியால் நயமுற விளக்குவர் கவிஞர்.

"பெண்வருந்தும் கொடுமைதனைக் கண்தி றந்து
பெருநிலத்தார் காண்பார்! நான் காணேன்!
(என்றன்
கண்வருந்தும்! எனவோடி முகம்ம றைத்தாள்
கருமுகிலின் திரைமறைவில் நிலவுப் பெண்ணாள்"16

மனக்கவலை மாற்ற இறைவனே மருந்து என ஓர்ந்து தங்கம் கோவிலுக்குச் செல்கிறாள். அவளை இயற்கை வாழ்த்துகிறது. இதனைத் தற்குறிப்பேற்ற அணியின் மூலம் அணியுறக் கிளப்பர் கவிஞர்.

அங்கவள் வெளிக்கி ளம்ப
ஆயிடைக் கீழ்வா னத்தில்
மங்கையே வருக! உன்றன்
மனத்துயர் தீர்க என்றே
செங்கதிர் வாழ்த்துக் கூறிச்
செவ்வொளி மலர்கள் தூவத்
துங்கவெண் மேகக் கூட்டம்
தூக்கியோர் குடைபி டிக்கும்"17

நயமான இவ்வருணனை காவியநயத்தைத் தெற்றெனப் புலப்படுத்தும்.

குறியீடு:

கவிஞன் சில வேளைகளில் சில கருத்துக்களைக் குறியீடுகள் மூலமாக உணர்த்துவான். இவ்வடிப்படையில் கவிஞர் மு.துரைசாமியும் அகல்விளக்கைக் குறியீடாகப் படைத்துள்ளார். வாழ்க்கை உண்மையை அகல்விளக்கு தங்கத்துக்கு மட்டும் உணர்த்தவில்லை. காவியத்தைக் கற்போர் அனைவருக்கும் வாழ்க்கையுண்மையை உணர்த்துவதாக அமைந்துள்ளது.

"அப்பொழுது சீறிவந்த பெருங்காற் றந்த
அகல்விளக்கை அணைத்திடவே முனைந்தபோது
தப்புதற்கு வழியறிந்த அகலின் தீபம்
தலைமடக்கிப் பின்நிமிர்ந்து தன்னைக் காக்கும்!
அப்படியே வணங்காமல் நின்றி ருந்தால்
அக்காற்றால் அழிந்திருப்பேன் என்றே தீபம்
செப்பிடும் பேருண்மை தங்கம் கண்டாள்
செம்மகள்தன் செயல்முறையில் திருத்தம்
(கண்டாள்"18

அகல்விளக்கு வாழ்வியல் உண்மைகளை உணர்த்தும் குறியீடு என்பதனை அறிஞர் மு.வரதராசனாரின் நாவல் ('அகல்விளக்கு') காட்டுகிறது. அதனைப் போன்றே கவிஞர் மு.துரைசாமியும் அகல்விளக்கைக் குறியீடாகக் கையாண்டுள்ளமை சிறப்புடையது.

தங்கம் தாய்மையுற்ற நிகழ்ச்சியைக் குறியீடாக
"வெண்முகில் ஆடை போர்த்த
விண்மதி பெண்மை உற்றாள்"19

எனக் கண்ணியத்தோடு விளக்குவர்.

உணர்ச்சிச் செறிவோடு காவியநடை அமைவதால் காவியநயத்தை நாம் துய்க்க இயலுகிறது. காவியத்தின் ஓசைநயம் சிறந்து காவியத்தை அழியாத்தன்மையுடன்

வாழவைக்கும் என்பது மிகையன்று. காவியத்தில் குறள்மணிகளின் ஒளியும் நிலவுகின்றமையால் வள்ளுவத்தின்பால் கவிஞர் கொண்ட ஈடுபாடும் தெரிய வருகின்றது.

*முடிவுரை:*

> "கவிஞன் நிகழ்காலத்தை உள்ளவாறு நன்கு கண்டறிகின்றான்; இன்று உள்ளவை எவ்வாறு திருத்தியமைக்கப்பட வேண்டும் என்னும் முறைகளையும் கண்டுணர்கின்றான். அதனோடு அமையாமல் நிகழ்காலத்திலே எதிர்காலத்தையும் காண்கிறான்."[20]

என்பர் ஷெல்லி. இக்கருத்திற்கேற்ப அணையாவிளக்கு என்னும் காவியம் மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தைச் சீர்திருத்த எழுந்த ஞானவிளக்கு! 'இழந்த பழம்புகழ்' மீள எழுந்த இன்னிசை விளக்கு! மலேசியத் தமிழ்க் காப்பிய வரிசையில் காலத்தின் தேவைக்கேற்பச் செய்யப்பட்ட நற்காவியம்.

## மேற்கோள் விளக்கம்


1. *Duncan Williams, Trousered apes - sick Literature in a sick society, pp 24 - 25.*

   *"Literature is no longer regarded as a passive as a mere mirror which faithfully presents a picture of contemporary manners and morals; it is seen also as modifying the sensibility of the age, while at the same time portraying it."*
2. மு.துரைசாமி, அணியாவிளக்கு, பாடல் எண் - *129*
3. *W.H.Hudson, An Introduction to the study of Literature, p 313.*

   *"The literature which really counts, as I have more than once insisted, is the literature which is made, not out of other literature, but of life; and for a living literature no models will suffice"*
4. மு.துரைசாமி, அணியாவிளக்கு, பாடல் எண் - *28*
5. மேலது, பாடல் எண் - *230.*
6. மு.வரதராசனார், கள்ளோ காவியமோ, ப - *87.*
7. தி.பாக்கியம் முத்து, இன்றையத் தமிழ் இலக்கியத்தில் மனிதன், ப-*9*
8. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், ப-*182, 231.*
9. மு.துரைசாமி, அணியா விளக்கு, பாடல் எண் - *300*
10. மேலது, பாடல் எண்-*11.*
11. மேலது, பாடல் எண்-*74*
12. மேலது, பாடல் எண்-*158.*
13. *"Metaphor is nothing but compressed similie"*

    *M.R.Ridley, "Poetry and the ordinary reader, p.64.*
14. மு.துரைசாமி, அணியாவிளக்கு, பாடல் எண்-*182.*
15. மு.வரதராசனார், இலக்கிய ஆராய்ச்சி, பக் *139 - 140.*
16. மு.துரைசாமி, அணியாவிளக்கு, பாடல் எண் - *27.*
17. மேலது, பாடல் எண்-*56*
18. மேலது, பாடல் எண்-*33*
19. மேலது, பாடல் எண்-*261*
20. மு.வரதராசனார், இலக்கிய ஆராய்ச்சி, ப-*42.*

# பயண இலக்கியம்

படைப்பாளரின் அனுபவங்கள் எதிர்கால வாழ்விற்குத் தூவப்படும் விதைகள். இவ்விதைகள் மக்களின் மனவயல்களிலே விதைக்கப்படுகின்றன. இவ்வித்துக்கள் முளைத்துக், காய்த்துக், கனிகளாகச் சுவைக்கின்றன. இக்கனிச்சுவையே இலக்கியத்தின் சுவையும். மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் முகிழ்த்து வரும் துறைகளுள் ஒன்று 'பயண இலக்கியம்' ஆகும். இஃது ஆங்கிலத்தில் 'டிராவலாக்' *(travalogue)* என்றழைக்கப்படும்.

பயணம் செய்வது ஒரு கலை. உலகில் உள்ள அனைத்து நாடுகளுக்கும் அனைவராலும் பயணம் செய்ய இயலாது. பலருக்குப் பயணம் செய்யும் ஆவல் இருப்பினும் வாய்ப்புக் கிட்டுவதில்லை. இத்தகையோரின் எண்ணங்களை நிறைவேற்றி வைப்பவை பயண இலக்கியங்களே. இவ்வகை இலக்கியங்களின் பயன் பற்றி அறிஞர் மு.வ.,

> "அறிஞர்கள் வெளிநாட்டில் சுற்றுப்பயணம் செய்யும்போது அல்லது சிலகாலம் தங்கும்போது தாம் கண்டவை கேட்டவைகளை எல்லாம் விடாமல் குறிப்பெடுத்து வைத்து நூல்கள் எழுதவேண்டும். அந்நூல்கள் இருவகையில் பயன்படும். ஒன்று வெளியுலகைப் பற்றிப் பரந்த அறிவுபெறப் பயன்படும். மற்றொன்று அடுத்தாற்போல் வெளிநாட்டிற்குச் செல்வார்க்கு வழிகாட்டியாகவும் துணையாகவும் விளங்கும்"*1*

என விளக்குவர். ஆகலின் பயண இலக்கியம் பொழுதுபோக்கு இலக்கியமன்று; பயனுள்ள இலக்கியவகையே!

தமிழில் பயண இலக்கியம் புதிய இலக்கியவகையாகக் கருதப்பட்டாலும், அதன் கரு தமிழுக்குப் புதியதன்று. தமிழில் பயண இலக்கியத் தோற்றத்துக்கு அடிப்படையாக அமைந்தவை ஆற்றுப்படை இலக்கியங்களே. சங்ககாலத்தே மிகுதியான செல்வாக்கைப் பெற்றிருந்த ஆற்றுப்படையின் நோக்கும்போக்கும் பயண இலக்கியத்தினை ஒத்தது. சங்ககால ஆற்றுப்படையும் இக்காலப் பயண இலக்கியமும் "தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற உயரிய நோக்கின் அடிப்படையில் உதித்தவை. ஆற்றுப்படையின் நோக்கை ஒல்காப்புலமைத் தொல்காப்பியம்,

"பெற்ற பெருவளம் பெறுஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"2

என உரைக்கும். வறுமையால் வாடிய பொருநர், விறலியர், கூத்தர், பாணர், புலவர் ஆகியோர் வள்ளலை நாடிச் சென்று வறுமையைப் போக்கிக்கொள்வர். வறுமையை ஓட்டிய வள்ளலின் பெருமைகள், அவன் நாட்டிற்குச் செல்லும் வழிகள், வழியிடைக்காட்சிகள் என ஆற்றுப்படையின் பொருண்மை அமைகின்றது. இதுபோன்றே பயணியும் தாம் சென்ற நாட்டின் பெருமைகள், அந்நாட்டிற்குச் செல்லும் முறைகள், அந்நாட்டு மக்களின் பழக்கவழக்கங்கள், அந்நாட்டில் காணவேண்டிய இடங்கள் எனப் பயண இலக்கியத்தின் பொருண்மையை விளக்கமுற எழுதுவது இயல்பு. ஆற்றுப்படை பயணத்தைச் செய்யுள்நடையிலே செப்ப, பயண இலக்கியமோ உரைநடையிலே உரைக்கின்றது.

சங்க இலக்கியத்துள் பத்துப்பாட்டு என்னும் தொகுதியுள் ஐந்து ஆற்றுப்படை நூல்கள் உள்ளன. உலகியலில் இம்மைப் பயணத்தைப் பற்றிப் பல ஆற்றுப்படைகள் தோன்றியது போல மறுமைப் பயணத்திற்குத் துணைசெய்யும் திருமுருகாற்றுப்படை போன்ற பயணநூல்களும் ஆற்றுப்படையாய் அழகுறக் கிளைத்தன. நக்கீரர் இப்புதுமைக்கு வித்திட்ட பெரும்புலவர் ஆவார்! 'புதிய மொந்தையில் பழைய கள்' என்ற பழமொழி போலப் பயண இலக்கியம் என்னும் புதிய பெயரில், புதிய வடிவில் வெளிவரும் பழைய கருதான் பயண இலக்கியம்!

தமிழில் பயண இலக்கியம் என்ற புதியவகைக்குக் கால்கோள் செய்த பெருமை தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், ஏ.கே.செட்டியார் ஆகியோரையே சாரும். ஏ.கே.செட்டியாருக்கு 'உலகஞ் சுற்றிய தமிழர்' என்னும் சிறப்புப்பெயர் உண்டு. இவர் தமிழில் எண்ணற்ற பயண நூல்களை எழுதியவர். திரு. வி.க. தம்முடைய இலங்கைச்செலவைப் பயணநூலாக்கினார். தமிழகத்தில் பயண இலக்கியம் உருவாக இவ்விருவருமே முன்னோடியாகத் திகழ்ந்தனர். தமிழகத்தில் 'பயண இலக்கியப்பயிர்' பல்கியமைக்கு இவ்விருவரின் . நன்முயற்சிகளே காரணம்.

சோம.லெ., அறிஞர் மு.வ., சு.இராமசுவாமி நாயுடு, சி.எம். இராமச்சந்திரச் செட்டியார் போன்ற பலரும் தமிழகத்தில் பயண இலக்கியப்பயிருக்கு உரமூட்டி வளர்த்தனர். தமிழகத்தில் பயண இலக்கியம் நன்கு வளர்ந்துள்ளமைக்கு இரு காரணங்களைக் கூறலாம். பயணக்கட்டுரைகளை அல்லது பயணநூல்களை வாசிக்கும் ஆர்வம் மக்களிடையே பெருகியது முதற்காரணமாகும். இவ்வார்வத்தின் காரணமாகப் பல நாளிதழ்களும், வாரஇதழ்களும் மாதஇதழ்களும் பயணக்கட்டுரைகளை வெளியிட்டதனாலும் பயண இலக்கியம் நன்கு வளர்ந்தது. பெற்றோரின் சாயலைப் பிள்ளைகளிடம் காண்பது போன்றே மலேசியத் தமிழிலக்கியத்துறையிலும் தமிழகத்தின் சாயலைக் காணலாம். இச்சாயல் பயண இலக்கியம் அரும்பாக முகிழ்க்கக் காரணமாயிற்று.

பயணங்கள் பலவகை. இறைவனை வழிபடப் பயணிப்பது புனிதப்பயணம். தீர்த்தயாத்திரை என வடமொழியில் வழங்குவர். அரசியல் தலைவர்கள் வெளிநாடுகளில் மேற்கொள்ளும் நல்லெண்ணப்பயணம் ஒருவகைப்பயணமே. கல்வி, தொழில், கலை, பண்பாடு, அறிவியல் போன்ற அறிவுத்துறைகளை அறிவதற்காகவும் பயணம் மேற்கொள்வதுண்டு. பொழுதுபோக்கு நோக்குடன் செல்லும் சுற்றுலாப்பயணங்களும் பயணத்தின் பாற்படும். தனிமனிதனு-

கவோ, குடும்பமாகவோ, குழுவாகவோ பயணங்கள் மேற்கொள்ளப்படும்.

பயணம் செல்வோர் அனைவரும் பயணியா? இவ்வினாவிற்கு இல்லையென்றே விடையிறுக்க வேண்டியுள்ளது. சிலருக்குப் பயணம் செய்வதே தொழிலாக அமைந்து விடுவதுண்டு. ஆகவே பயணம் செய்பவர் அனைவரும் பயணி என்றழைக்கப்படுவதில்லை. வாகனங்களை ஓட்டுநர், நடத்துநர் ஆகியோரைப் பயணிகள் என்றழைப்பது பொருந்தாது. பல்வேறு துறைகளில் அனுபவம் பெற்றவர்களோ அல்லது அறிஞர்களோ பயணம் செய்யும்போது அவ்வத்துறைகளைப் பற்றிய செய்திகளை மிக விரிவாகச் சொல்ல வாய்ப்புண்டு. விளக்கமாகக் கூறப்புகின், கலைஞரின் பயணம், தொழிலதிபரின் பயணம், தொழிற்சங்கவாதியின் பயணம், எழுத்தாளரின் பயணம், அரசியல்வாதியின் பயணம் எனப் பயணங்கள் வேறுபடுகின்றன. ஆகவே பயணங்களின் நோக்கங்கட்கு ஏற்பவும் பயணங்கள் வேறுபடுகின்றன. ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கோ அல்லது பிறநாடுகளுக்கோ செல்வது மட்டுமன்றி ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் பயணம் செய்வதுண்டு.

**பயண நூலாசிரியரின் பணிகள்:**

பயண நூல்களை எழுதுவோர் மிகுந்த கவனத்துடன் நூல்களை எழுதவேண்டும். பயண நூல்களை எழுதுபவர்கள் கயிற்றின் மேல் நடக்கும் வித்தைக்காரர்களைப் போன்றவர்கள் என்பதில் தவறில்லை. பயண நூல் எழுதுவது கடினமான கலை. பொதுவாகப் பயண நூல்களை எழுதுவோர் சொல்லவந்த செய்திக்கு அரணாகச் சில இலக்கியச்சான்றுகள் வரலாற்றுக் குறிப்புகள் ஆகியவற்றையும் காட்டவேண்டும். நகைச்சுவையுணர்வுடனும், எளிய மொழிநடையிலும் எழுதவேண்டும். பயண நூலின் செய்திகள் சாதாரணமக்களாலும் புரிந்துகொள்ளப்பட வேண்டும். மேலும் வாசகர்கள் அனைவரும் ஒரே மாதிரியான சுவையுணர்வு கொண்டிருப்பர் எனக் கூற இயலாது. விளையாட்டுத்-

துறையை விரும்புவோர் சிலர்; கலைகளை நாடுவோர் சிலர்; அறிவுத்துறைகளை அவாவுவோர் சிலர்; தொழிற்துறையை விழைவோர் சிலர். ஆகவே பயண நூலாசிரியர் வாசகர்கள் அனைவரையும் திருப்திப்படுத்த வேண்டும். வெளிநாடுகளில் கண்ட செய்திகளைத் தாய்நாட்டோடு ஒப்பிட்டு எழுதினுல், பயண நூலாசிரியர் எழுதும் செய்திகள் வாசகர் மனங்களில் பசுமையாகப் பதியும். செய்திகளை விரிவாகச் சொல்ல வேண்டும் என்ற வேட்கையுடன் அலுப்புத் தரும்வகையில் எழுதக்கூடாது.

வெறும் வருணனைகளையோ, புள்ளி விவரங்களையோ தருவது மட்டும் பயண நூலாகாது. பயணம் செய்யும்போது தனக்கு ஏற்பட்ட முதலனுபவத்தைப் பற்றி விரித்துரைத்தல் கூடாது. எடுத்துக்காட்டாக விமானப்பயண அனுபவத்தைப் பற்றி விரித்துரைப்பது தேவையற்றது. விமானப்பயணம் இன்று சர்வ சாதாரணமாகிவிட்டது. புதியபுதிய அறிவியல் கண்டுபிடிப்புகள் பெருகிவிட்டன. பயணநூல்களை எழுதுவோர் மற்ற நாடுகளின் குறைகளை நாகரிகமாகச் சுட்டலாமே தவிர, நேரடியாகத் தாக்குவது கூடாது. அவ்வாறு செய்தால் நாடுகட்கிடையேயான நல்லுறவு பாதிக்கப்படும். சிலர் உணவுப் பழக்கங்களைப் பற்றியோ அல்லது தமக்கு விருந்து கொடுத்தவர்களைப் பற்றியோ அதிகமாகப் புகழ்வர். இப்போக்கு பயண இலக்கியத்திற்கு ஒவ்வாது. பயணநூல் ஆசிரியர்கள் சிலர் தம்மைப் பற்றி அதிகமாகவே கூறிக்கொள்வர். பொதுவாழ்வில் ஈடுபட்டுப் பொதுமக்களால் பெரிதும் மதிக்கப்படும் தலைவர்களின் நூலாக இருப்பின் இப்பண்பினை நாம் தவிர்க்க இயலாது. ஆகவே முன்னர்க் குறிப்பிட்டது போன்று பயணநூல் எழுதுவதும் கயிற்றின் மேல் நடப்பதும் ஒன்றே.

மலேசியாவில் பயணநூல்கள் மிகச் சிலவே வெளிவந்துள்ளன. அவை வருமாறு:

| | | |
|---|---|---|
| (1) | நாதன் கண்ட நாடுகள் | எஸ்.பி.எஸ்.நாதன் |
| (2) | கிழக்கும் மேற்கும் | ஜோன்சன் |
| (3) | மதுரைப்பயணம் | வீ.மீனுட்சிசுந்தரம் |
| (4) | நினைவில் நின்ற அமெரிக்கப்பயணம் | டத்தோ தெ. சுப்பையா |
| (5) | அஜந்தா அழைக்கிறது | விவேகானந்தன் |
| (6) | உலகத்தமிழர் | இர.ந. வீரப்பன் |
| (7) | மலேசியத் தமிழர் | இர.ந. வீரப்பன் |
| (8) | தமிழகப் பயணம் | அ. மருதமுத்து |
| (9) | போபாலில் கபீகபீ | ஏ. சண்முகம் |

மேற்குறிப்பிட்ட நூல்கள் அனைத்தும் மலேசியத்தமிழர்களால் எழுதப்பட்டவை. மலேசியாவைப் பற்றியும் தமிழ்நாட்டிலிருந்து மலையகம் வந்த தமிழர்கள் எழுதியுள்ளனர். ஆயின் அவை விரிவஞ்சி ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை. மேலும் மலையகத் தமிழ் எழுத்தாளர்களை ஊக்குவிப்பதே இந்நூலாசிரியரின் நோக்கமாதலால் மலையகத்தமிழ் எழுத்தாளர்களின் படைப்புக்களே ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

மலேசியாவில் தமிழ்நூல்களின் வெளியீடுகள் மக்களிடையே அதிக வரவேற்பைப் பெறுவதில்லை. இதன் காரணமாக நாளிதழ்களோடு இலக்கியப்பணி தடைப்பட்டு விடுகிறது. இங்ஙனம் நாளிதழ்களில் பல பயணக்கட்டுரைகள் வெளிவந்துள்ளன. மேற்காட்டிய நூல்களில் சில நாளிதழ்களில் வெளியிடப்பட்டுப் பின்னரே நூலுருப் பெற்றன. பயணக்கட்டுரைகளைப் பல நாளிதழ்களின் ஞாயிறுமலர்கள் வெளியிட்டுள்ளன. இக்கட்டுரைகளை வடித்தோருள் முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியன், டத்தோ ஆதிநாகப்பன், இர. ந. வீரப்பன், ஆதிகுமணன், தீப்பொறி பொன்னுசாமி போன்ருேர் குறிப்பிடத்தக்கவர்கள்.

## நாதன் கண்ட நாடுகள் - திறனாய்வு

மலேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத் தலைவராயும், மலாயாத் தொழிற்சங்க காங்கிரசின் தலைவராயும் விளங்கிய, புகழ்பெற்ற தொழிற்சங்கவாதி எஸ்.பி.எஸ். நாதன். உலகநாடுகளில் உள்ள தொழிலாளர்களைப் பற்றியும் அத்தொழிலாளர்கள் உருவாக்கிய அதிசயங்களைப் பற்றியும் மிக விரிவாக எழுதப்பட்டது இந்நூல். ஆசியப் பாட்டாளி மக்களின் துயர் அறவே களையப்படவேண்டும் என்று அல்லும் பகலும் கனவு கண்ட தன் அருமைத் தந்தையின் அன்பு வேண்டுகோளுக்கிணங்கி இந்நூலைப் படைத்துள்ளார் திரு. நாதன். சங்கமணியில் தொடர் கட்டுரையாக வெளிவந்த பின்னரே நூலுருப்பெற்றது இந்நூல்.

நானூறு பக்கங்களுக்கும் மிகுதியான பக்கங்களைக் கொண்ட இந்நூல் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள மிக விரிவான பயணநூலாகும். முதல் கட்டுரையாக அமைவது ஜப்பானியப் பயணத்தைப் பற்றியதாகும். சூரியன் உதிக்கும் தேசம் என்ற முதற்கட்டுரையின் தலைப்பு உட்கருத்தொன்றை உள்ளடக்கியுள்ளது. ஆசியப் பாட்டாளி மக்களின் துயர் களையும் உயர் நோக்கைக் கொண்ட இந்நூல் ஆசிய மக்களின் வாழ்வில் 'நல்வாழ்வு' என்னும் சூரியன் உதிக்க வேண்டும் என்ற விழைவை வெளிக்காட்டுகிறது. சூரியன் உதித்ததும் இருள் கலைந்து பொழுது விடிகின்றது. காலைக் கடமைகளை ஒவ்வொருவரும் செய்கின்றனர். அதுபோலத் தொழிலாளர் வாழ்வின் துன்ப இருள் கலைந்து விடிவுகாலம் பிறக்கவேண்டும். இவ்விடிவுக்காகச் செயல்களைச் செவ்வனே செய்யவேண்டும் என்ற உண்மையையும் உணர்த்துகிறது. மேலோட்டமாகப் பார்க்கும்போது ஜப்பான் நாட்டைப் பற்றிய தலைப்பாக அமைந்தாலும் ஆழ்ந்து நோக்குங்கால் நூலாசிரியரின் உயரிய நோக்கை உணர்த்துகிறது. உலக மக்களே வியக்கும்படி முன்னேற்றப் பாதையில் 'ஏறு போல் பீடு நடையிடும்' ஜப்பானியர்கள் முன்னுதாரணமாகத் திகழ்கின்ற காரணத்தால் ஜப்பானுக்குத் தன் முதற்பயணத்தை மேற்கொண்டார் போலும் ஆசிரியர்!

தொழிற்சங்கவாதி என்ற முறையில் மட்டுமின்றி மொழியின்பால் பற்றுக்கொண்டவராகவும் திரு. நாதனை இனங்காட்டுகிறது முதற்கட்டுரை. தாய்மொழிக் கல்வியின் அவசியத்தையும் - மகத்துவத்தையும் உணர்த்துகிறார் திரு. நாதன்.

> "இத்திட்டமானது ஜப்பானியர்களைப் படித்தவர்களாக்குகின்றது. இது மட்டுமல்ல. ஜப்பானிய மொழி ஒருவனை ஆங்கில மொழியின் உதவியின்றி டாக்டராகவோ, என்ஜினியராகவோ, விஞ்ஞானியாகவோ எந்த தேசத்தின் தரத்திற்கும் குறைவின்றி மாற்றவல்ல அடிப்படையில் சிறந்த பரிபக்குவமடைந்தவொரு மொழியாகும். அம்மொழி அந்த அளவிற்குப் பக்குவமாக வளர்க்கப்பட்டுள்ளது."3

தாய்மொழிக்கல்வியின் இன்றியமையாமையை வலியுறுத்தும் இப்பகுதி மொழியின்மாட்டுக் காட்டவேண்டிய அக்கறையையும் வற்புறுத்தக் காணலாம். தமிழை மறந்து வரும் பல மலேசியத் தமிழர்களுக்கு - கல்வி கற்ற நகர்ப்புறத் தமிழர்களுக்குத் தக்கதொரு சிந்தனையை ஊட்டியுள்ளார் திரு. நாதன். ஜப்பானிய நாட்டுப் பெண் தொழிலாளிகளையும் ஆசியப்பெண்களுக்கு அரியதோர் உதாரணமாகக் காட்டியுள்ளார் நூலாசிரியர்.

செல்வங்கொழிக்கும் அமெரிக்காவைப் பற்றிய கட்டுரையில் ஹவாய்த் தீவு மக்களிடம் இந்தியப் பண்பாடு பரவியிருப்பதைக் கண்டு பெருமிதமடைகிறார் நூலாசிரியர். மாலை சூட்டி வரவேற்கும் ஹவாய்த் தீவு மக்களின் பண்பாடு கண்டு மகிழும் ஆசிரியரின் பண்பட்ட நெஞ்சத்தை - இந்தியப் பண்பாட்டில் கொண்ட அழுத்தமான - ஆழமான பற்றை அறிகிறோம். இதற்கு அரணாகக் கீழ்க்கண்ட பகுதி அமைகிறது.

"கடற்கரையில் ஆண்களும் பெண்களும் அரை நிர்வாண உடையில் உலவுவதும் கடலில் குதித்து நீந்துவதும் சர்வசாதாரணமான வழக்கமாக இருக்கின்றது. மேற்கத்திய நாகரீகத்திற்கு அது எவ்வளவோ பொருத்தமானதாக இருக்கலாம். ஆசிய மக்கள் ஒரு சிலரது கண்களுக்கு அது அருவருப்பாகத்தான் இருக்கும்"4

தொழிலாளிகளைப் பற்றியும், தொழிற்சங்கங்களைப் பற்றியுமே எழுதினல் வாசகர்களுக்குச் சுவையுணர்வு குன்றும் என நன்கறிந்த ஆசிரியர் பல துறைகளைப் பற்றிய அனுபவங்களையும் அழகுறக் காட்டியுள்ளார். இதனல் இப்பயண நூல் பொது அறிவை வளர்த்துக்கொள்ள ஒப்பற்ற வழிகாட்டியாயும் அமைகின்றது. நூலாசிரியர் திரு. நாதன் இந்திய மண்ணில் பிறந்தவர்.

"பெற்ற தாயும் பிறந்த பொன்னடும்
நற்றவ வானினும் நனிசிறந்தனவே"5

என்னும் மகாகவி பாரதியின் கருத்துக்கியையப் பிறந்த மண்ணை நினைவுகூர்கிறர். போர்ட்டோரிக்கோ தீவு பற்றி எழுதும்போது வரலாற்று அடிப்படையில் பல புதிய செய்திகளை வழங்குகிறர். இத்தீவின் பூர்வீகக்குடிகள் இந்தியரே என்றும், வாணிபத்தின் பொருட்டே இந்தியர்கள் இவண் வந்திருக்கவேண்டும் என்றும் ஸ்பானிய மக்கள் கருதுவதாகக் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தினை வலியுறுத்துமாறு கொலம்பஸ் எழுதிய குறிப்பைச் சான்று காட்டுகிறர்.

"கொலம்பஸ் இங்கு முதன்முதலாக வந்து கரையிறங்கியபொழுது ஸ்பானிஷ்காரர்களை விட நாகரிகத்தில் உயர்ந்த மக்களாக இங்கு வாழ்ந்தார்கள் இந்தியர்கள்"6

மேலும் திருமணத்தின்போது மாலேசூட்டும் வழக்கைக் கொண்டும் உணவில் மஞ்சள் சேர்க்கும் வழக்கைக் கொண்டும் தன் கருத்தை உறுதிப்படுத்துகிருர் ஆசிரியர்.

டெட்ராயிட் நகரம் கண்ட நல்லதொரு செயல் வீர-ரான வால்டர் ரூதர் என்பவரைப் பற்றிய கட்டுரை ஒவ்-வொரு தொழிற்சங்கத் தலேவருக்கும் பயனுள்ள கட்டுரை-யாகும். அவர் வாழ்க்கையை 'வழிகாட்டும் வாழ்க்கைச் சரித்திரம்' எனக் குறிப்பிட்டுள்ளது மிகப் பொருத்த-மானதே. அன்னுர் பற்றி நூலாசிரியர் வருணிக்கும் பகுதி நம்பிக்கை நட்சத்திரமாகத் திகழுகின்றது.

> "இவர்தான் வால்டர் ரூதர், அமெரிக்கத் தொழிற்சங்கத் தலேவர்கள் பலரிடம் காண முடியாத உயர்ந்த குணங்களே இவரிடம் கண்-டேன். கம்யூனிசத்தை வெறுக்கும் இவர் உல-கில் சமாதானம் நிலவ வேண்டுமானுல் உலகத்தின் மொத்த ஜனத்தொகையில் மூன்றில் இரண்டு பங்கு மக்களிடையே உள்ள பஞ்சம், பசி, அறியாமை, நோய் ஆகியவற்றை ஒழிக்கவேண்டும். இதை மறந்துவிட்டு கம்யூனி-சத்தை மட்டும் நாம் ஒழிப்பதில் நமது சக்தியை-யும் நமது கவனத்தையும் முழுக்க முழுக்கப் பயன்படுத்துவதில் அர்த்தம் எதுவும் இருக்க முடியாது. வெற்றி நமக்குக் கிடைக்காது என்ற உயரிய நம்பிக்கை உள்ளவராக இவர் திகழு-கின்ருர்"7

வால்டர் ரூதரைப் பற்றிய கட்டுரையில் புலிக்குப் பிறந்த புலிக்குட்டி என்ற பகுதி தந்தையையும் மகனேயும் ஒப்பிடும் பகுதியாக மட்டுமின்றி டெட்ராயிட் நகரத் தொழிற்சாலே முதலாளியையும் மலாயா தோட்ட முத-லாளியையும் ஒப்பிடும் பகுதியாகவும் விளங்குகின்றது. வெளிநாடுகளில் தான் கண்ட அனுபவங்களேத் தாய்-நாட்டுடன் ஒப்பிட்டுப்பார்க்கும் ஒப்பீட்டுப் பார்வையை இப்பயண நூலில் காண்கிருேம்.

"அவர் வேலை செய்து கொண்டிருந்த தொழிற்-சாலை முதலாளி "மலாயா தோட்ட முதலாளி-களைப் போல" ஞாயிற்றுக்கிழமைகளிலும் விடுமுறை நாட்களிலும் தொழிலாளர்களை வேலை செய்ய வேண்டுமெனக் கூறியதால் ஆத்திரம் பொங்கி எழுந்தது"7

தொழிலாளர் சங்கத் தலைவர் என்ற முறையில் தன்-னுடைய பயணத்தை மேற்கொண்ட திரு. நாதன் தொழிலா-ளர்களின் பொறுப்புணர்வை ஆங்காங்கே வலியுறுத்து-கிறார். தொழிலாளர் சக்தி தனித்தியங்கும் சக்தியாகும். ஆகவே தொழிற்சங்கம் அரசியல் கட்சிகளில் சிக்கிவிடாமல் தனித்திருக்கவேண்டியது மிகவும் இன்றியமையாதது என்-னும் வால்டர் ரூதரின் நம்பிக்கையைத் தக்கவாறு குறிப்பிட்-டுள்ளார். திரு. நாதனின் ஒப்பீட்டுப் பார்வையினால் ஆசியத் தொழிலாளர்கள் செயல்பட வேண்டிய முறையையும் அறிந்துகொள்ளலாம். ஊதிய உயர்வு கோரி வேலைநிறுத்தம் செய்யும் ஆசியத் தொழிலாளர்கள் புள்ளிவிவரங்களைச் சரி-வர வைத்துக்கொள்ள வேண்டும். நாட்டுநலம் பாதிக்கப்-படாமல் ஆராய்ச்சிக்கழகங்கள் அமைக்கப்படுவதே முறை-யான வழி என்பர்.

ஆசியப் பாட்டாளி மாதர்களுக்கும் அறிவுரை கூறு-கிறார் நூலாசிரியர் திரு. நாதன். தம் குடும்பத்தினரைத் தொழிற்சங்கத்தில் உறுப்பியம் பெறவேண்டாம் எனத் தடுக்கும் ஆசியப் பாட்டாளி மாதர்கள் திருமதி. வால்டர் ரூதரைப் பின்பற்றினால் தொழிலாளர் வர்க்கம் அகில உலகுக்கும் சக்திமிக்க முன்னுதாரணமாகத் திகழமுடியும் என்ற நம்பிக்கையை ஊட்டுகிறார் நாதன். இப்பகுதியில் திரு. நாதன் அவர்களின் சொல்வன்மையையும் காண்கிறோம். உருவக நடையைச் சிறப்புறக் கையாள்வர் நூலாசிரியர்.

"வால்டர் ரூதர் சரித்திரத்தைப் படித்துப் பார்த்தால் தங்களது அகக்கண்களை மறைத்துக் கொண்டிருக்கும் அறியாமை என்னும் திரை

எவ்வளவு கொடுமைகள் நிறைந்தது என்பது புலனுகும். பாட்டாளி வர்க்கத்தைப் பாழ்படுத்தும் பயம் என்னும் விலங்கு சுக்கு நூருகச் சிதறிவிடும்"8

எனப் பாட்டாளிவர்க்கத்தினருக்கு எழுச்சியூட்டுகிருர்.

அமெரிக்காவில் தாம் கண்ட அதிசயங்களை (இயந்திர மனிதன், தலைகீழாக ஓடும் ரயில், நாளைய நகரம்) விவரித்துச் செல்லும் ஆசிரியரின் திறங்கண்டு வாசகர் ஒவ்வொருவரும் மெய்சிலிர்ப்பர். உலக அரங்கில் தன்னுடைய தாய்நாடும் சிறப்பிடம் பெறவேண்டும் என்ற நல்விழைவு நல்ல குடிமகன் ஒவ்வொருவருக்கும் உண்டு. அவ்வகையில் நாட்டுப்பற்று மிக்க நல்ல குடிமகனுக ஒவ்வொருவரையும் உருவாக்குகிருர் நூலாசிரியர். அவர் கூறும் அறிவுரை ஒவ்வொரு தொழிலாளியும் உளங்கொள்ள வேண்டிய சிந்தனையாகும். பழம்பெருமை பேசும் பண்பு ஆசியர்களிடம் நிரம்பவும் உண்டென உணர்ந்த நூலாசிரியர் அதனை விலக்கிவிட்டு முன்னேற்றப்பாதையில் ஒவ்வொரு குடிமகனையும் செலுத்த முனைகிருர்.

"வேதாந்தம் பேசுவதிலும் வீண்பெருமை பேசுவதிலும் ஒரு நாடு உருப்படாது. நாட்டு மக்களுக்குள்ள பற்ருக்குறை அகலாது. பட்டினி, பஞ்சம், வறுமை ஒழிய நாட்டின் பொருளைப் பெருக்குங்கள் என்று சொல்வதோடு நமது உணர்ச்சி நின்று விடுகிறது. உலக மார்க்கெட்டுகளைப் பிடிக்கவேண்டும் என்ற எண்ணம் நமக்கில்லாமல் போனது பெருங்குறையாகும்"9

இக்குறை அகலாதவரை நாம் அமெரிக்க மக்களின் வாழ்க்கைத் தரத்தை அடையமுடியாது என்னும் உண்மையை வன்மையாகக் கூறும் நாதனின் சொற்களில்

*"மறைவாகப் பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை"10 என்னும் பாரதியின் ஆவேசக்குரல் ஒலிக்கிறது.*

தொழிற்சட்டங்கள், தொழிற்சங்க விதிமுறைகள் போன்ற செய்திகளைப் புள்ளிவிவரங்களோடு பல கட்டுரைகளில் தந்துள்ளார் நூலாசிரியர். அவை தொழிலாளர்கட்கும், தொழிற்சங்கம் தொடர்பானவர்களுக்கும் பயனுள்ளவையாகும். தொழிலாளர் முன்னேற்றம், தொழிற்சங்க விதிமுறைகள் போன்ற தொழில்துறை அடிப்படைகளைக் கொண்டே அமெரிக்காவை ஆசியர்கள் பின்பற்ற வேண்டுமெனவும், அரசியல் துறையில் அமெரிக்காவைப் பின்பற்றக் கூடாதெனவும் நூலாசிரியர் குறித்துள்ளார். நூலாசிரியர் நடுவுநிலையோடு தாய்நாட்டில் கண்ட குறைகளைச் சுட்டுவதோடு நிறைகளையும் சுட்டுகிறார்.

*"குணம்நாடிக் குற்றமும்நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்கக் கொளல்"11*

என்னும் வள்ளுவத்திற்கு இயைய நடுநிலையாளராகத் திரு. நாதனை நாம் காண்கிறோம். மலேசியாவின் குறைகளைச் சுட்டிய அவர் நிறையை மனநிறைவோடு பாராட்டுவதனைப் பின்வரும் பகுதி தெளிவுறக் காட்டும்.

*"இன்று நமது தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமே தோட்டத்தொழிலைப் பொருத்தமட்டில் சர்வதேச ரீதியில் பணபலத்திலும் அங்கத்தினர் பலத்திலும், நிர்வாகத்திலும் முன்னணியில் நிற்கும் முதல் ஸ்தாபனம் என்பதும் எவராலும் மறுக்க முடியாதோர் உண்மையாகும்"12*

திரு. நாதன் தமிழிலக்கியங்களிலே ஈடுபாடு உடையவர் என்ற உண்மையை 'உலகப் புகழ்பெற்ற நியூயார்க்' என்னும் கட்டுரையால் அறிகிறோம். நியூயார்க் நகரின் காட்சி கம்பன் கண்ட இலங்கையை அவருக்கு நினைவூட்-

டிற்று. சூரிய ஒளி நகரத்தின் மீது படமுடியாதவாறு மயன் இராவணனுக்கு இலங்கையை அமைத்துத் தந்தான் என்று தான் படித்த கதையை நினைவூட்டுகிறார். இலக்கியக் குறிப்புக்களையும், கதைகளையும் கற்பனை என்றே பலர் கருத, அவை உண்மையாக இருந்திருக்கவேண்டும் என்னும் உள்ள உறுதியைக் 'கம்பன் கண்ட நியூயார்க்' என்னும் பகுதியிலே காண்கின்றோம். இப்பகுதி நூலாசிரியரை இலக்கிய விருப்பினராகக் காட்டும் சுவையான பகுதியாகும். தம் பெருமையை அறியாத தமிழ்க்குலம் - கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுலம் - பழம்புகழை இழந்து இழிநிலை அடைந்துவரும் தமிழ்க்குலம் இப்பகுதியைப் படித்துப் பார்க்குமாயின் அவர்களுக்குள் ஓர் எழுச்சி தோன்றும்.

> "சூரியன் உதயமாகி உச்சிக்கு வரும்வரை வெயிலே நகரத்தின் மீது படியாத அளவிற்குப் பல நூற்றுக்கணக்கான கட்டிடங்களை அமெரிக்கக் கட்டிட நிபுணர்கள் வானளாவ அமைத்திருக்கும்பொழுது, மயன் ஏன் இலங்கா நகரைச் சூரிய வெளிச்சமே படாத நகராக அமைத்திருக்க முடியாது என்று நினைக்கத் தோன்றுகிறது. திராவிட மக்கள் இராவணனைத் திராவிடனாகக் காணும் இந்தச் சகாப்தத்தில் அவன் அன்றே அமெரிக்கர்கள் இன்று காணும் அற்புத நகரத்தை உருவாக்கி ஆண்டு அனுபவித்தான் என்பதை நினைத்துப் பார்த்தால் நமது தோள்கள் மலைகள் எனப் பூரிக்காமல் இருக்க முடியுமா?"13

பயணநூல் எழுதுவோர் வாசகர்களுக்குச் சுவையுணர்வு குன்றாமலிருக்க நகைச்சுவை விருந்து வழங்குவர். 'கையோடு போனது கைப்பிடி', நடுத்தெருவில் நகைச்சுவை விருந்து ஆகிய பகுதிகளில் நகைச்சுவை இழையோடத் தம் அனுபவங்களை விவரித்துள்ளார் நூலாசிரியர்.

மலேசியாவில் வாழும் மூவினங்களுள் ஒன்றாகிய சீன இனமக்கள் நியூயார்க்கில் வாழும் முறை பற்றியும், குறிப்பாக அவர்களின் பண்பாடு காக்கும் திறம் பற்றியும் விதந்து பேசியுள்ளார் ஆசிரியர். தாய்மொழிக் கல்விக்குச் சீனர்கள் முக்கியத்துவம் அளிப்பதற்கு 'சிட்டிஸ்கூல்' நல்லதோர் எடுத்துக்காட்டாகும். தாம் கண்ட இடங்களைப் பற்றிய முழுமையான தகவல்களை ஆசிரியர் தந்துள்ளார் என்பதற்கு நியூயார்க்கில் உள்ள ஐ.நா. சபை பற்றிய கட்டுரை சீரிய சான்றாம்.

திரு. நாதன் கவிதையுள்ளம் படைத்தவர் என்பதற்கு இப்பயணநூல் தக்க சான்றாகும். நியூயார்க் நகரைச் சூழ்ந்திருந்த பனிமேகங்கள் இரவு வந்தாற்போன்றதொரு திகைப்பை ஏற்படுத்தியதென விளக்குகையில் பனிமேகங்களைக் கருத்த யானைகளாகக் காட்டியுள்ளார்.14 சுவிட்சர்லாந்துப் பயணத்தை விவரிக்கும் போது இயற்கை எழில் கொஞ்சும் அந்நாட்டின் அழகை இனிய முறையில் எழிலுற விளக்குகிறார். கடல் அலைகளின் காட்சி தொழிலாளருக்குச் சூட்டும் வாகை மாலையாகவும் சிவபெருமான் சூடும் தும்பைமாலையாகவும் தோன்றுகிறது என வருணித்துள்ள பாங்கு நூலாசிரியரின் இயற்கை ஈடுபாட்டை, கவிதை நெஞ்சத்தை, கருமமே கண்ணாகக் கருதும் செயல்திறனை நமக்கு உணர்த்துகிறது.

> "சைப்ரஸ் தீவின் கரையோரங்கள் மீதும் துருக்கி தேசத்தின் தென்கரை மீதும் மோதும் கடலின் வெண் அலைத் திரள்களை ஆகாயத்தின் மீதிருந்து நோக்கும்போது தனது செழிப்பிற்கும் - சுதந்திரத்திற்கும் ஓய்வு ஒழிவின்றி இரவு பகலென்று பாராது இரத்தத்தை வியர்வையாக வடித்துக்கொட்டி, வாழ்வில் இன்பம் என்றால் என்ன என்பதைக் காண வாய்ப்பின்றி, வகையின்றிப் பரந்த மனப்பான்மையுடன் கள்ளங்கபடமின்றி உழைத்துக் கொண்டிருக்கும் தனது அருமைக் குழந்தை-

களான பாட்டாளி வர்க்கத்தின் கழுத்தின் மீது நமது இயற்கையன்னை போடும் ஈடிணையற்ற வெண்ணிறமான வாகை மாலைகளைப் போலும், சைவத்தின் நிலைக்களமான சிவபெருமான் சூட்டி மகிழும் வெண்மையான தும்பை மலர்மாலைகளைப் போலும் என் கண்ணுக்குத் தோன்றுகின்றன"*15*

என அமையும் இவ்வருணனைப் பகுதி நூலாசிரியரின் மொழிநடைக்குப் பொருத்தமான சான்றாகும்.

அழகு மிக்க இடங்களை வருணிப்பதோடு ஒருநாட்டில் ஆபத்தான இடங்களையும் பற்றிக் கூறுவது பயணநூலின் இன்றியமையாப் பண்பாகும். சுவிட்சர்லாந்து நாட்டின் 'மவுண்ட் பிளாங்க்' என்னும் சிகரத்திற்குப் பலியான உயிர்களும் உடைமைகளும் எண்ணிலடங்கா எனச் சுட்டுவது குறிப்பிடத்தக்கதாம்.

நூலாசிரியர் நாதன் ஆங்காங்கே தமிழ்ப் பழமொழிகளைப் பயன்படுத்திப் பயணநூலின் சுவையை அதிகரிக்கிறார். சுவிட்சர்லாந்து நாட்டின் விமான நிலையம் சிறியதாக இருப்பினும் பன்னாட்டு விமானங்கள் அங்கு வந்தவண்ணம் இருக்கும் காட்சி "சிறுகக் கட்டிப் பெருக வாழ்" என்ற பழமொழியை நினைவூட்டுவதாகக் குறித்துள்ளார். இப்பயணநூலின் நடை வாசகர்களைக் கவர்ந்திழுக்கும் ஆற்றலுடையது. அவர் கொடுக்கும் பக்கத்தலைப்புக்கள் காந்தம் இரும்பைக் கவர்வது போல உள்ளங்கவர் தலைப்புக்களாக அமைந்திருக்கும்.

ஒரு விவசாயி சொந்த வீடு, நிலம், வாகனம் போன்ற வசதிகளுடன் ஜெர்மனி நாட்டில் வாழமுடிகிறது. ஆயின் நம் நாட்டில் வாழமுடிவதில்லையே! இந்நிலைக்கான காரணம் என்ன என்பதை நம் நாட்டு அமைச்சர்கள் ஏன் சிந்திக்கவில்லை? என்ற வினாக்கணைகள் தம் உள்ளத்தில் அரும்பின எனச் சுட்டுவர். இவ்வினா அமைச்சர்களின்

அகக்கண்களைத் திறக்கவேண்டும் என்னும் விழைவை ஆசிரியரிடம் காணலாம்.

ஆசிரியர் திரு. நாதன் அவர்கள் அமைதி நாடும் தூதுவராகவும் இந்நூலின்வழி அறிமுகமாகிறார். கிழக்கு ஜெர்மனி, மேற்கு ஜெர்மனி ஆகிய இரண்டும் பிளவுபட்டிருந்ததனால் மக்கள் வெறிபிடித்து அலைந்தனர். இந்நிலை கண்டு நெஞ்சு பொறுக்காமல் வேதனைப்படுகிறார் நாதன். அவ்வேதனையின் எதிரொலி கீழ்வருமாறு:

> "உலகத்தையும் உலகின் மக்களையும் படைத்ததாகச் சொல்லப்படும் ஆண்டவன் ஒரே குடும்பமக்களாக அவர்களை வாழவைக்காமல் ஒரே அரசாங்கத்தின் பிரஜைகளாக இயங்க வைக்காமல் ஒருவர் மீது மற்றொருவர் பொறாமை கொண்டு - பகைமை கொள்ள வழிவகுக்கும் கொள்கை வேற்றுமைகளையும் - கூடாத தத்துவங்களையும் ஏன் படைத்தான் என்ற வினாக்குறிதான் அது"16

அமெரிக்கா, உருசியா ஆகிய இரு வல்லரசுகளும் தங்களுள் பலசாலி யார்? என நேரடிப்போட்டி நடத்திக்கொண்டிருப்பதனால் ஜெர்மனி அடையும் வேதனைகளை மனிதாபிமானக் கண்ணோட்டத்துடனும், துணிவுடனும் கூறியுள்ளார் நாதன். ஜெர்மானியர்கள் பல்வேறு தேசத்தினரையும் எப்படி உபசரிப்பது என்ற கலையைக் கற்று வைத்திருப்பதனை நாதன் பாராட்டுகிறார். மலேசியாவின் தேசிய கீதத்தை ஜெர்மனியில் செவிமடுத்த அவர், நம் நாட்டுத் தேசிய கீதத்தை வெகுவாக மற்றவர் பாராட்டுவதனையும் சுட்டுகிறார்.

திரு. நாதன் நுண்கலைகளைத் துய்க்கும் கலை நெஞ்சமுடையவராகவும் இந்நூலில் காட்சியளிக்கிறார். ஜெர்மானிய நாட்டுப்புறப் பாடல்களை அவர் சுவைத்த விதத்தைச் சொல்லியிருக்கும் பாங்கு அவருடைய கலை நெஞ்சத்தைக்

காட்டுவதாக மட்டும் அமையாமல், பயணநூலாசிரி-யருக்குரிய பண்புகள் நாதனிடம் பொருந்தியிருப்பதையும் காட்டுகின்றன.

ஜெர்மானியர்கள் (சமஸ்கிருத) வடமொழியைக் கற்று வல்லவரான செய்தியைக் குறிப்பிடும் நாதன் எள்ளற்சுவை-பட பாரதநாட்டு அறிஞர்கள் சிலரின் ஆய்வு நோக்கங்களை-யும் எழுதுகிருர். ஹிட்லரின் உயர்வு பற்றி நாதன் எழுதி-யுள்ள விதம் ஒவ்வொருவரையும் உயர்த்தும்; உயர்வுக்கு ஊக்குவிக்கும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

பால்மணக்கும் டென்மார்க் நாட்டு அனுபவங்களை நயமுற விளக்குகிருர். தொழிலாளர்களுக்கென வெளிவரும் மாத இதழ் பற்றியும், அதனுடைய நடுநிலை நோக்குப் பற்றி-யும், தொழிலாளர்கள் முதலாளிகளுக்கு அஞ்சாத உரிமை வாழ்க்கை பற்றியும் விரிவாக எழுதியுள்ளார். தொழிற்சங்க-வாதிகளின் சுறுசுறுப்பையும் செயல் வேகத்தையும் மன-மாரப் பாராட்டும் நாதனின் வரிகள் ஆசியத் தொழிலாளர்-களின் செயலாற்றலுக்கு வழிகாட்டும் ஒளிவிளக்காம்.

> "எந்த ஒரு காரியமும் ஆமை வேகத்தில் போவதை நான் விரும்புவதில்லை. உற்சாகமும் துடிப்பும் நிறைந்த வேகமாகவும், அதே நேரத்-தில் சர்வ ஜாக்கிரதையுடனும் முன்னெச்சரிக்-கையுடனும் செயலாற்றும் காரியவாதிகளையே பெரிதும் விரும்புபவன் நான். அந்த விருப்பத்-திற்கேற்ற முறையில் நான் கோபன்ஹேகன் நகரில் தங்கியிருந்தபோது சுறுசுறுப்பும் இள-மைத்துடிப்பும் அமையப்பெற்ற பல தொழிற்-சங்கவாதிகளை அனுபவ முதிர்ச்சி பெற்ற தொழிற்சங்கவாதிகள் பலருடன் ஒரு சேரக் கண்டபோது மகிழ்ச்சியடைந்தேன்."17

டென்மார்க்கில் தாம் கலந்துகொண்ட விருந்தினைப் பற்றிக் கூறும்போது, திருக்குறள் கூறும் விருந்தோம்பலைத்

தம் நண்பருக்கு விளக்கியதாக நாதன் குறிப்பிட்டுள்ளார். தாய்மொழியின் பெருமை குறித்து விளக்க நேர்ந்த பொன்னுன வாய்ப்பின்மூலம் அவருடைய மொழியுணர்வை அறிய இயலுகிறது. இலக்கிய விருந்தாகவும் இப்பகுதி அமைகிறது.

சிந்தை கவர்ந்த ஸ்வீடன் நாட்டுப் பழங்குடிகளின் வீட்டமைப்பு மலேசியப் பழங்குடிகளின் வீட்டமைப்போடு ஒத்திருப்பதைச் சுட்டிச்செல்கிறுர் நாதன். பல செய்திகளே ஒப்பிட்டுக் காட்டுவதன் மூலம் பல உண்மைகளே வாசகர் மனத்தில் பதித்துவிடுகிறுர். ஆசிய நாடுகளில் பெருகி வரும் மக்கட்தொகையையும், ஸ்காண்டிநேவிய நாடுகளில் அருகி வரும் மக்கட்தொகையையும் ஒப்பிட்டுள்ளார். சுவீடன் நாட்டு அரசாங்கம் உடலூனமுடைய குழந்தைக்ளிடம் காட்டும் அக்கறையும் பரிவும் ஆசிய நாடுகள் முன்மாதிரியாகக் கொள்ளத்தக்கவையாம்.

நார்வே நாட்டை ஒரு நந்தவனமாகக் காணும் நாதன் கவிதையுள்ளம் படைத்தவர். அவருண்டய முருகியல் உணர்வுக்குக் கீழ்க்கண்ட வருணனே தக்கதொரு சான்ருக அமைகிறது.

> "பஞ்சு போன்ற வெண்ணிறமான உறைபனியைத் தங்களது உச்சிகளில் தாங்கி நிற்கும் இந்த நார்வீஜிய நாட்டு மரங்கள் மல்லிகை மலரைத் தங்களது தலேகளில் சூடி மகிழும் தென்னகத்துப் பெண்களேப் போல் தென்படுகின்றன."*18*

தாய்நாட்டுப்பற்று மேலோங்கி நிற்கும் நற்குடிமகனுக நூலர்சிரியர் நாதன் காட்சியளிக்கும் இடங்கள் பல. அவற்றுள் ஓர் அனுபவத்தை நார்வே நாட்டுப் பயணத்தில் காணலாம். இந்தோனேசியாவுக்கும் மலேசியாவுக்கும் வேறுபாடு தெரியாமல் இரு நாடுகளேயும் ஒன்றெ்ன மயங்கிய நார்வே மக்களுக்குத் தெளிவு பிறக்கச் செய்த திரு. நாதனின் அனுபவம் அவருடைய அதிர்ச்சியை வெளிக்காட்டுவதோடு

அவருடைய நாட்டுப்பற்றையும் தெள்ளிதின் உணர்த்துகிறது. நார்வே நாட்டில் நாதன் கண்ட சமத்துவ உணர்வு - தொழிலாளி, முதலாளி என்ற பேதத்தை மறக்க ஆசிய மக்களுக்கும் வழிகாட்ட வேண்டும்; ஐரோப்பாவைப் போன்று ஆசியாவும் முன்னேறும் நாள் எந்நாளோ? என ஏங்க வைக்கிறது.

ஐக்கிய நாட்டுத் தொழிலாளர் சபையும், ஜினிவாவில் உள்ள சர்வதேச விவசாயத் தோட்டத் தொழிலாளர் சங்கமும் நடத்திய கருத்தரங்கில் கலந்துகொள்ள ஈழம் சென்ற நாதன் தன் பயண அனுபவங்களைச் சிறப்பாகச் சித்திரிக்கிறார். இயற்கை எழில் கொஞ்சும் ஈழநாட்டுப் பயண அனுபவத்தைக் கடவுட் காட்சியாகவே விளக்குகிறார் நாதன். 'ஆதம்ஸ் பீக்' என்று ஆங்கிலத்திலும் சிவனடிபாதமலை என்று தமிழிலும் வழங்கப்படும் மலைக்காட்சியின் வழி இயற்கையில் இறைவனைக் காணும் தமிழர் நெறியை உணர்த்துகிறார்.

> "மனிதனின் பாதச் சுவட்டைப் போன்ற வடிவத்தில் இம்மலைச்சிகரம் காணப்படுகிறது. அதனைக் கிறித்தவர்கள் ஆதம்ஸ் பீக் என்றும், இந்துக்கள் சிவனடிபாதமலை என்றும் அழைக்கின்றனர்."19

இலங்கையில் உள்ள கண்டியில் புத்தர்பிரானுடைய பல்லினை ஊர்வலமாக எடுத்துச் செல்லும் காட்சி, இராமாயண நிகழ்ச்சிகளோடு சம்பந்தப்பட்ட ஊர்ப்பெயர்கள், சிங்களப் பெண்களிடம் காணப்படும் தமிழ்ப்பண்பாட்டின் சாயல், கதிர்காமத்தில் கந்தன் கோயில் கொண்ட திறம் ஆகிய சுவையான பல செய்திகளை எழுதிச்செல்லும் ஆசிரியரின் திறம் பாராட்டிற்கு உரியது.

பிலிப்பைன்ஸ் நாட்டைப் பற்றிய செய்திகளை உள்ளது உள்ளபடியே கூறிச்செல்கிறார். பிலிப்பைன்ஸ் நாட்டு மக்கள் கோழிக்கூடுகள் போன்ற வீடுகளில் வாழும் அவலநிலை

கண்டு ஒவ்வொருவர் உள்ளமும் தீயிலிட்ட மெழுகைப்-போல் உருகுகிறது.

முடிவுரை:

ஒரு தொழிற்சங்கவாதியாக மட்டுமின்றி ஓர் எழுத்-தாளராக, ஓர் இலக்கியவாதியாக, அறிவுத்திறம் மிக்க ஓர் ஆசானாக, தொலைநோக்குச் சிந்தனைகளும் சமுதாய அக்-கறையும் கொண்ட சமுதாயச் சிற்பியாக, குறைகளையும் நிறைகளையும் வெளிப்படையாகச் சொல்லும் துணிவுடை-யாராகத் திரு. நாதனை அடையாளம் காட்டும் இப்பயண-நூல் ஓர் அரிய படைப்பு. பல்சுவை விருந்தளிக்கும் பல்கலைக்-கூடம் என்பது உண்மை; வெறும் புகழுரை அன்று.

# கிழக்கும் மேற்கும்

இ.ஜே.ஜோன்சன் சபா, சரவா, புருணே ஆகிய கிழக்குப் பகுதிகளுக்கும் பல மேற்கு நாடுகளுக்கும் சென்ற பயண அனுபவங்களைக் கிழக்கும் மேற்கும் என்னும் பயண-நூலாக வெளியிட்டுள்ளார். கிழக்கும் மேற்கும் என்னும் தலைப்பு கிழக்கு நாடுகளுக்கும் மேற்கு நாடுகளுக்கும் உறவுப்-பாலம் அமைக்கும் முயற்சியின் வெளிப்பாடாகும். தன்னு-டைய பயண அனுபவங்களால் கிழக்கையும் மேற்கையும் இணைத்துள்ளார்.

இவருடைய முதற் பயணம் இலங்கைப் பயணம். இலங்கையின் நிலப்பரப்பை எழிலுற விளக்குகிறார் ஜோன்-சன். பண்டாரநாயகா விமானத்துறையை அடைவதற்கு முன் வானிலிருந்து நிலப்பரப்பைக் காணும் போது "பிரித்-துப் பிரித்து அடுக்கிவைத்த சிலேட்டுப் பலகைகள்" போல இருந்தன என்று குறிப்பிடுவது நயமான வருணனை.

பயணம் செல்லும் இடங்களைப் பற்றிய சிறப்புச் செய்திகள் அனைத்தையும் சுட்டியுள்ளார் ஆசிரியர். இலங்கை பயணத்துறை வளர்ச்சிக்கெனச் செலவிடும் தொகையைப் பற்றிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். பயணிகளைக் கவர்வதற்கான முக்கியக் காரணம் இதுவென அவர் கூறியிருப்பது ஏற்புடைய கருத்து. பயணம் செய்யும் நாட்டில் ஏதேனும் ஒரு காட்சியைக் கண்ணுறும் வேளையில் தாய்நாட்டு நினைவு பயணியின் மனத்தில் எழுவது இயற்கை. இதனல் பயண நூல் ஆசிரியருடைய நல்லெண்ணமும், அவர் தாய்நாட்டின் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு கூறும் பயனுடைய அறிவுரைகளும் நமக்குத் தெளிவாக உணர்த்தப்-படுகின்றன. இக்கருத்துக்கியைய இலங்கையின் பொது நூல-கத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது,

> "செல்வங் கொழிக்கும் நம் மலேசியத் திருநாட்-டில் வருங்கால சந்ததியினர் வளத்திற்கு வழி-காட்ட இப்படிப்பட்ட ஒரு நூல்நிலையம்

அமையவேண்டுமே என்று இறைவனை வேண்டிக்கொண்டேன்."20

என்று எழுதுகிறார். இப்பகுதி ஆசிரியரின் நல்ல மனத்திற்குத் தக்கதொரு எடுத்துக்காட்டாகும்.

தாய்நாட்டுப்பற்று நாணயமிக்க நல்ல குடிமகனிடம் மிக்கிருக்கும். இவ்வடிப்படையில் காணும்போது மலேசியாவில் வழங்கிவரும் தமிழின்நிலை குறித்துப் பெருமிதமடைகின்றார் ஆசிரியர். தமிழுணர்வு மிக்க திரு. ஜோன்சனின் பாராட்டுரை கீழ்க்கண்டாங்கு அமைகிறது.

"ஆனால் இடம்பெற்றிருந்த தமிழ்நடையைக் கண்டதும் தமிழ்மொழி இங்கு அடைந்துள்ள பெருமாற்றத்தை எண்ணி வியப்படைந்தேன். இதுதான் இலங்கைத் தமிழோ? என்று விழித்தேன். நான் கண்ட தமிழ் பேசும் மக்களிடையிலெல்லாம் கேட்ட தமிழுக்கும் மலேசியாவில் கேட்கும் தமிழுக்கும் இடையில் உள்ள வேறுபாட்டை எண்ணியபோது மலேசியாவின் தமிழை எண்ணிப் பெருமைப்பட்டேன். இத்னால்தான் உலகத்தமிழ் ஆராய்ச்சி மாநாட்டை நடத்திய பெருமையும் நமக்குக் கிடைத்தது என்று எண்ணி இறுமாந்தேன்."21

தன்னுடைய பொருட்களை இழந்த நிகழ்ச்சிகளை உள்ளது உள்ளபடியே வருணித்துள்ளார். எதிர்காலத்தில் கவனமாக இருக்கவேண்டும் என்ற அக்கறையால் தம் அனுபவத்தை மறைக்காது கூறினார் போலும் ஆசிரியர். இலங்கையிலே தங்கிவிட்ட மலாய்க்காரர் ஒருவரைச் சந்தித்து மலாய்மொழியில் உரையாடியது, இலக்கிய மேற்கோள்களைப் பயன்படுத்தி உள்ளது போன்ற சுவையான அம்சங்களும் ஜோன்சனின் இலங்கைச் செலவில் இடம்பெற்றுள்ளன.

இந்தியப் பயணத்தில், தென்னிந்தியப் பயணத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் கலையுணர்வோடும், சமரச நோக்கோடும், பரந்தமனத்தோடும் பல செய்திகளை எழுதியுள்ளார். கிறித்தவரான நூலாசிரியர் இந்துக் கோவில்களுக்குச் சென்றுள்ளமை அவருடைய சமரச உணர்வுக்குச் சான்றுகிறது. இந்தியப் பயணத்தின் போது ஆசிரியர் 'குண்டு கருப்பையாவை'ச் சந்தித்த நிகழ்ச்சி நகைச்சுவை பயப்பதாம். இந்தியப் பாராளுமன்றத்தில் கண்ட காட்சியை ஆசிரியர் துணிவுடன் கூறியுள்ளார். ஆயின் பண்பான சொற்களைப் பயன்படுத்தியிருக்கலாம். பாராளுமன்ற உறுப்பினர்கள் பண்பின்றி நடந்து கொண்டாலும், அதை வருணிக்கும் வெளிநாட்டுப் பயணி ஒருவர் முறையற்றவாறு - மதிப்புக் குறைவாகத் 'தரமில்லாத' வார்த்தைகளைத் தவிர்ப்பது நல்லது. நாய்கள் பல ஒன்றோடொன்று சண்டைபோடுவது போல இருந்தது எனக் குறிப்பிடுவது வேதனைக்குரியது.

காஷ்மீரில் பொதுவாக மக்கள் குளிர்காயும் முறையைக் கூறுகிறார். இது புதுமையான முறையுமாகும். சிறிய மண்குடத்தில் கரியும் அதில் தீயுமிட்டு அதனைக் கயிற்றால் கட்டிக் கழுத்தில் தொங்கவிட்டு வயிற்றுப்பாகத்தில் பொருத்திக் கொள்வதன் மூலம் பொல்லாத குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்கிறார்கள்.

இப்பயணநூலில் ஆசிரியர் ஜோன்சன் தான் தங்கியிருந்த ஹோட்டல்களைப் பற்றிய குறிப்புக்களைச் சற்று விரிவாகக் கூறுகிறார். அதுபோல உணவுக் குறிப்புக்களையும் விமானப் பயணம் பற்றிய செய்திகளையும் சற்று அதிகமாகவே எழுதியுள்ளார். இவை பயணநூலின் சுவையைக் குறைப்பவை. பயணநூல் எழுதுவோர் விலக்க வேண்டியவற்றுள் மேற்கூறிய குறிப்புக்களும் அடங்கும்.

பாகிஸ்தானில் 'சர்பாய்கள்' பற்றி எழுதுகையில் ஏழைகளைச் சுரண்டிப் பணக்காரர்கள் மேலும் பணஞ்சேர்க்கும் கொடுமையை மனிதாபிமானக் கண்ணோட்டத்துடன் ஜோன்சன் எழுதியுள்ளார்.

எகிப்தியப் பயணத்தின் போது விமானப்பணிப் பெண்கள் நடக்கும் காட்சியை ஒட்டகக்குட்டிகளின் துள்ளலுக்கு உவமித்துள்ளார். எகிப்து நாட்டின் பிரமீடுகளைப் பற்றியும், மம்மிகளைப் பற்றியும் ஆசிரியர் எழுதியுள்ளவை சுவையான செய்திகளாகும். இறந்த அரசர்களின் உடலில் உள்ள இரத்தத்தை உறிஞ்சி எடுத்துவிட்டு மூலிகைகளைக் கொண்டு உடலைப் பாதுகாப்பர். இவ்வாறு பாதுகாக்கப்படும் உடலை 'மம்மி' என்பர். எகிப்தியப் பயணத்தில் பல வரலாற்றுக் குறிப்புக்களை ஆசிரியர் காட்டியுள்ளது எகிப்து நாட்டின் தொன்மையைச் சிறப்பிப்பதாக அமைகிறது. இசுலாமிய நாடுகளில் காணமுடியாத காட்சியொன்றை எகிப்தில் கண்டதாக ஆசிரியர் கூறுகிறார். பெண்கள் யாவரும் ஆண்களுடன் கைகோர்த்துச் செல்வது இசுலாமியப் பண்பாட்டுக்கு ஒவ்வாத ஒன்று. இதனைக் காட்டுவதன் வழி ஐரோப்பிய நாகரிகத்தின் தாக்கம் எகிப்தில் காணப்படுவதை ஆசிரியர் சுட்டுகிறார்.

தன்னுடைய பயணநோக்கத்தை ஆசிரியர் எகிப்தியப் பயண அனுபவங்களை விளக்கும்ஞான்று பொருத்தமுறக் கூறுகிறார். இப்பகுதியில் சாதாரணப் பயணியாகச் செல்பவருக்கும் அரசாங்க விருந்தினராகச் செல்வதற்கும் உள்ள வேறுபாடுகளையும் தெள்ளிதின் விளக்குவர்.

> "எனது பயணத்தின் நோக்கம் பல நாட்டு மக்களின் அன்றாட வாழ்க்கை எப்படி இருக்கிறது என்பதை அறிந்துகொள்ளவும், பழங்கால, நவீனகாலச் சிற்பங்களையும், கலைப்பொருட்களையும் கண்டு ஆனந்திப்பதும்தான். அரசாங்க விருந்தினராகவோ, ஒரு சில அமைப்புக்களின் பேராளராகவோ, பயணம் செய்தால் நாம் மறுபக்கத்தைக் கண்டுவிட்டாலுங்கூட வெளியே சொல்ல முடியாது; சொல்லவுங்கூடாது. நானும் அரசாங்க விருந்தினராக ஒரு சில இடங்களுக்குப் போயிருக்கிறேன். ஆனால் அவ்விடங்களின் உண்மைநிலையை அறிய

வாய்ப்பு ஏதுங் கிடைக்கவில்லை."22

இப்பயண அனுபவம் ஒவ்வொரு பயணியும் முற்றிலும் மனங்கொள்ளவேண்டிய பயனுடைய செய்தியாகும்.

துபாய்ப்பயணம் வழியே பல நடைமுறை உண்மைகளை நூலாசிரியர் காட்டியுள்ளார். பொருளாசை கொண்டு சேராத நெறி சேர்ந்து, குடிநுழைவுச்சீட்டு (விசா) இன்றித் துபாய்க்கு வருபவர்களையும், துபாய்ப்பணக்காரர்கள் மலபார் பகுதிக்கு வந்து இசுலாமியப்பெண்களைத் திருமணம் செய்துகொண்டு, பின்னர் அவர்களைப் பிரிந்து, மறந்து செல்வதையும் காட்டியுள்ளார். துபாயில் பள்ளியைத் தொடங்கிக் கல்விப்பணியாற்றும் திரு. வர்கீஸைப் பற்றிக் கூறியுள்ளவை பாராட்டத்தக்கவை. சென்றவிடமெல்லாம் சிறப்புச்சேர்க்கும் இந்தியர்களை எண்ணி இறும்பூதடைய இப்பயணம் ஒரு வாய்ப்பாகும்.

சிங்கப்பூர்ப் பயணத்தில் தமிழுணர்வுமிக்க ஜோன் தமிழுக்குச் சிங்கப்பூர் அரசு அங்கீகாரம் வழங்கி ஆட்சி மொழிகளுள் ஒன்ருக்கியிருப்பதனை நன்றியுணர்வோடு பாராட்டுகிருர். புருணே, சபா, சரவா, தாய்லாந்து ஆகிய அண்டை நாடுகளுக்கும் பயணம் மேற்கொண்டு இன்றியமையாத செய்திகளைச் சுருக்கமான முறையில் கூறியுள்ளார். 'சென்று தேய்ந்து இறுதல்' என்பது போலப் பிற்பகுதியில் உள்ள செய்திகள் அமைகின்றன.

பலநாடுகளுக்கும் தனிப்பட்ட முறையில் பயணம் செய்து பயண அனுபவங்களைத் தமிழ்கூறும் நல்லுலகில் துணிவோடும், நடுவுநிலையோடும் கூறியிருக்கிருர் திரு. ஜோன்சன். பயண மார்க்கங்களையும், உணவு பற்றிய செய்திகளையும் அளவோடு ஆசிரியர் எழுதியிருப்பாராயின் இந்நூல் படிப்பதற்கு மேலுஞ் சுவையூட்டும். சுருங்கக்கூறின் ஜோன்சனின் எண்ணங்களையும், திறமைகளையும் இப்பயணநூல் நன்கு படம்பிடித்துக் காட்டுகிறது.

# நினைவில் நின்ற அமெரிக்கப்பயணம்

கனடாவில் நடைபெற்ற காமன்வெல்த் நாடாளுமன்ற மாநாட்டில் பினுங்கு மாநில அரசின் பிரதிநிதியாகக் கலந்து கொள்ளச் சென்ற டத்தோ தெ. சுப்பையா அவர்களின் பயண அனுபவங்கள் நினைவில் நின்ற அமெரிக்கப் பயணம் என்னும் நூலாக மலர்ந்துள்ளது.

அமெரிக்காவில் தான் சென்ற இடங்களைப் பற்றிய தகவல்களை முழுமையாக, சுவையாக எழுதியுள்ளார் டத்தோ தெ. சுப்பையா. நூலிடையே நகைச்சுவை இழையோடுகிறது. பல புதிய சுவையான தகவல்களை ஆசிரியர் இந்நூலிடையே தருகின்றார். சான்றாகப் 'பொட்டாஷ்' என்பதன் பெயர்க்காரணம், பொட்டாஷ் உரம் எடுக்கப்படும் இடம், மறைந்த அமெரிக்க அதிபர்களின் குரல்கள் பதிவு செய்யப்பட்ட நாடா ஆகியவற்றைக் கூறலாம்.

டத்தோ தெ. சுப்பையா சட்டக்கல்வி பயின்றவர். சட்டத்துறை பற்றிய செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர் எழுதியுள்ளார். கனடாவில் ஸ்டீபன் பேக்கர் பல நல்ல - புதிய சட்டங்களை உருவாக்கியமையை நினைவுகூர்கிறார்.

அமெரிக்க முன்னாள் அதிபர் ஜான். எப். கென்னடி உருவாக்கிய புதிய சித்தாந்தத்தை டத்தோ சுப்பையா தக்க இடத்தில் தக்கவாறு காட்டியுள்ளார்.

> " 'நாடு உனக்கு என்ன செய்தது என்று கேட்காதே. நீ நாட்டுக்கு என்ன செய்தாய் என்று வினா எழுப்பு' என்று மனித சிந்தனையில் ஒரு புதிய சித்தாந்தத்தை உருவாக்கியவர் கென்னடி. இவ்வாறு தனிமனிதர்களின் சுதந்திரத்திற்காகப் பாடுபட்ட ஒரு மாமனிதர் என்ற வகையில் அமெரிக்கர்களின் இதயங்களில்

மட்டுமல்ல, உலகெங்கிலும் வாழ்கிற மனித சமுதாயத்தின் இதயங்களிலெல்லாம் நீக்கமற நிறைந்திருப்பவர் ஜான். எப். கென்னடி."23

கென்னடியின் பொன்மொழிகள் நாட்டுப்பற்றுடைய நல்ல குடிமகனை உருவாக்கும்.

அமெரிக்கப் பயணத்தின் மூலம் நல்ல - பயனுடைய அறிவுரைகளை ஆசிரியர் நம் நினைவில் நிறுத்தியுள்ளார். சான்றாகக் குழந்தை வளர்ப்புப் பற்றிய செய்தியைக் கூற-லாம். குழந்தைகளை அச்சுறுத்தி வளர்ப்பதன் தீமையை அவர் சுட்டிக்காட்டியுள்ளார். இவண் பாரதி பாடிய கருத்-தினை உளங்கொண்டு அச்சுறுத்திக் குழந்தைகளை வளர்ப்ப-தனை ஆசிரியர் கடிந்துள்ளார்.

அமெரிக்கா திரைப்படத்துறையில் அடைந்துள்ள முன்னேற்றங்களைக் குறிப்பிட்ட ஆசிரியர் அங்கு நிலவும் 'எயிட்ஸ்' நோய் பற்றிய அச்சத்தையும் சுட்டியுள்ளார். பல துறைகளில் முன்னேறி வந்துள்ளநாடான அமெரிக்கா ஒழுக்கத்தில் (திரைப்படத்துறை) மட்டும் பின்தங்கியுள்ளது. ஆகவே அஞ்சத்தக்க நோய்கள் பெருகிவிட்டன என்பதைக் குறிப்பால் உணர்த்தியுள்ளார் ஆசிரியர்.

நினைவில் நின்ற அமெரிக்கப்பயணம் என்னும் பயண-நூல் பலதரப்பட்ட செய்திகளைத் தாங்கிவரும் சுவையான பயண நூலாகும். இஃது ஆசிரியர் டத்தோ தெ. சுப்பையா அவர்களின் நினைவில் நிற்பதோடு அன்றி ஒவ்வொரு வாசக-ரின் நினைவிலும் நிற்கும்.

## அஜந்தா அழைக்கிறது:

முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியன் தமிழ்நேசனின் ஆசிரியராக இருந்தவேளையில் தமிழ்நேசனில் பணியாற்றிய வி. விவேகானந்தனை இந்தியாவிற்கு அனுப்பி அவருடைய பயண அனுபவங்களைத் தமிழ்நேசனில் தொடர்கட்டுரையாக வெளியிட்டார். இக்கட்டுரைகள் 'அஜந்தா அழைக்கிறது' என்னும் நூலாக உருப்பெற்றுள்ளன.

அஜந்தா அழைக்கிறது என்னும் பெயரைக் கண்டதும் இந்தியப்பயணத்தைப் பற்றிய நூல் எனத் தெளிவாகக் கூறிவிடலாம். ஆயின் இந்நூலுள் ஆஸ்திரேலியா, சபா மற்றும் சரவா ஆகிய இடங்களுக்குச் சென்ற பயண அனுபவங்களும் விளக்கப்பட்டுள்ளன. இந்நூல் எழுத்தாளர் ஒருவரின் பயண அனுபவமாக விளங்குகிறது. அஜந்தா, எல்லோரா ஆகிய கலையழகுமிக்க இடங்களைக் கலையழகோடு வருணித்துள்ளார். பயண இலக்கியத்தின் பண்புகளைக் கொண்டிலங்குகிறது இந்நூல்.

## மதுரைக் கும்பாபிஷேகம்

பக்தியை மட்டும் அடிப்படை நோக்கமாகக் கொண்டு வீ. மீனுட்சிசுந்தரம் (துன் வீ. தி. சம்பந்தனின் சகோதரர்) அவர்கள் மேற்கொண்ட பயணத்தின் விளைவாகப் பிறந்தது மதுரைக் கும்பாபிஷேகம் என்னும் பயண நூல். ஒரு குட-முழக்கு விழா (கும்பாபிஷேகம்)வைக் காண்பது மிகவும் புண்ணியம் என்பது சமய உண்மை. இறைவன் புகழைப் பேசுவது; இறைவன் குடிகொண்டுள்ள கோவில்களைக் கண்டு வணங்குவது ஆகிய அனைத்தும் இறைவழிபாட்டில் மேற்கொள்ளப்படும் படிநிலைகளாம். இவை அனைத்திலும் கிடைக்கும் புண்ணியத்தை ஒரு குடமுழக்கு விழா ஈட்டித்-தரும் என்ற காரணத்தாலேயே குடமுழக்கு விழாவிற்கு அரிதின் முயன்று மக்கள் பெருந்திரளாகச் செல்வதுண்டு. இவ்வடிப்படையில் வரலாற்றுப் புகழ்மிக்க மதுரை மீனுட்-சியம்மன் கோவிலின் குடமுழக்கு விழாவில் பங்கேற்கச் சென்ற 'பெரியவர்' மீனுட்சிசுந்தரம் தம்முடைய பயண அனுபவங்களை மலைநாடு என்ற பத்திரிகையில் எழுதினுர். அக்கட்டுரைகளின் தொகுப்பே இந்நூலாகும்.

நூலின் பெயர் மதுரைக்கும்பாபிஷேகம் என்று அமைந்திருப்பினும் தமிழகத்தில் உள்ள சிறப்புப்பெற்ற பல புண்ணியத்தலங்களுக்குச் சென்ற அனுபவங்களையும் இந்-நூலில் பக்தியுணர்வோடு வெளிப்படுத்தியுள்ளார். முற்றி-லும் ஆன்மீக நோக்கமே இந்நூலில் விஞ்சி நிற்கிறது. ஒவ்-வொரு தலத்திற்கும் சிறப்புக்கள் என்ன காரணங்களினுல் உண்டாயிற்ருே அச்சிறப்புக்களையெல்லாம் மறவாது காட்டியுள்ளார். திருவாசகம், தேவாரம், திவ்யப்பிரபந்தம் ஆகிய பக்திப்பனுவல்களிலிருந்து பாடல்களை மேற்கோள்-காட்டித் தாம் சொல்ல விழைந்த கருத்தை அரண் செய்-துள்ளார் நூலாசிரியர்.

பயணநூலைப் படிப்போரின் சுவையுணர்வு குன்ருு-வண்ணம் மிக அழகாக, செறிவாகக் கருத்துக்களை எழுதி-

யுள்ளார் ஆசிரியர். ஆசிரியரின் எழுத்தாற்றலுக்கு இந்நூல் தக்க சான்றும். இதனாலன்றோ சிறந்த எழுத்தாளராகிய அகிலன் இந்நூலைப் பாராட்டினார்!

திருஞானசம்பந்தர் வரலாறு மற்றும் பல தல வரலாறுகளைக் கற்பனைநயங் கலந்து வாசகர் ஒவ்வொருவர் கண்முன்னேயும் அந்த வரலாறுகள் நடப்பது போலக் காட்டியுள்ளார் ஆசிரியர். இராமகிருஷ்ண மிஷனைப் பற்றிய தகவல்களை எழுதும்போது சுவாமி சித்பவானந்தா அவர்கள் மலாயாவருகையின்போது குறிப்பிட்டதை நினைவுகூர்ந்துள்ளார்.

> "நமது பொருளாதாரம், நமது வாழ்க்கை மணல் குவியல்மேல் கட்டப்பட்டது போலிருக்கிறது. நெருக்கடி என்னும் புயல் வந்தால் சிதறடிக்கப்படும். பலப்படுத்திக்கொள்ளக் கூட்டுறவு முறையில் தோட்டங்கள், வீடுகள் எல்லாம் வாங்கவேண்டும் எனத் தனது சுற்றுப்பிரயாண முடிவில் கோலாலும்பூர் அன்னை மகாமாரியம்மன் ஆலயத்தில் பேசியதும் அதைத் தொடர்ந்து மாதம் பத்து வெள்ளி சேர்த்து தேசிய நில நிதிக் கூட்டுறவு சங்கம் மலாயாவில் இந்தியர்கள் வாழ்விலேயே முதன்முறையாக புக்கிட் சீடிம் எஸ்டேட்டை வாங்கியதும் அந்தத் திறப்பு வைபவத்திற்கு சுவாமி சித்பவானந்தா வந்திருந்ததும் மறக்கமுடியா நிகழ்ச்சிகள்."24

இப்பகுதியின் மூலம் சமுதாய நன்மையில் சமயத்திற்கும் பெரும் பங்குண்டு என்னும் உண்மையை அழுத்தமாகத் தெரிவித்துள்ளார் ஆசிரியர். கூட்டுறவு முயற்சிக்குத் தம்மையே அர்ப்பணித்துக்கொண்ட குடும்பமன்றோ துன் வீ. தி. சம்பந்தனாரின் குடும்பம்! பெரியவரும் விதிவிலக்கல்லவே? ஆகவே கூட்டுறவு பற்றிய சித்பவானந்தர் கருத்தை நினைவுகூர்ந்துள்ளார்.

நகைச்சுவையோடும், வருணனை ஆற்றலோடும் எழுதிச்செல்லும் ஆசிரியர் உண்மைகளை - உள்ளது உள்ளவாறே காட்ட மறக்கவில்லை. ஆசிரியரின் நடுநிலை கொண்ட நல்லுள்ளத்திற்குக் கீழ்க்கண்ட பகுதியே சான்ருக அமைகிறது. சித்திரைப் பொருட்காட்சிக்குச் சென்று சில புத்தகக்கடைகளில் பெற்ற அனுபவங்களை எள்ளற் சுவைபட எழுதுகிருர்.

> "புறப்படும்போது எங்கள் கையில் ரஷ்ய நூல்களின் பட்டியல்கள் கொடுக்கப்பெற்றன. அவற்றை ஆகாயத்தில் பறக்கவிட்டு பிரச்சாரத்தின் உன்னத சக்தியையும், அதன் மயக்கும் தன்மையையும் எண்ணிச் சுதந்திர நாட்டில் கிடைக்கும் சுதந்திரப் பொருட்காட்சியில் இந்தியப் பட்டியல் கிடைக்கவில்லை. யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற பண்பாடு செல்லும் விசித்திரத் தன்மையை நினைத்து வருந்தி புரூட்னிக் குளிர்பானம் அருந்தி ஹோட்டல் மிட்லண்ட் திரும்பிேனம்."25

பயண அனுபவங்கள் எத்தகைய வாழ்க்கை உண்மைகளைக் கற்றுத் தருகின்றன என்ற உண்மையை எள்ளற்சுவையோடு, வேதனையோடு கூறியுள்ள ஆசிரியரின் திறம் பாராட்டிற்குரியது.

பக்திப்பரவசத்துடன் தொடங்கிய தமிழகப் புனிதப் பயணம் பக்தியுணர்வு என்ற தடத்தில் பிறழாது சென்று பக்தியுணர்வுடனே முடிகின்றது. மனித வாழ்வு எப்படி அமைய வேண்டும் என்ற சிந்தனையை வலியுறுத்தி முடிகிறது இந்நூல்.

> "ஓடும் பிறவிகள்; பன்றியைப் போல் இங்கு மண்ணிடைச் சேற்றில் படுத்துப் புரளாதே எனப் பாரதி பாடுகிருர். பன்றி பல பிறவிகளில் ஒன்று. அதன் வாழ்வு அதன் வேலிக்குள் அதன்

குட்டிகளுடன், உணவுடன், மலத்துடன் சேர்ந்து பின்னிப் பிறர் தின்பதற்கே உணவாகி அதன் காலத்தை ஓட்டுகிறது.

இத்தகைய வாழ்வை எல்லா மனிதப் பிறவியில் அனுபவிக்கலாம். அல்லது கட்டம் கட்டமாய் இத்தகைய பிறவிகளைத் தட்டிவிட்டு வணங்கத் தலை தந்த பிரானை, வாழ்த்த வாய் தந்த வள்ளலை அண்டி, இணங்க அவர் தந்த சீரடியாருடன் இணைந்து அணங்கொடு அணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற எம்பிரான் பொன்னடிப்புகழில் வாழலாம்."26

என உயரிய வாழ்வின் தத்துவத்தை உணர்த்தி நூலை முடிக்கிறார் ஆசிரியர்.

## உலகத்தமிழர்:

உலகத்தில் வாழும் தமிழர்களைப் பற்றி அறிய நமக்கு உறுதுணையாவது உலகத்தமிழர் என்னும் நூல். தமிழர்களைப் பற்றியும், அவர்களின் வாழ்க்கை முறைகள் பற்றியும், தமிழ்மொழி பற்றியும் மிகச் சிறப்பான முறையில் தகவல்களைத் திரட்டித் தந்துள்ளார். உலகநாடுகளுக்கு - தமிழர் வாழும் நாடுகளுக்குப் பயணமாகச் சென்று அரிய தகவல்களைத் தந்துள்ளார் ஆசிரியர் இர. ந. வீரப்பன். இந்நூல் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் சிறப்புப்பரிசைப் பெற்றது குறிப்பிடத்தக்க செய்தியாம்.

மலேசியத்தமிழர் என்ற நூலிலும் மலேசியாவின் பல்வேறு மாநிலங்களிலும் வாழும் தமிழர்களைப் பற்றிய அரசியல், சமுதாய, வரலாற்றுச் செய்திகளைத் திரட்டித்தந்துள்ளார் இர. ந. வீரப்பன்.

இவ்விரு நூல்களுள்ளும் உண்மையை உள்ளவாறே உரைப்பதும், தவறுகளைச் சுட்டிக்காட்டுவதுமாகிய நேர்மையான பண்புகளைக் காண்கிறோம். இர. ந. வீரப்பன் அஞ்சாமை மிக்க எழுத்தாளர். தாம் சொல்ல நினைத்தவற்றைத் துணிவுடன் சொல்பவர். இப்பண்புகளை மேற்கூறிய இரு நூல்களும் செவ்வனே வெளிக்காட்டுகின்றன.

இவ்விரு நூல்களும் பயணநூல்களா? என ஐயுறுவார் உண்டு. பயணநூல்களின் இயல்புகள் செவ்வையாய் இவ்விரு நூல்களுள்ளும் பொருந்தி உள்ளன. ஆகலின் இவை பயணநூல்களே! இவை தமிழர்களைப் பற்றி அறிய உதவும் பயணநூல்கள் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

## தமிழகப்பயணம்:

இந்நூல் அ. மருதமுத்து என்பவரால் எழுதப்பட்டது. மலேசியத் திராவிடக் கழகத்தின் பத்துதீகா கிளை இந்நூலை வெளியிட்டுள்ளது. இந்நூலின் நோக்கத்தை,

> "என் தமிழகப் பயணத்தில் நான் கண்டது பற்றி விரிவாகத் தொகுத்தளிக்க இயலவில்லை. தலைவர்கள், அறிஞர்கள், கலைஞர்கள் முதலியோருடனான சந்திப்புக்களுக்கே முக்கியத்துவம் கொடுத்துள்ளேன். என் பயணத்தின் முக்கியக் குறிக்கோள் அதுவே என்பதால்."27

என ஆசிரியர் தம் முன்னுரையில் கூறியுள்ளார். குறிப்பிட்ட இயக்கத்தின் பிரதிநிதியாகச் சென்று அங்கு தான் சந்தித்த பலரைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளமையால் இந்நூல் மலேசியத் திராவிடக்கழகத்தாருக்கு மிகவும் முக்கியமானதாக அமையலாம். பல இடங்களுக்குப் பயணம் சென்றாலும் அவற்றையெல்லாம் நாட்குறிப்பு எழுதுவது போலத் தொகுத்து வரிசைப்படுத்தி எழுதியுள்ளார். பயணநூலின் தன்மைகள் முற்றிலுமாக இந்நூலில் பொருந்தியுள்ளதாகக் கூறமுடியாது. இந்நூலின் தனிச்சிறப்பாகச் சுட்டிச் சொல்லத்தக்க பண்பு ஏதுமில்லை.

## போபாலில் கபீகபீ:

இப்பயண நூலின் ஆசிரியர் ஏ. சண்முகம். பத்திரி-கைத்துறையில் பணியாற்றியவர். பல பயணக் கட்டுரை-களின் ஆசிரியர். இப்பயணநூலே அவர் எழுதியதற்கான காரணம் சற்று புதுமையானது. பொதுவாகப் பயண நூலில் ஆசிரியர் தன் பயண அனுபவங்களே எழுதுவது இயல்பு; ஆயினும் ஏ.சண்முகம் அவர்களின் பயண அனுபவங்கள் வருங்காலத்தில் இந்தியா செல்பவர்களுக்கு எச்சரிக்கையாக அமையும் நோக்கில் எழுதப்பட்டுள்ளன. இதனைக் கீழ்க்-கண்டவாறு அவர் நூலின் முகவுரையில் குறிப்பிடுகிருர்.

> "குறிப்பாக இந்திய வம்சாவளியைச் சேர்ந்தவர்-களுக்குப் பெரும் செலவின்றி இயற்கையின் செல்வங்களேயும் புண்ணிய ஸ்தலங்களேயும் நிறைய வாரி வழங்குகின்றது பாரதம். இவற்-றைக் காணப் பணத்தையும் காலத்தையும் விர-யமாக்கிச் செல்லும் நம்மவர்களுக்கு அங்குப் பல சோதனேகளும் வேதனேகளும் சமயங்களில் ஏற்படுகின்றன. இதில் பாதிக்கப்பட்டவன் என்ற முறையில் என் அனுபவங்களே இந்-நூலில் எழுதியுள்ளேன். கெட்டதை மட்டும் எழுதவில்லே; நல்லதையும் எழுதுகிறேன். மலேசிய இந்தியர்கள் எதிர்காலத்தில் இந்தியா-வில் தடுமாருமல், ஏமாருமல், பத்திரமாகத் திரும்பவே இதை எழுதினேன்."28

நூலாசிரியர் மலேசிய இந்தியர்கள் மீது கொண்ட அக்கறை பாராட்டுதற்குரியதுதான். தான் ஏமாற்றப்பட்ட வேதனே-யால், ஆசிரியர் தன்னுடைய பயண அனுபவங்களே வாசகர்-களுடன் பகிர்ந்துகொள்கிருர். ஆயின் ஆசிரியர் மற்ருேர் உண்மையைச் சிந்திக்க மறந்துவிட்டார் போலும்!

ஆசிரியருடைய அனுபவங்களில் (தீமையானவற்றை) மட்டுமே கொண்டு வாசகர்கள் இந்திய நாட்டைப் பற்றித் தவருக மதிப்பிட்டுவிட்டால் அஃது ஓர் அண்டை நாட்டிற்கு - பெரிய நாட்டிற்கு அனைத்துக்கும் மேலாக இந்தியர்களின் தாயகத்திற்குக் கேடு பயப்பதன்ருே? ஆசிரியர் நல்லவற்றை ஆங்காங்கே சுட்டிச்சென்றிருப்பினும் தீமைகளைக் காட்டுவதே நூலின் முக்கியநோக்கமாக இருப்பதால் இந்நூல் பயணநூலுக்குரிய இலக்கணத்தை மீறியுள்ளது. ஒரு பயணநூலாசிரியர் அளவுக்கு மீறி ஒரு நாட்டைப் புகழ்வதோ அல்லது பழிப்பதோ முறையன்று. இந்த அளவுகோலைக்கொண்டு இப்பயணநூலை அளந்துபார்த்தால் நூலின் அடிப்படை நோக்கமே தவருனது அன்ருே?

ஆசிரியர் இந்நூலில் தான் ஏமாற்றப்பட்ட அனுபவங்களை மிக வெளிப்படையாகக் காட்டியுள்ளார். இத்தகு வெளிப்படைப்போக்கு எதிர்மாருன விளைவுகளை உருவாக்கும் என்பதை ஆசிரியர் மறந்தது ஏன்? பத்திரிகைத்துறையில் பணியாற்றும் ஆசிரியர் நயமாகக் குறைகளைக் காட்டியிருந்தால் இப்பயணநூல் பெரும் கண்டனத்திற்கு உள்ளாகியிராது. ஆயினும் ஆசிரியர் நல்லவற்றையும் சுட்டியுள்ளதால் பயணநூலின் தன்மை ஓரளவு அமைந்துள்ளது.

'கபீகபீ' என்ற இந்திச்சொல் 'எப்போதும்' என்னும் பொருளைக்குறிக்கிறது. இந்தியப் பயணநூல் என்பதை ஆசிரியர் 'போபாலில் கபீகபீ' என்ற தலைப்பின் வழியே சுட்டியுள்ளார். தலைப்பில் இந்திச்சொல்லை ஆசிரியர் கையாண்டிருப்பது வாசகர்களுக்கு ஆர்வத்தை ஊட்டவேண்டும் என்ற அடிப்படையிலா? அல்லது ஒரு நாட்டிற்குப் பயணம் செய்யும் முன்னர் அந்நாட்டு மொழியைப் பற்றி ஓரளவாவது தெரிந்து கொள்ளுங்கள் என்று மறைமுகமாக வேண்டுகோள் விடுப்பதற்கா? என எண்ணத் தோன்றுகிறது. தலைப்பே புதுமையானது!

நகைச்சுவையுணர்வு, ஒரு விதத் திகிலுணர்வு ஆகியவற்றுடன் வாசகர்களுக்கு இந்தியப்பயணத்தை அறிமுகப்படுத்துகிறுர் சண்முகம்.

ஏமாறுபவர்கள் இருக்கும்வரை ஏமாற்றுபவர்களும் இருப்பர் என்பது ஒரு மேனுட்டுப் பழமொழி. ஒரு சுற்றுப்பயணியை ஏமாற்றுவதனுல் அச்சுற்றுப்பயணி 'நம் நாட்டைப்பற்றி என்ன நினைப்பார்' என்பதை ஏமாற்றுபவர் மறந்துவிடுகிறுர். இதனுல் 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல' அந்நாட்டுமக்கள் அனைவரையும் தவருகக் கருத இடமுண்டாகிறது. ஆயின் உண்மையில் அந்நாட்டில் நல்லவர்களும் இருக்கத்தானே செய்கிறுர்கள்? பயணநூல் ஒரு கையேடாகத் திகழவேண்டும்! இந்நூலைப் பொறுத்தவரை இந்தியாவை ஏமாற்றுவித்தைகள் நிறைந்த நாடாகக் காட்டுவதே தலையாய நோக்கமாக இருக்கின்றது. தீமைகளைக் காட்டும் கையேடாக அல்லவா இந்நூல் எழுதப்பட்டுள்ளது?

## மேற்கோள் விளக்கம்

1. மு.வரதராசன், யான் கண்ட இலங்கை, முன்னுரை.
2. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், நூற்பா எண் -30.
3. எஸ். பி. எஸ். நாதன், நாதன் கண்ட நாடுகள், ப-8.
4. மேலது, ப-14.
5. சுப்பிரமணிய பாரதியார், தமிழகத் துணைப்பாட நூலில் இம்மேற்கோள் எடுத்தாளப்பட்டுள்ளது.
6. எஸ்.பி.எஸ். நாதன், நாதன் கண்ட நாடுகள், ப-27.
7. மேலது, ப-35.
8. மேலது, ப-42.
9. மேலது, ப-60.
10. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள்,ப-43.
11. திருவள்ளுவர், திருக்குறள் - 504,
12. எஸ்.பி.எஸ். நாதன், நாதன் கண்ட நாடுகள், ப-170.
13. மேலது, ப-174.
14. மேலது, ப-173.
15. மேலது, ப-215.
16. மேலது, ப-263.
17. மேலது, ப-323.
18. மேலது, ப-347.
19. மேலது, ப-359.
20. ஜே.ஜோன்சன், கிழக்கும் மேற்கும், ப-12.
21. மேலது
22. மேலது, ப-312.
23. மேலது, ப-279.
24. வீ.மீனுட்சிசுந்தரம், மதுரைக் கும்பாபிஷேகம், ப-80.
25. மேலது, ப-62.
26. மேலது, ப-114.
27. தெ. சுப்பையா, நினைவில் நின்ற அமெரிக்கப் பயணம், பக்-38-39.
28. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், ப-17.

# எழுத்துலகில் மங்கையர்

மலேசியாவில் அனைத்துத் துறைகளிலும் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமமாக முன்னேறி வருவதனை நாம் காண்கிறோம். எழுத்துத்துறை மட்டும் விதிவிலக்கல்லவே? மலேசியாவில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பெண்கள் கணிசமான அளவில் பங்காற்றி வருவது யாரும் மறுக்க இயலா உண்மையாகும். 'மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு' எனும் நூலை எழுதிய மா.இராமையா, இலக்கியத்தின் பல்வேறு துறைகளுக்கும் பங்கு ஆற்றிய பெண் எழுத்தாளர்களை வரிசையிட்டுக் காட்டியுள்ளார். ஆயின் அப்பெண்களுள் பலர் இன்று எழுத்துத்துறையினின்று விலகியுள்ளனர். புற்றீசல் போல விரைவில் தோன்றி மறைந்த பெண் எழுத்தாளர்களே இவண் அதிகமாக உள்ளனர். பன்மீன் நடுவண் பால்மதி போல, எப்பொழுதாவது தோன்றும் வானவில்லாகப், பன்னிரண்டாண்டுகட்கு ஒரு முறை மலரும் குறிஞ்சிமலர் போலத் தரமான பெண் எழுத்தாளர்கள் மிகச் சிலரே உள்ளனர். மலேசியப் பெண் எழுத்தாளர்கள் அதிகமான எண்ணிக்கையில் எழுத்துத்துறையில் ஈடுபடாமைக்கும், தொடர்ந்து எழுதாமைக்கும் பல காரணங்களைக் கூறலாம்.

1. திருமணத்திற்கு முன்பு ஆர்வத்தோடு எழுதிய பெண்கள் திருமணத்திற்குப் பின்னர் எழுத்துலகை மறக்க வேண்டிய கட்டாய நிலைக்குக் கொண்டுவரப்படுகிறார்கள். ஏனெனில் கணவனும், கணவன் வீட்டாரும் தடைக்கல்லாக அமைகின்றனர்.

2. மலேசிய இலக்கியத்துறை பத்திரிகைகளை நம்பியே வாழ்ந்து கொண்டிருக்கிறது. பத்திரிகைகள் எழுத்தாளர்களுக்கு எவ்விதமான ஊக்கத்தொகையோ அல்லது உதவித்தொகையோ அளிப்பதில்லை.

3. வாசகர்களின் ஆதரவும் ஒரு படைப்பாளருக்குத் தேவை. இந்நாட்டில் தமிழர்கள் இலட்சக் கணக்கில் இருந்தாலும் தமிழ்ப் பத்திரிகை வாங்கிப் படிப்போரின் எண்ணிக்கை மிகவும் குறைவு. இதனுல் வாசகர்களின் ஆதரவும் குறைகின்றது.

4. எழுத்தாளர்களின் எழுத்துப் படிவங்கள் நூல்களாக வெளியிடப்படுவது மிகவும் அருமை. நூல்களை விலைகொடுத்து வாங்கிப் படிப்பவர்கள் மிகவும் குறைவு. இதனுல் எழுத்தாளர்களின் ஊக்கம் குறைகிறது.

மேற்குறிப்பிட்டவாறு சிக்கல்கள் பல இருக்கும், இக்கட்டான சூழ்நிலையிலும் ஓரிருவரே எதிர்நீச்சலுடன் எழுதிவருகின்றனர். இத்தகையோருள் முதலிடம் பெறுபவர் ந.மகேசுவரி ஆவார்.

ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாக எழுதி வருபவர் ந.மகேசுவரி. தரமான எழுத்தாளர்க்குரிய பண்புகளை அவருடைய எழுத்துக்கள் வெளிக்காட்டுகின்றன. பொருளுக்காகவோ (வாணிப நோக்கில் பொருள் ஈட்டும் கருவி) புகழுக்காகவோ தான் கொண்ட கொள்கையினின்று சிறிதும் நழுவாமல் எழுதிவருபவர் மகேசுவரி. அதிகமான எண்ணிக்கையில் எழுதுவதனுல் மட்டும் எழுத்தாளர் தரமான எழுத்தாளராகி விட முடியாது என்பது நாம் நினைவில் கொள்ள வேண்டிய கருத்தாகும். எழுத்துக்களின் தரத்தை ஓர் எழுத்தாளர் கையாளும் கருப்பொருளைக்கொண்டும், அக்கருப்பொருளை வெளியிடும் உத்தி, பாத்திரப்படைப்பு, மொழிநடை போன்றவற்றைக் கொண்டும் மதிப்பிட வேண்டும். இவ்வடிப்படையில் மகேசுவரியின் கதைகளை மதிப்பிட்டால் அவை தரமானவை என்பது தெரியவரும்.

ந.மகேசுவரி இயற்பெயரில் மட்டுமின்றிப் புனைபெயர்களிலும் எழுதியவர். மலேசியத் தமிழ் இலக்கியத்தின் பல்வேறு துறைகளையும் தன் எழுத்துக்களால் வளப்படுத்திய-

வர். சிறுகதை, குறுநாவல், தொடர்கதை, சிறுவர் இலக்கியம் எனப் பல துறைகளில், மாங்கனி, மோகினி, மான் என்னும் புனைபெயர்களில் முத்திரை பதித்தவர். நேசன் எழுத்தாளர் பவுன் பரிசு, ஆதிநாகப்பன் பரிசு போன்ற பல பரிசுகளும், தங்கப் பதக்கங்களும் பெற்றவர். மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் இவரை அறிமுகப்படுத்தத் தேவையில்லை. அறியாதாரை அல்லவா அறிமுகப்படுத்த வேண்டும்? 'பூக்கடைக்கு விளம்பரம் தேவையில்லை' என்ற பழமொழிக்கு ஏற்ப ந.மகேசுவரியை அறிமுகப்படுத்த வேண்டிய அவசியமே இல்லை. 'தாய்மைக்கு ஒரு தவம்', 'புதிய வாரிசு', 'பிறந்த நாள்' ஆகியவை நூல் வடிவு பெற்ற எழுத்தோவியங்கள். ஒரு பொருளின் அழகும் கலையும் தெளிவுற விளங்கப் பின்னணி இன்றியமையாதது. அது-போல மலேசியப் பின்னணியில் சிறுகதைக் கலையின் அழகும், மகேசுவரியின் கைவண்ணமும் மெருகூட்டப்படு-கின்றன.

பெண்களுக்கும் குடும்பப்பொறுப்பிற்கும் உள்ள தொடர்பு உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை ஒத்தது. எனவே தான் 'மனைக்கு விளக்காகிய வாணுதல்' என்று குடும்ப விளக்காகப் பெண் கருதப்படுகிறாள். படித்-துப் பட்டம் பெற்றாலும், பணிபுரிந்தாலும் பெண் குடும்பத்-திற்காகவே சேவை செய்கிறாள். குடும்பத்தையும் பெண்ணை-யும் பிரித்துப் பார்க்க இயலாது. இரண்டும் ஒன்றுக்குள் ஒன்றாக ஐக்கியமானவை. மகேசுவரியும் இதற்குப் புறனடை-யாக மாட்டார். தன்னோடு ஒன்றிவிட்ட குடும்ப வாழ்வு, ஆசிரியப்பணி ஆகியவற்றையே கருப்பொருட்களாகக் கையாண்டுள்ளார். பதினெட்டுச் சிறுகதைகளைக் கொண்ட தாய்மைக்கு ஒரு தவம் என்னும் தொகுப்பில் இரண்டு கதைகள் தவிர எஞ்சிய அனைத்தும் குடும்பம் என்ற சுரங்-கத்திலிருந்து முகிழ்த்தவையே.

கருப்பொருள் அடிப்படையில் மகேசுவரியின் கதை-கள் குடும்பக் கதைகளாகவே அமைகின்றன. குடும்பத்தில் சாதாரணமாக நிகழும் நிகழ்ச்சிகளை நுட்பமான பார்வை-

யின் மூலம் பல கோணங்களில் கதைக்குக் களமாக்கிக் கொண்டவர். சில வாசகர்கள் மகேசுவரி குடும்பக் கதை-களையே எழுதுவதாகவும், இதனால் பயனில்லை என்றும் குறைகூறுவர். ஆனால் உண்மையில் மகேசுவரி இக்குற்றச்-சாட்டிற்கு உரியவரே அல்லர். ஏனெனில் குடும்பக்கதைகளை எழுதுவதன் மூலம் பல படிப்பினைகளைச் சமுதாயத்திற்கு வழங்குகிறார். குடும்பம் என்பது சமுதாயத்தின் ஓர் அங்கம்-தானே? ஒரு மாளிகைக்குப் பல வாயில்கள் இருப்பது போல சமுதாய மாளிகைக்குப் பல வாயில்கள் உண்டு. இவற்றுள் ஒன்றுதான் குடும்பம். ஆகவே மேலோட்டமாக, நுனிப்புல் மேய்வது போலப் படிப்பவர்களுக்கு மகேசுவரியின் கதை-கள் குடும்பக் கதைகளாகவும், பயனற்ற கதைகளாகவும் தோன்றலாம். உண்மையில் குடும்பக் கதைகளின் மூலம் சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் நல்ல படிப்பினை-களைப் புகட்டுகிறார் மகேசுவரி. மணியோடு இணைக்கப்பட்ட தங்கம் போல அவை அழகாக அமையக் காணலாம்.

> "புலன்களுக்கு இரை தந்து அவற்றைக் கிளர்ச்சி அடையச் செய்வதன்று இலக்கியம். மாறாக மனிதனிடத்தே அடங்கிக் கிடக்கின்ற நல்ல பண்புகளை ஓங்கச் செய்து, வாழ்க்கையைப் பற்றிய கண்ணோட்டத்தை விரிவுபடச் செய்-வதே இலக்கியம் என்று அழைக்கப்படும்"1

என்பார் ராபின் ஹூட் என்ற மேனாட்டறிஞர். இவ்வகை-யில் குடும்பத்தில் எழும் சிக்கல்களையும், அச்சிக்கல்களின் காரணத்தையும், சிக்கல்களையும் தீர்க்கும் முறைகளையும் காட்டியுள்ளார். மகேசுவரி குடும்பத்தைக் களமாக அமைத்-துக் கொண்டதினால் வீட்டு வாழ்வே நாட்டு வாழ்விற்கு அடிப்படை என்ற கருத்தை அவர் வலியுறுத்துகிறார்.

தமிழர்களின் முன்னேற்றத்தில் அக்கறை உள்ளவர் மகேசுவரி என்ற உணர்வு அவருடைய கதைகளைப் படிப்-வருக்குத் தெள்ளிதின் விளங்கும். வாய்ப்பும் வசதியும் வலிய

வந்து வீட்டுவாசலில் நின்ற போதும் அதை அடைய முடியாத துர்பாக்கியசாலிகளைக் (கைலாசம் என்ற சிறுவன், இதயம் அழுகிறது.) காட்டி இவ்வவல நிலைக்கு இரங்கி ஒவ்வொரு வாசகரின் உள்ளத்தையும் உருகி அழவைக்கிறார் மகேசுவரி. தமிழ்ச் சமுதாயத்தின் வறுமை நிலையை அவர் சில குடும்பங்களை உதாரணமாகக் காட்டுவதன் மூலம் விளக்குகிறார். அதிக எண்ணிக்கையில் குழந்தைகளைப் பெற்று அவதிப்படும் பெற்றோர்களைப் பாத்திரங்களாக்கி வறுமைப்பேய் தமிழ்ச் சமுதாயத்தை ஆட்டுவிக்கும் நிலையைப் புரியவைக்கிறார். சம்சு அரக்கனால் தமிழ்க் குடும்பங்கள் சீரழியாமல் இருக்கக் கல்வியே சிறந்த வழி எனப் பாதை காட்டுகிறார்.

மகேசுவரியின் சமுதாய உணர்வு வானவில்லின் வர்ண ஜாலங்களைப் போல ஆங்காங்கே அவருடைய கதைகளில் பளிச்சிடுகின்றன.

> "குடும்பச் சூழல், பெண் மன இயல்புகள், மனித மன உணர்வுகள், நமது பண்பாட்டுச் சிறப்புகள் ஆகியவற்றை எழுத்தில் வடிக்க வேண்டும்"2

என்ற எண்ணங்கொண்ட மகேசுவரி தன் படைப்புக்களையெல்லாம் தன்னுடைய கருத்துவெளிப்பாட்டிற்கு அல்லது எண்ணவெளியீட்டிற்கு ஓர் ஊடகமாகவே பயன்படுத்தியுள்ளார்.

பெண்கள்படும் துன்பங்களையும், மேனாட்டு நாகரிக மோகத்தால் பெண்கள் பாதிக்கப்படும் விதத்தையும், நமது பண்பாட்டைக் காப்பதில் பெண்களின் பங்கு என்ன என்பதையும் மகேசுவரி தன் கதைகளின் வாயிலாகச் சொல்லியுள்ளார். பெண்மையை அவர் படைத்துக்காட்டும் விதத்தினால் "பெண்கள் சமுதாயத்தின் கண்கள்" என்ற உண்மையை உணரலாம். சிறந்த தமிழ்ச் சமுதாயம் உருவாவது பெண்களின் கையில்தான் உள்ளது என்பது அவருடைய ஆழமான நம்பிக்கை. நல்ல குடும்பத்தை உருவாக்குவது

பெண்ணின் கையில்தான் உள்ளது என்பதை உணர்ந்து செயல்பட்டால் நம் சமூகம் பிழைத்துக் கொள்ளும். இவ்வுணர்வுடன் பெண்ணை வளர்க்க வேண்டும், வாழ்க்கையில் எல்லாவிதமான நிலைகளையும் எதிர்கொள்ளுமாறும்; பிறர் கையை எதிர்பார்க்காது வாழும் தன்னம்பிக்கையும், தன்மானமும் உடையவர்களாகவும் வளர்க்க வேண்டும். உத்தியோகம் பார்ப்பதற்காக மட்டும் பெண்ணைப் படிக்க வைக்காமல், குடும்பத்தை நிர்வகிக்கும் திறமைசாலியாகவும், நல்ல அறிவுள்ள குழந்தைகளை உருவாக்க வேண்டிய தாயாகவும் பெண்ணை வளர்க்க வேண்டும் என்பன போன்ற அறிவுரைகளை அவருடைய கதைகளில் காணலாம்.

குடும்ப வாழ்வில் குழந்தைகள் பெறுமிடம் சிறப்புவாய்ந்தது. வான்புகழ் வள்ளுவரும் மனைமாட்சிக்குக் காரணம் மக்கட்பேறென்பர். மகேசுவரி குழந்தைச் செல்வத்தின் அருமையைக் 'குழந்தையெனும் தெய்வீகம்', 'நான் அழுகிறேன்' என்ற இரு கதைகளில் கூறுகிறார். குழந்தையும் தெய்வமும் ஒன்றென்பதைக் குழந்தை எனும் தெய்வீகம் காட்டுகிறது. பிச்சை எடுக்கும் கருவியாகக் குழந்தை பயன்படுத்தப் படுவதைக் கண்டு குழந்தைக்காக ஏங்கும் பெண் வருந்துவதை நான் அழுகிறேன் என்ற கதையில் காணலாம். 'பிரார்த்தனைகள்', 'தாய்மைக்கு ஒரு தவம்' எனும் சிறுகதைகள் குழந்தையில்லாத் துன்பத்தைப் பேசுவன. குழந்தை வளர்ப்பில் உள்ள சிக்கல்கள் கணவன் - மனைவி உறவில் விரிசல்களை ஏற்படுத்துவதையும், இவ்விரிசலை மறைத்து இருவரையும் இணைக்கும் பாலமாகக் குழந்தை இருக்கும் நிலையையும் 'இனம் புரியாத இடைவெளி' என்ற சிறுகதை சித்திரிக்கிறது. ஒரு குழந்தை எத்தனை கதைகளுக்குக் காரணமாகிறது பாருங்கள்!

சமுதாயத்தின் மேல்மட்டத்திலுள்ள குடும்பப் பிரச்னைகளையும் மகேசுவரி கதைக் கருக்களாகப் பயன்படுத்தியுள்ளார். இக்குடும்பங்களில் நாகரிகம் என்ற பெயரால் நடக்கும் ஒழுக்கக்கேடுகளைக் காட்டுவன 'நகருக்குள் ஒரு நரகம்', 'உனக்காக ஒரு நெஞ்சம்' ஆகிய கதைகள். இக்கதை-

களில் மது குடிப்பதையும், பிறர் மனைவியை விரும்புவதையும் மேல்மட்ட நாகரிகமாகக் காட்டியுள்ளார்.

பொதுவாக வயது வந்த பெண்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப் பற்றிய படிப்பினைகளைக் கொண்ட கதைகள் 'கண்ணீர் சிந்தும் கனவுகள்', 'விரல் அசைகிறது விபரீதம் விளைகிறது' என்பன. தாயில்லாத குடும்பம் சீரழியும் என்பது முன்னோர் வாக்கு. தாயில்லாத குடும்பத்தில் மூத்த பெண் தாயைப் போலவே சேவை செய்கிறாள். திருமணத்துக்குப் பிறகு அவளுக்குத் தன் உடன்பிறப்புக்களைப் பிரிய மனமில்லை. அன்பில்லாத கணவனைவிடப் பாசம்மிக்க, உடன்பிறப்புக்களே மேல் என எண்ணும் பெண்ணின் வாழ்வைப் பேசுவது 'உடன்பிறப்பு'.

குடும்பத்தில் ஆணுக்குரிய கடமைகள் சில. பெண்ணுக்குரிய கடமைகள் சில. இதனை மறந்து குடும்பப் பொறுப்புக்கள் அனைத்தையும் பெண்ணின் தலையில் சுமத்துவது குடும்பத்தினை அவதியுறச் செய்வதாம். கணவன்மார்களின் பொறுப்பற்ற தன்மையால் அவதியுறும் நிலைமையை 'உனக்காகவே அம்மா' என்ற கதை படம்பிடித்துக் காட்டுகிறது. நல்ல மனைவியின் பங்கையும், குடும்பப் பொறுப்புணர்ச்சியையும் காட்டுவது 'அந்தரங்கம் அவளோடு தான்'. வீட்டிலிருந்தவாறே தையல்வேலை செய்து கணவனோடு ஒத்துழைக்கும் பெண்ணைச் 'சின்னஞ்சிறு குடிசையிலே' என்ற கதையில் காணலாம். பிறருக்குக் கேடு நினைத்தால் அக்கேடு தனக்கே வரும் என்ற கருத்தை அடிப்படையாய்க் கொண்டது 'அறுவடை'. ஒருவர் செய்த கேடு, அக்குடும்பத்திலுள்ள மற்றொருவராலேயே அறுவடை செய்யப்படுவதனை 'அறுவடையில்' காணலாம்.

மன வளர்ச்சியில்லாத பெண் மீது ஓர் ஆடவன் காட்டும் பரிவையும் நன்றி உணர்வையும் வெளிப்படுத்துவது 'வழி பிறக்கத் தைபிறக்கும்' என்ற கதை. திறமை இருந்தும் கல்வியைத் தொடர இயலாது பிஞ்சிலேயே குடும்பப் பொறுப்பைச் சுமக்கும் ஏழை மாணவனின் கதை 'இதயம்

அழுகிறது'. இக்கதை மகேசுவரியின் ஆசிரியப் பணியின் வெளியீடு.

மகேசுவரி சாதாரணக் குடும்ப நிகழ்ச்சிகளேச் சிறு-கதை ஆசிரியருக்கே உரிய கூர்மையான, அவசரமற்ற பார்வையுடன் நோக்கி உள்ளார். 'சிறுகதை எழுதுதல் தந்தத்திஞல் செய்யப்பட்ட ஒரு பொருளில் சிற்ப வேலே செய்வதுபோல' என்ற அகிலனின் கருத்திற்கேற்பச் சிறு-கதைகளே எழுதியுள்ளார் மகேசுவரி. விறுவிறுப்பான தொடக்கங்களுடனும், பாத்திரங்களின் உரையாடல்கள் வழியாகவும், ஆசிரியரே கதை கூறிச் செல்வது போலவும் இவருடைய கதைகள் விளங்குகின்றன. சிறுகதையின் இலக்கணங்களுள் ஒன்று சிறுகதையில் சிக்கல் அவிழ்ந்த-வுடன் கதை முடிந்துவிட வேண்டும். கதை முடிவில் கால நீட்சிகூடாது என்பது. இவ்விலக்கணம் சரிவரப் பொருந்தி-யவை மகேசுவரியின் கதைகள். இவர் கதைகளுக்குத் தலேப்-புகள் கொடுத்திருப்பது கவிதை வரிகள் போல அமைந்துள்-ளமை பாராட்டுதற்குரியது.

தமிழ்ச் சமுதாயத்தில் பெண்ணே குடும்பப் பொறுப்-புக்களே நிர்வகித்து வரும் மரபு உள்ளது. இம்மரபு இவரு-டைய சிறுகதைகளில் பின்பற்றப்படுகிறது. இவருடைய கதைமாந்தர்கள் படிப்பவர் உள்ளங்களே விட்டு அகல்வ-தில்லே. உடன்பிறப்பில் வரும் கனகா, தன் கணவனே மேன-கா என்ற மற்ருெரு பெண் ஏமாற்றி அவனே அவமானப்-படுத்தும்போது, கணவன் மீது சுமத்தப்பட்ட பழியைத் துடைக்கும் 'நவீன காலக் கண்ணகியாகக்' காட்சி தரும் சாந்தி போன்ற பெண் பாத்திரங்கள் பெண்குலத்துக்குச் சீரிய எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றனர்.

மலேசியாவில் விழா என்ற பெயரில் நடக்கும் கேலிக் கூத்துக்களேயும் அம்பலப்படுத்துகிருர் மகேசுவரி. எதற்குத்-தான் விழா நடத்துவது, யார்தான் பேசுவது? எப்படி விழா நடத்துவது? என்ற வரம்பு ஏற்படாத வரை நம் சமூகத்திற்கு விமோசனமே கிட்டப்போவதில்லே. உண்மையிலேயே

சமுதாயப்பணி செய்ய விழையும் பெண்களுக்குக் கணவரும், குடும்ப உறுப்பினர்களும் ஒத்துழைப்பு நல்க வேண்டும் என விழைகிருர் மகேசுவரி. மனத்திண்மையும், வாய்மையும் பெண்களிடம் இருந்தால் பெண்கள் திசை மாறிச் செல்ல முடியாது என்பது மகேசுவரியின் துணிபு.

*"சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்*
*நிறைகாக்கும் காப்பே தலே"3*

என வள்ளுவர் கூறியாங்கு, பெண்களுக்கு மனக்காவலே மிகவும் இன்றியமையாதது; புறக்காவல் தேவையற்றது என்று வலியுறுத்தும் போக்கை 'புதிய வாரிசில்' காணலாம். நேர்மையான சமூகசேவகிகளே அவதூறு பேசுபவர்களே நோக்கி மனங் குமுறுகிருர் ந.மகேசுவரி.

*"எதிரிகளே விரட்டியடிக்க வில்லும் வாளும் ஏந்தி நின்ற வீரப்பரம்பரை! இன்று நாக்கை மட்டும் தீட்டிக்கொண்டு காத்திருக்கிறது சொல்லாலடிக்க"4*

நாவல், சிறுகதைகளின் தரத்திற்குக் கருப்பொருளேக் காட்டிலும் மிக முக்கியமான காரணமாக அமைவது பாத்திரப்படைப்பாகும். மகேசுவரி படைத்துக் காட்டும் பெண்பாத்திரங்கள் பலதரத்தினர்; பல நிலேயினர். பண்பாட்டுச் சிந்தனே மிகுதியும் உடையவர் மகேசுவரி என்பதால் அவருடைய பெண்மாந்தர்கள் தமிழ்ப் பண்பாட்டைக் காப்பதில் கண்ணும் கருத்தும் உடையவர்கள். மொழியுணர்வு, சமய உணர்வு ஆகியவற்றைக் காக்க வேண்டும்; அவ்வாறு காக்க வேண்டியது பெண்களின் கடமை என்ற உண்மையை மகேசுவரியின் பாத்திரங்கள் உணர்த்துகின்றன. இப்பண்பிற்கியைய மகேசுவரியின் படைப்புக்கள் இலங்குகின்றன. "மக்கட் கூட்டத்தின் புறநாகரிகத்தை வரலாறு விளக்க அகப்பண்பை இலக்கியம் காட்டுகிறது"5 என்பர் ஹட்சன்.

மலேசியத் தமிழ்ச சமுதாயத்தினரின், குறிப்பாகப் பெண்களின் அகப்பண்பை மிகுதியும் பிரதிபலிக்கின்றன மகேசுவரியின் கதைகள். மகேசுவரி பெண்பாத்திரங்களுக்கு அதிக அழுத்தம் கொடுத்துப் படைத்திருப்பதற்கு அவருடைய குறிக்கோள் (எழுத்துத் துறையில் மகேசுவரியின் கோட்பாடு) காரணமாக அமைகிறது. இதனுல் ஆண்வர்க்கத்தின் மீது வெறுப்புக் கொண்டு ஆண்களைப் பழித்து எழுதுபவர் என்பது பொருளன்று. குடும்பம் என்பது நாம் எளிதாக நினைக்கக் கூடிய இடமன்று; குடும்பத்தினரின் பொறுப்புக்கள் மிக அதிகம் என்ற உண்மையை உணர்த்தவே பலவிதமான குடும்பச் சிக்கல்களைப் பலவிதமான பெண்கள் மூலம் காட்டுகிருர். சுருங்கக் கூறின் பாத்திரப் படைப்பும் கருத்துச் செறிவும் பின்னிப் பிணைந்துள்ள போக்கை மகேசுவரியின் கதைகள் தெளிவாக்குகின்றன.

சமுதாயச் சிந்தனையோடு எழுதும் தமிழகப் பெண் எழுத்தாளர்கள் சிலர் மொழிநடையைப் பற்றி அக்கறை காட்டுவதில்லை. ஆங்கிலக்கதையா அல்லது தமிழ்க் கதையா? என்று எண்ண வைக்கும் அளவிற்கு ஆங்கில மொழியை வலிந்து புகுத்துவதைக் காண்கிருேம். ஆங்கில மொழி போலவே வடமொழிக் கலப்பையும் அதிகம் காணலாம். ஆனுல் மலேசியாவில் மொழித் தூய்மையைப் பேணுவதில் அக்கறை கொண்ட எழுத்தாளர்களுள் மகேசுவரியும் ஒருவர் எனத் தயங்காது கூறலாம். தமிழுணர்வு மிக்க தமிழாசிரியையாக விளங்குவதால் மகேசுவரி மொழித் தூய்மையைப் பேணியுள்ளார். ஓரிரு மலாய்ச் சொற்களும், ஆங்கிலச் சொற்களும் தவிர்க்க இயலாமல் இடம் பெறுகின்றன. "தமிழில் பிற மொழிச் சொற்களைச் சேர்ப்பதால் தமிழ் தன் இனிமை இழந்து போவதோடு, பல தமிழ்ச் சொற்களும் வழக்கில் இல்லாது இறந்து போகின்றன"5 என்னும் மறைமலையடிகளின் கருத்தை நினைவுபடுத்திக் கொண்டு மகேசுவரியின் படைப்புக்களைப் படித்தால் அவை மொழிநடையில் தூய்மையுடன் விளங்குவது அறியவரும்.

தரமான பெண் எழுத்தாளரான, எழுத்துலகில் நெடுநாட்களாக எழுதிவருபவரான ந. மகேசுவரி தமிழகத்தில் குடும்பக் கதைகளை எழுதிப் புகழ்பெற்ற லெஷ்மியுடன் ஒப்பிடத்தக்கவர். குடும்பம் என்ற குறுகிய வட்டத்திற்குள் இருக்கும் பெண்கள் சமுதாயத்தைப் பரந்த அளவில் பார்க்கக் கூடியவர்கள் என்ற உண்மையை மகேசுவரியின் படைப்புக்கள் நிறுவுகின்றன. அண்மையில் "டத்தோ ஆதிநாகப்பன் பரிசு " மலேசியத் தமிழ்ச் சிறுகதைத் துறையில் மகேசுவரி ஆற்றிய பங்கினை நினைந்து கொடுக்கப்பட்டது. ஆயின் மகேசுவரியை மலேசியத் தமிழ் இலக்கிய உலகம் மிகவும் காலந்தாழ்த்தியே கௌரவிக்கிறது. இவ்வெழுத்தாளர் எப்பொழுதோ கௌரவிக்கப்பட்டிருக்க வேண்டியவர் என்பது யாராலும் மறுக்க இயலா உண்மை. மகேசுவரி எண்ணற்ற சிறுகதைகளைப் படைத்திருப்பினும், மலேசியத் தமிழ்ச் சிறுகதைக்கு மட்டுமின்றிப் பிறதுறைகளுக்கும் உரமூட்டியவர். அவருடைய இலக்கியப் பணி 'சிலைமேல் எழுத்தாக' நிற்கவல்லது!

## ந.மகேசுவரியின் சிறுகதைகள்

### தமிழ்நேசனில் வெளிவந்தவை

| எண். | சிறுகதைத்தலைப்பு | நாள் |
|---|---|---|
| 1. | எழுத்தாளரின் மனைவி | 27.7.58 |
| 2. | முடிவும் துவக்கமும் | 16.9.62 |
| 3. | கதவருகே காத்துநின்றபோது | 23.9.62 |
| 4. | சூழ்ச்சி | 21.10.62 |
| 5. | பெண்களே இப்படித்தானா? | 25.11.62 |
| 6. | நிறைவு | 21.4.63 |
| 7. | சென்றவன் வந்தான் இருந்தவன் எங்கே | |
| 8. | உறவாடும் நெஞ்சங்கள் | |
| 9. | வாட்சன் ரோட்டிலே | |
| 10. | திருப்பம் | 12.7.64 |
| 11. | ந.மகேசுவரி எழுதிய கதை | 7.3.65 |
| 12. | கதையைக் கேட்டதும் | 7.3.65 |
| 13. | அவளும் சிரித்தாள் | 9.5.65 |
| 14. | பெண்ணாகப் பிறந்துவிட்டால் | 15.5.65 |
| 15. | பணத்தோடு போனவன் | 3.4.66 |
| 16. | அன்பே பாவமா? | 6.8.67 |
| 17. | சிவப்பு விளக்கு எரிகிறது(சிறப்பு மலர்) | |
| 18. | மனம் கனியாதா? (தீபாவளி மலர்) | |
| 19. | சிந்தை நினைக்கக் கண்ணீர் பெருகி | |
| 20. | சித்திரை நிலவு | - |
| 21. | உனக்காகவே அம்மா | 27.5.73 |
| 22. | சொல்லித் தெரிவதில்லை | .6.73 |
| 23. | நகருக்குள் ஒரு நரகம் | 1..7.73 |
| 24. | இனம்புரியாத ஓர் இடைவெளி | 12.8.73 |
| 25. | இதயம் அழுகிறது | 2.9.73 |
| 26. | அந்தரங்கம் அவளோடு | 15.2.76 |
| 27. | நான் அழுகிறேன் | 18.4.76 |

28. சின்னஞ்சிறு குடிசையிலே 1.10.78
29. வழிபிறக்கத் தை பிறக்கும் 14.1.82
30. சிந்தனையில் ஒரு சிலிர்ப்பு 1.6.86

புனைபெயரில் எழுதியவை

மோகினி என்ற பெயரில் எழுதியவை (மர்மக்கதைகள்)

31. நடுநிசியில் ஒரு நங்கை 1966
32. நள்ளிரவில் வந்தவள் 1966
33. வெள்ளிக்கிழமை விடியும் வேளை 22.5.66
34. போகுமிடம் வெகுதூரமில்லை 16.10.66

மாங்கனி என்ற பெயரில் எழுதியவை (காதல் கதைகள்)

35. துணைக்கு வந்தவன் 5.11.67
36. குறும்புகள் ஏனோ என்னிடம் 13.11.67
37. பொல்லாத புன்சிரிப்பு -
38. அடுத்த வீட்டுப் பெண் 3.12.67
39. அன்பே நீ மட்டும் என்னை 4.1.76
40. கனியே தேனே கதவைத்திற 2.5.76
41. உனக்கும் எனக்கும் -
42. ராதையின் நெஞ்சமே -
43. கண்ணா மனம் கல்லோ? -

மான் என்னும் பெயரில் எழுதிய சிறுவர்கதைகள்

44. தண்டனை 27.4.63
45. மணி செய்த உதவி 1963
46. சர்க்கஸ் பையன் 1963
47. ஹங்துவா பதக்கம் 1963
48. வெள்ளம் 1963

தொடர்கதைகள்

49. மூங்கில் மரக்காடு (நேசன் சிறுவர் மலர்)
50. மனக்கோவில் உனக்காகவே (குறுநாவல்)
51. நீ வரவில்லையெனில் (குறுநாவல்)

## மற்ற இதழ்களில் வெளிவந்தவை

51. திருப்பம் (முதல் கதை) ஜனோபகாரி
52. பெண் மனம் ஜனோபகாரி
53. விடிவு வெற்றி
54. அன்பின் இதயத்திலே வெற்றி
55. புதுவாழ்வு மலைநாடு 21.8.59
56. வாழவில்லை (முடிவு இல்லை) மலைநாடு
57. கனவு மலைநாடு
58. புத்தகப் பைத்தியம் மலைநாடு
60. அன்புப் பரிசு மலைநாடு
61. அலை பாயும் மனம் மலைநாடு
62. நீயும் ஒரு பெண்ணல்லவா?மலைநாடு (ஆண்டு மலர்) 1961
63. எழுதாதே இந்தியன் மூவி நியூஸ்
64. மறவேன் உன்னை "
65. நான் வரமாட்டேன் "
66. உனக்கே சொந்தம் உறுதி "
67. தாய்மைக்கு ஒரு தவம் "
68. கண்ணீர் சிந்தும் கனவுகள் "
69. உறங்கிக் கொண்டிருக்கிறாள் ஒரு தாய் உதயம் (ஆகஸ்டு 1973)
70. கண்ணீரும் புன்னகையும் உதயம்
71. துப்பறிகிறாள் ஒரு தோழி உதயம்
72. விரல் அசைகிறது விபரீதம் விளைகிறது உதயம் (ஜனவரி 1974)

73. உள்ளத்தால் நெருங்குகிறேன் உதயம்
74. நான்தான் மாமா உதயம்
75. யாருக்காக மறைந்தாள்?
(தமிழர் திருநாள் பரிசுபெற்றது) தமிழ் முரசு
76. ஏழை நெஞ்சம் தமிழ் முரசு
77. ஏழையின் காணிக்கை தமிழ் முரசு
78. உயிர்த்துடிப்பு தமிழ் முரசு
79. ஊருக்கு ஒரு பிள்ளை தமிழ் முரசு
80. உனக்காக ஒரு நெஞ்சம் தமிழ் முரசு
81. மனம் மாறியது (மெர்டேக்கா மலர்)
82. ஜெயந்தி (காதலைத் துறந்த கன்னி - சிறுகதைத் தொகுப்பு) ஏப்ரல் 1963
83. கௌரவம் தமிழ் மலர்
84. உடன் பிறப்பு தமிழ் மலர்
85. வீதியில் ஒரு விநோதம் தமிழ் மலர்
86. என்ன தவம் செய்துவிட்டேன் தமிழ் மலர்
87. கட்டுப்பாடு புதிய சமுதாயம்
88. அறுவடை புதிய சமுதாயம்
89. பிரார்த்தனைகள் புதிய சமுதாயம்
90. தனிமரம் பொன்னி (ஆண்டு மலர்)
91. பால் மரம் பொன்னி
92. ஹலோ! ஹலோ! பருவம்
93. மூட்டிய நெருப்பு பருவம்
94. பிறந்தநாள் பரிசு திருமகள்
95. சந்தியாவின் கௌரவம் திருமகள்
96. பெரியப்பா வந்தார் திருமகள்
97. விமலாவின் நாய் திருமகள்
98. கோரேங் பீசாங் திருமகள்
99. திருடாநே திருமகள்
100. குழந்தையெனும் தெய்வீகம் பக்தி
101. அம்மன் அருள் பக்தி
102. சிறகு முளைக்கு முன்னே (சிறுகதைத்தொகுப்பு)
103. ஆதார சுருதி
104. வழி பிறந்தது
105. தெளிவு

106. பிஞ்சு மனம்
107. புதுமைப்பெண் (முதல் பரிசு பெற்றது)
108. நன்றி நிறைந்தது — சிங்கை வானொலி
109. பாசமும் பரிவும் — சிங்கை வானொலி
110. உறவாடும் விழிகள் — சிங்கை வானொலி
111. துணையாக வந்தவன் — சிங்கை வானொலி
112. சித்திரைத் திருநாள் — சிங்கை வானொலி
113. வீட்டுக்கு வந்த மருமகள் — சிங்கை வானொலி
114. உள்ளம் கவர்ந்தவள் — சிங்கை வானொலி
115. இணைந்த உள்ளங்கள் — சிங்கை வானொலி
116. கற்பனையும் காரிகையும் — சிங்கை வானொலி (நாடகம்)
117. அம்மா — சக்தி

### தொடர்கதைகள், நாவல், கட்டுரைகள்

1. மூங்கில் மரக்காடு — தமிழ் நேசன், சிறுவர் மலர்
2. பட்டால்தான் தெரியும் — தமிழ் முரசு, மாணவர் மணி மன்றம், 1968
3. மனக்கோவில் உனக்காகவே (குறுநாவல் - தொடர்) — தமிழ் நேசன், 1965
4. நீ வரவில்லையெனில் (நாவல் - தொடர்) — தமிழ் நேசன், 1969
5. கனவுகள் பலகோடி (நாவல் - தொடர்) — புதிய சமுதாயம், 1977
6. புதிய வாரிசு (நாவல்) — வானம்பாடி வெளியீடு
7. திருவள்ளுவர் கூறும் மகளிர் (கட்டுரைத் தொடர்) — தமிழ் நேசன், 1968
8. எழுத்துலகில் மலேசியப் பெண்கள் (கட்டுரைத் தொடர்)
9. செண்பகம் — மாணவர் உலகம்
(இடையில் புத்தகம் நிறுத்தப்பட்டு விட்டது)

10. விழியோரத்துக் கனவுகள் — புதுமலர் (தமிழகம்), 1983

(இதழ் நிறுத்தப்பட்டதால் கதை நிறைவு பெறவில்லை)

## கட்டுரைகள்

1. சமையல் கலை
2. தமிழுக்கு ஒரு நீதி
3. நீதிக்கொரு தமிழ்
4. இப்படியும் சில!
5. நகைபோட்டு நாமே
6. எது நாகரிகம்?
7. சைவ சமயப்பணியில் மகளிர்
8. எழுத்துலகில் பெண்கள்
9. சமுதாயத்தில் பெண்கள்
10. சமூகப் பணியில் பெண்களின் ஈடுபாடு
11. நமது சமுதாயமும் பெண்களும்
12. திருவள்ளுவர் கூறும் மகளிர் - தொடர்
13. எழுத்துலகில் மலேசியப் பெண்கள் (தொடர்) பொன்னி
14. அழகுக்கலை (மலேசிய வானொலி - தொடர்)

## பாவை

ஒரு நாட்டு விடுதலைக்கும் அந்நாட்டு இலக்கிய வளர்ச்சிக்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. நாட்டின் விடுதலைக்குப் பாடுபடும் எழுச்சிப் போராட்டமே நாட்டின் இலக்கிய எழுச்சிக்கும் வழிகோலுகிறது. மலேசியாவுக்கும் இக்கூற்று முற்றிலும் பொருந்துவதே. மலேசியத் திருநாட்டின் விடுதலை மலேசியத் தமிழ் இலக்கியத்துக்கும் விடிவெள்ளியாக அமைந்தது. மலேசியத் தமிழ் இலக்கியத்தின் ஒவ்வொரு துறைக்கும் இது பொருந்தும். ஆயின் மலேசியத் தமிழ்க் கவிதைத் துறையும், சிறுகதைத் துறையும் மிக விரைவாக வளர்ந்தன. "ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ" விடுதலை உந்துசக்தியாய் அமைந்ததைப் போலவே எழுத்துத்துறையிலும் ஈடுபட வாய்ப்புக்களை வழங்கியது. பெண் எழுத்தாளர்கள் தமிழகத்தைப்போல அதிக எண்ணிக்கையில் இல்லை என்றாலும் சில தரமான பெண் எழுத்தாளர்கள் மலேசியத் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்துகின்றனர். அன்னாருள் ஒருவரே பாவை. இவர் பாவையர் விரும்பிப் படிக்குமாறு பல கதைகளை எழுதியவர். பல்லாண்டுகளாகப் (இருபது ஆண்டுகட்கும் மேல்) படைப்பிலக்கியங்களை உருவாக்கி மலேசியத் தமிழ் இலக்கிய உலகிற்கு வழங்கியவர்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர்களில் பெரும்பான்மையோர் ஓய்வு நேரங்களில் எழுதுபவர்களே. பொன்னுக்கும், புகழுக்கும் மயங்கும் எழுத்தாளர் மத்தியில் அத்திபூத்தாற்போலப், பொருளையோ புகழையோ ஒரு பொருட்டாகக் கருதாது, இலக்கிய உணர்வுடன் எழுதி வரும் எழுத்தாளர்கள் சிலருள் பாவையும் ஒருவர். ஞானப்பூக்கள் என்ற சிறுகதைத் தொகுப்பின் வழி இவருடைய எழுத்துத் திறமையை அறியலாம். இவருடைய படைப்புக்கள் பெரும்பாலும், மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு ஆதார சுருதியாக-ஜீவநாடியாக விளங்கும் பத்திரிகைகளில் வெளிவந்தவையே. "பன்றி பல ஈன்றும் பயனில்லை; யானை ஒரு கன்றீன்றாலும் பயனுண்டு"6 என்ற முதுமொழி போலப் பல

நூல்களை வெளியிடாவிட்டாலும் கூட, அவருடைய "ஞானப்பூக்கள்" என்ற ஒரு சிறுகதைத் தொகுதியே மலேசியத் தமிழிலக்கிய உலகில் மிகச் சிறப்பான ஓரிடத்தைப் பாவைக்குப் பெற்றுத் தந்துள்ளது. இத்தொகுதியுள் உள்ள பன்னிரண்டு கதைகளும் முத்தான கதைகள். இவை மலேசியத் தமிழ் இலக்கியத்தின் சொத்து! பரிசுகள் பல பெற்ற பாவை இவர்! அண்மையில் மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவையினர் நடத்திய சிறுகதைப் போட்டியில் மூன்றும் பரிசு பெற்றவர். "சுமையாகும் சொந்தங்களைக்" காட்டி இலக்கிய ஆர்வலர்களுக்குச் சொந்தமானவர்.

**பெண் எழுத்தாளர் படைப்புக்களில் சமுதாய உணர்வு**

பொதுவாகப் பெண் எழுத்தாளர்கள் தாங்கள் சார்ந்திருக்கக்கூடிய சூழ்நிலைகளை ஒட்டியே படைப்பிலக்கியங்களை உருவாக்குவர். பெண் குடும்பம் என்ற குறுகிய வட்டத்துக்குள் இருப்பதால் குடும்பப் பின்னணியில் பின்னப்பட்ட கதைகளை எழுதுவது பெண் எழுத்தாளர்களின் பொதுப்பண்பாகும். ஆயினும் சமுதாயம் என்ற பெருமரத்தின் ஒரு கிளையன்றோ குடும்பம்? குடும்பத்தைச் சித்திரிப்பதன் வழி சமுதாயத்தின் ஒரு பிரிவைச் சித்திரிக்கின்றனர். ஆகவே பெண் எழுத்தாளர்களின் படைப்புக்களில் சமுதாய உணர்வு பளிச்சிடுவதைப் பார்க்கலாம். இதற்குப் பாவையும் விதிவிலக்கல்லர்.

சமுதாய உணர்வு என்ற பொதுப்பண்பு - இலக்கியத்திற்கு உரிய பொதுப்பண்பு பாவையின் கதைகளில் அமைந்துள்ளமைக்கு அவர் கூறும் காரணம் பொருத்தமாக, ஏற்புடையதாக உள்ளது. "என்னுடைய கதைகளின் நோக்கம் சமுதாயத்தைத் திருத்த வேண்டும் என்பதல்ல. இப்படியெல்லாம் நடக்கின்றதே! இதனை நாம் எப்படி வெல்லப் போகிறோம்? விலக்கப் போகிறோம்? என்பதே"7 எனத் தன்னுடைய கதைகளின் நோக்கம் பற்றிக் கூறும் இவருடைய கருத்து, தமிழகத்து மாப்பசான் எனப் புகழப்படும் புதுமைப்பித்தனின் கருத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.

"பொதுவாக என்னுடைய கதைகள் உலகத்துக்கு உபதேசம் பண்ணி உய்விக்க ஏற்பாடு செய்யும் ஸ்தாபனம் அல்ல. பிற்கால நல்வாழ்வுக்கு சௌகரியம் பண்ணி வைக்கும் இன்சூரன்ஸ் ஏற்பாடுமல்ல"8

சமுதாயத்தின் மீது பரிவுகொண்டு இவ்வாறெல்லாம் வேதனைப்படுகிறதே தமிழ்ச்சமூகம் என்று வருந்துகிறுர் பாவை. தமிழ்ச் சமுதாயத்திடம் காணப்படும் குறைகளை வெளிச்சமிட்டுக் காட்டுகிறுர் பாவை. தமிழர்களின் இன உணர்வை 'விழிப்பு' என்ற கதையின் மூலம் காட்டுகிறுர். வாடகைக்காருக்குத் தன் குழந்தைகளுடன் காத்துக் கொண்டிருக்கும் பெண் தமிழர்கள் ஓட்டும் வாடகைக்காராக இருந்தால் (இனத்துக்கு இனம் உதவுவது நல்லது என்ற கோட்பாட்டோடு) நல்லது என நினைக்கிறுள். ஆனுல் தமிழரான வாடகைக் காரோட்டிக்குத் தமிழனுக்கு உதவுவது என்ற எண்ணம் துளியும் இல்லை. ஆனுல் வாடகைக் காரோட்டியோ தமிழனை ஏமாந்தவனுக நினைப்பதைக் காட்டுகிறுர். பணத்தில் குறியாக இருந்து வாடிக்கையாளர்களையும் பெறுமல் வெறும் வண்டியுடன் திரும்பும் காரோட்டியை, மலாய்க்காரக் காரோட்டி ஒருவருடன் ஒப்பிட்டு இருவரிடையே உள்ள வேறுபாட்டையும் காட்டத் தவறவில்லை. இக்குறையைச் சுட்டிக் காட்டித் தமிழினம் முன்னேற வேண்டுமாயின் அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளையும் காட்டுகிறுர் பாவை. பாவையின் கருத்து வருமாறு:

"காலி வண்டியாகப் போனுலும் போகுமே தவிர கட்டணத்தில் குறைத்துக் கொள்ள முடியாது என்ற ரீதியில் நடந்துகொண்ட நம் இன டாக்சியோட்டிகளைவிட, வண்டி காலியாகப் போவதற்குப் பதில் கிடைக்கும் வாடிக்கைகளை, விடாமல் பிடித்துக் கொள்ளும் இவர் போன்றவரும் கூடத் தங்கள் தொழிலில் முன்னேற முடியுமோ?"9

நம்மினம் முன்னேற, விழித்துக்கொள்ள வேண்டும் என்ற தீராத வேட்கை மேற்கண்ட பகுதியில் எதிரொலிக்கிற-தல்லவா?

தமிழ்ச் சமுதாயம் உயர, இன்றைய இளைஞர்களின் வாழ்வு அடித்தளமாக அமைய வேண்டும் என்ற அக்கறை-யும் பாவைக்கு உண்டு. சமுதாய மாளிகையை உருவாக்கும் சிற்பிகளல்லவா இளைஞர்கள்? ஆனால் தமிழ்ச் சமுதாயத்-திற்கு இத்தகு இளைஞர்கள் வாய்க்கவில்லையே என்ற ஏக்க-மும் பாவையிடம் உண்டு. இவ்வேக்கத்தை 'வேப்பமரம்' என்ற கதை பிரதிபலிக்கிறது. தோட்டப்புறங்களில் வாழும் தமிழர்கள் வற்றாத பால்மரமாய் நின்று, உழைத்துத் தங்கள் பிள்ளைகளைப் பல்கலைக் கழகங்களுக்கு அனுப்புகிறார்கள். பிள்ளைகளோ பொறுப்புணர்ந்து நடக்காமல் போதைப்-பொருள்களைச் சுவைத்து மகிழ்ந்து, பெண்களைப் பற்றியும், பாலுணர்வு பற்றியும், திரைப்படம் பற்றியுமே ஆராய்ச்சி செய்கிறார்கள். வேப்பமரம் இனிப்பையும், கசப்பையும் சுமந்து நிற்பதுபோலத் தோட்டப்புறப் பெற்றோரும் தங்கள் பிள்ளைகளின் இனிமையான எதிர்காலத்தையும், பிள்ளை-களின் கசப்பான ஒழுங்கீனங்களையும் சுமந்து நிற்கும் அவலநிலையைப் படம் பிடித்துக் காட்டுவர். கல்வியில் கருத்தூன்றினால் இளைய சமுதாயம் முன்னேறும் என்ற நியாயமான எதிர்பார்ப்பை விதைத்துள்ளார் பாவை.

**தமிழ்ச் சமூகத்தின் கண்ணீர்க் கதை**

சிவப்பு அடையாளஅட்டை தமிழ்ச் சமுதாயத்தின் முன்னேற்றத்தைப் பல வழிகளிலும் பாதித்த சமூகப் பிரச்னை. இதனை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்-டுள்ள மலேசியத் தமிழ்ச் சிறுகதைகள் அளவில. அறி-யாமையால் குடியுரிமை எடுக்கத் தவறிய எண்ணற்ற தமிழர்களின் கண்ணீர்க் கதையைச் சித்திரிக்காத மலேசியத் தமிழ் எழுத்தாளர்களே இலர். கூலி வேலை பார்ப்பதானா-லும் குடியுரிமை வேண்டும் என்ற எண்ணத்தைத் தமிழ்ச் சமுதாயத்தினரிடம் விதைப்பது 'செல்லாக்காசு' என்ற

கதை. முத்துவைப் போன்ற ஆயிரமாயிரம் பாட்டாளிகள் குடியுரிமை பெற முயலாததால் செல்லாக்காசுகளாகிச் செத்ததைச் சித்திரிப்பதன் மூலம், "குடியுரிமை எடுக்காமல் இங்கே வாழ்ந்து கொண்டிருக்கும் ஒவ்வொருவரின் வாழ்க்கையும் செல்லாக்காசுதான்"10 என்று உணர்த்துகிறுர் பாவை.

குடியுரிமை பெறுமல் சீரழிந்ததோடன்றிக் குடித்துச் சீரழியும் இனமும் தமிழினமே என்பதை நாட்டிலுள்ள தோட்டப்புறங்கள் நிரூபித்துவருகின்றன. சம்சு அரக்கனின் கைப்பிடியில் சிக்கித் தவித்து, தானும் அழிந்து மற்றவர்களேயும் அழிக்கும் அறியாமைமிக்க தமிழ் இனத்தை எண்ணிஞல் பாவைக்கு மனமே எரிகின்றது. பாவையின் மனம் மட்டுமன்று, தமிழனுய்ப் பிறந்த ஒவ்வொருவரின் மனமும் எரிகின்ற நிலேயே! ஏழைகளின் வயிற்றையும், தமிழ்ச் சமுதாயத்தின் ஒரு சில நல்ல மனங்களேயும் எரிக்கும் பெரு நெருப்பாம் சம்சுவின் கொடுமையை 'எரியும் வயிறுகள்' என்ற கதையில் சாடுகிறுர் பாவை.

வாழ்க்கை என்பது வயலென்று கருதிஞல், அந்த வயலுக்கு வரம்புகள் இருப்பதே சிறப்பு. வாழ்வெனும் வயலில் விளேயும் பயிர்களேக் காப்பதற்கு வரம்புகள் தேவை. இவ்வரம்புகளேப் பண்பாடு என்ற பெயரில் ஒவ்வொரு இனமும் போற்றி வருகின்றது. தமிழ்ப் பண்பாடு பெண்களேத் தெய்வமென மதிக்கும் பண்பாடு. இப்பண்பாடு ஏட்டளவில் வாழ்கின்றது. ஆயின் வீட்டளவில் வாழ்கின்றதா? பெண்ணே - பெற்ற தாயைத் தெய்வமாக மதிக்காவிட்டாலும் குறைந்தபட்சம் ஒரு மனித இனமாகவாவது மதிக்கக்கூடாதா? திருமணமானதும் இளேஞர்கள் தங்கள் மனேவியின் பேச்சில் மதிமயங்கிப் பெற்ற தாயை உதாசீனப்படுத்தும் கொடுமை மலேசியத் தமிழர்களிடையே இருந்து வருவது தமிழினத்திற்குத் தீராப்பழியை அல்லவா தேடித் தரும்? பெற்று, வளர்த்து, படிக்கவைத்து ஆளாக்கிய அன்னேயை இழிவுபடுத்தும், துன்பப்படுத்தும் கல்மனங்கள் நாகரிகம் என்ற போர்வையில் வாழ்வது சமுதாயத்தைச்

சாய்க்கடையாக அல்லவா மாற்றும்? இதனைக் 'கூட்டைத் தேடும் பறவை' என்ற கதையிலே குமுறலுடன் வெளிப்படுத்துகிறார். பெண் என்றால் பேயும் இரங்கும் என்பர். ஆனால் நம் இளைஞர்கள் உயர்நிலை பெற்ற பிறகு தாய்க்கு இரங்குவதில்லையே? முதியோர்களின் பிரச்னைகளைக் 'கூட்டைத் தேடும் பறவையில்' கூறித் தீர்வும் தந்துள்ளார் பாவை. மகன் புறக்கணித்த தாயை மகள் ஆதரிக்கிறாள். பாம்பின் கால் பாம்பறியுமாப்போல பெண்மனத்தைப் பெண்ணல்லவா புரிந்து கொள்கிறாள்?

தமிழ்ப் பெண்களைப் புறக்கணித்துச் சீனப் பெண்களைத் திருமணம் செய்யும் தமிழர்கள் இன்று மலேசியாவில் பெருகி வருகின்றனர். இவர்களின் பிரதிநிதி சிவராம். 'பண்புகள் வாழ்கின்றன' என்ற கதையிலே வரும் தலைவன் சிவராம், சுவி லீ என்ற சீனப் பெண்ணைத் திருமணம் புரிந்துகொண்டு பின்பு அவளைச் சந்தேகப்பட்டு (நடத்தையில் சந்தேகம்) அறைந்து விடுகிறான். அவள் கடிதம் எழுதி வைத்துவிட்டுப் பிரிந்து செல்கிறாள். அக்கடிதத்தில் 'பண்புகள் என்பது குறிப்பிட்ட ஓர் இனத்திற்கு மட்டும் சொந்தமானதல்ல என்பதைத் தாங்கள் அறிவீர்களா? தங்கள் இனப் பெண்கள் மட்டுந்தான் கற்புக்கும்- பண்பாட்டிற்கும் காவல் தெய்வங்கள் என்று நினைப்பது தவறு என்று கூறியிருப்பதாகப் பாவை காட்டுவது ஒவ்வோரினத்திற்கும் உள்ள பண்பாட்டை நாம் மதிக்க வேண்டும் என்ற படிப்பினையை ஊட்டுகிறது. தமிழ்ப் பண்பாட்டினை மதிக்கும், பிற இனப் பெண்களிடம் அதனை எதிர்பார்க்கும் சிவராம் போன்றவர், தமிழினப் பெண்களை மணந்தால் என்ன? என்ற சிந்தனையும் உட்பொருளாகத் தொனிக்கின்றதன்றோ?

தமிழ் இனத்தாருக்குத் தம் மொழியின் மீது பற்று இல்லை என்பது இன்று நம்மிடையே பரவலாக நிலவும் குறைபாடு. தமிழ்ப்பற்றுடையவர்கள் நூற்றில் ஓரிருவரே. பெரும்பாலும் தமிழைத்-தாய்மொழியைப் புறக்கணிக்கும் தமிழர்களே மிகுதி. உண்மையில் தமிழ்ப் பற்றுடையார்க்கு

இந்நிலே வேதனே தருவதே. பாவையும் தமிழ் நெஞ்சம் கொண்டவர். ஆகவே மொழியுணர்வு ஊட்டும் பல கதைகளே அவர் படைத்துள்ளார். 'தானே தனக்குப் பகையாளுல்', 'இனி ஒரு விதி செய்வோம்','தமிழ் சோறு போடுமா?' போன்ற கதைகள் பாவையின் தமிழுணர்வுக்குக் கட்டியம் கூறுபவை.

தமிழ்ப்பள்ளிகளில் வகுப்புக்களும், பெஞ்சுகளும் காலியாகக் கிடக்க அதில் அமர வேண்டிய மாணவர்கள் பிறமொழிப் பள்ளிகளில் படிப்பதைக் காட்டித், தமிழ்ப்-பள்ளிகள் குறைப்பிரசவமாக இருக்கும் நிலேயைக் காட்டி, இந்நிலேயை மாற்ற 'இனியொரு விதி செய்வோம்' என ஊக்கக்குரல் எழுப்புகிருர் பாவை. தமிழ்ப் பெற்ருேர்கள் தங்கள் பிள்ளேகளுக்குத் தமிழ்மொழிக்கல்வி ஊட்டுவதை ஊக்குவிக்க வேண்டும் என ஊருக்கு உபதேசிக்கும் தமிழ் ஆசிரியர்களால், 'மெல்லத் தமிழ் இனிச் சாகும்' என்ற வேதனேயைத் 'தமிழ் சோறு போடுமா?' என்ற கதையில் வெளியிடுகிருர். தாய்மொழிக்கல்விக்கு முன்னுதாரண-மாகத் திகழ வேண்டிய தமிழாசிரியர்களும், தலேமையாசிரி-யர்களும் தாங்களே தடம்மாறித் தமிழ்மொழிக்கல்வியைப் புறக்கணித்து வருவதனே மற்ற இரு கதைகளிலும் காட்டி உள்ளார். பொதுவாகப் பெண் எழுத்தாளர்களிடம் பண்-பாட்டு உணர்வு, மொழியுணர்வு ஆகியவை மிஞ்சி நிற்கும். மலேசியத் தமிழ்ப் பெண்ணெழுத்தாளர்களுள் ஒரு சிலரே மேற்கூறிய பண்பினேப் பெற்றுள்ளனர். மலேசியப் பெண் எழுத்தாளர்களுள் பாவை மொழியுணர்வூட்டும் கதைகளின் வழி, தமிழ்ச் சமுதாயத்திடம் மொழிப்பற்றை ஊட்டுவதில் முன்னணியில் நிற்கிருர். உள்ளடக்கத்தால் மட்டுமின்றி உணர்ச்சிச் செறிவான நடையின் மூலமும் அவருடைய கதைகள் கற்பார் நெஞ்சைப் பிணிப்பவை. தாய்ப்பாலோடு தமிழ்ப் பாலும் ஊட்டி மொழியை வளர்க்க வேண்டியது ஒவ்வொரு தாயின் கடமை என்ற உண்மையைப் பாவையின் கதைகள் பறைசாற்றுகின்றன.

சமுதாய உணர்வுமிக்கவராய்த் திகழும் பாவை, சமுதாயத்தின் செம்பாதியான பெண்ணினத்தைக் கருப்பொருளாக்கியும் கதைகளை வடித்துள்ளார். பெண்கள் நடைமுறையில் எதிர்நோக்கும் சிக்கல்களைக் கதைகளுக்குப் பொருளாக்கிப் பெண்குலத்தின் உயர்வுக்கு வழிகோலியுள்ளார். பெண்களின் சிறப்பியல்புகளைச் சித்திரித்துள்ளார். மனைவி இருக்கும் போதே மற்றொரு பெண்ணைத் தேடும் ஆண்களின் ஒழுங்கீனப் போக்குக்குச் சமுதாய அமைப்பே காரணம் எனக் குற்றம் சுமத்துவதைத் 'தொடராத நிழலில்' காணலாம். பெண் வேலி தாண்டினால் விளைவு என்ன ஆகும்? என்று எச்சரிக்கையும் செய்கிறார் பாவை. 'ஆண் எதையும் செய்யலாம்; பெண் அதற்கு அடி பணிந்து போக வேண்டும் என்ற வக்கிரபுத்தி அட்டையாய் ஒட்டிக் கொண்டிருக்கும் வரை இதுபோன்ற அவலங்களுக்குப் பஞ்சமே இராது" என்று கொதிக்கும் உள்ளத்தை வெளிப்படுத்துகிறார். இதே கருப்பொருளை வெளிப்படுத்துவதுதான் 'சின்ன வீடு' என்ற மற்றொரு கதை.

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் தவறு செய்வது இயல்பு. சிலர் தவறு செய்தால் அதனை உணர்ந்து திருந்திவிடுவர்; நல்வாழ்வும் வாழ்வர். ஆனால் பலர் தவறு செய்வதையே வாழ்க்கை நெறியாகப் பின்பற்றுகின்றனர். இந்நிலையில் அறியாமல் தவறு செய்ததை உணர்ந்து திருந்தினால் நல்வாழ்வு உண்டு; உடலால் வாழும் வாழ்வைவிட உள்ளத்தால் வாழும் வாழ்வே சிறந்தது போன்ற உண்மைகளை 'ஒற்றையாய் ஆடும் நாற்காலி' என்ற கதையில் உணர்த்தியுள்ளார். பெண் எழுத்தாளர் என்ற காரணத்தால் பாவை பெண்களைப் பழித்து எழுதுவதில்லை என்ற கூற்றுக்கே இடமின்றித் தவறு செய்யும் பெண்களைக் கதைகளில் படைத்துள்ளார். குடும்பப் பெண்ணான சங்கரி சிறிய சபலத்தால் தன் வீட்டில் குடி இருக்கும் இளைஞனோடு சிரித்துப் பேசி அவனுடைய அணைப்பிலே கட்டுண்டிருக்கும்போது சங்கரியின் கணவர் பார்த்து அவளை வீட்டை விட்டு விரட்டுகிறார். அன்று அனாதை இல்லத்தில் சேர்ந்து (புனித வேள்வி வளர்த்து) உள்ளத்தாலேயே வாழ்கிறாள். முப்பதாண்டு-

கட்குப் பின்னர்க் கணவரே வந்து அழைக்கும்போது அத்தூய வாழ்வைவிட்டுச் செல்லவில்லே. சங்கரியைப் போன்ற பெண்கள் உணர்வுக்கு அடிமையாகி 'நெறி' தவருதிருக்கவும், தவறிஞல் அத்தவறை உணர்ந்து திருந்தவும் வழிகாட்டுகிருர். தற்கொலேயை நாடும் தமிழ்ப் பெண்களுக்கு இக்கதை ஓர் அரிய மருந்து!

திருமணமாளுலும் பெண்கள் தாய் வீட்டார் மேல் கொண்ட பாசத்தை மறக்கமாட்டார்கள் என்பது பொதுவான உண்மை. ஆனுல் தாய் வீட்டை மறக்கும் பெண்மனங்களும் இருக்கின்றன என்பதைக் 'குழலோடு சேரும் மலர்கள்' என்ற கதையில் காட்டுகிருர் பாவை. திருமணமான பின் தன்னுடைய பொருட்களேப் பின்னவர்களுக்கு (தம்பி) விட்டுச் செல்லாத பெண்ணேக் காட்டி அவளுடைய தாய் மூலமே 'எத்தனேதான் ஊட்டி வளர்த்தாலும் பெண்கள் இரவல் பொருள் மாதிரிதான்' என்று சொல்லவைக்கிருர் பாவை.

பெண்கள் திருமணம் செய்துகொண்டு இல்லறத்திலே ஈடுபட்டு, இனிய மக்களேப் பெற்று வாழ்வது பெண்களுக்கு உரிய பண்பு. தமிழ்ப்பண்பாடும் இல்லறத்தைச் சார்ந்தே அமைந்துள்ளது. ஆனுல் திருமணத்தைப் பற்றியும், இல்லற வாழ்க்கை பற்றியும் எதிர்மறைக் கருத்துக்கள் படித்த பெண்கள் பலருக்கும் உண்டு. இத்தகு பெண்களுள் ஒருத்தியான ரேணு திருமணமே புரியாமல் தாயோடு வாழ்கிருள். உடன்பிறந்த சகோதரிகள் அனேவரும் திருமண வாழ்வில் ஈடுபட்ட பின் இவள் ஒற்றைப் பனேயாய் நிற்பதை உணர்கிருள். கண்ணீர்ப் பூக்களே உதிர்க்கிருள். இக்கண்ணீர்ப் பூக்களேக் கட்டி மாலேயாய் அணிந்துகொள்ள ஒருவன் வருவாஞ எனக் காத்திருக்கிருள். 'நொண்டிக்குதிரைக்குச் சறுக்கியது எல்லாம் சாக்கு' என்ற பழமொழி போலத் திருமணம் செய்ய அஞ்சிப் பல காரணங்களேக் கூறும் பெண்களுக்கு இக்கதை ஒரு படிப்பினே ஆகும்.

'மேடை காணுத நாடகங்கள்' என்ற கதையில் ஏழைப் பெண்கள் படும் இன்னல்களைக் களையத் தன் மகளைச் சட்ட-நிபுணராக்கப் பாடுபடும் ஓர் ஏழைத் தாயைக் காட்டுகிருர் பாவை. இத்தாய் செய்யாத குற்றத்திற்குத் தண்டனை அனுப-விக்கிருள். தன்னைப் போல ஏழைப் பெண்கள் துன்புறக்-கூடாது என்ற எண்ணம் கொண்டவள் அவள்.

தமிழ்ச் சமுதாயத்தின் பல்வேறு சிக்கல்களையும் கருப்பொருளாக்கிய பாவை சமயத்துறையையும் கதைக்குக் களமாக்கிக் கொண்டுள்ளார். மதமாற்றக் கொடுமையின் விளைவுகளைக் காட்டி அதற்கான தீர்வினை 'ஞானப் பூக்கள்' என்ற கதையில் கூறியுள்ளார். தங்களுடைய ஒரே குழந்தை பால்மணக்கும் வயதிலேயே பரமார்த்த ஞானியாக மாறி-யதைக் கண்டு இறும்பூதெய்தும் பெற்றோர்கள் 'ஞானப் பூக்களில்' காட்சி தருகிருர்கள். 'மனிதன் எத்தனைதான் நாகரிக முதிர்ச்சியடைந்தாலும் அதற்காகத் தான் பிறந்த மதத்தையே மறக்கத் துணிந்தால் அந்த மடத்தனத்தை என்னென்பது' என்று ஏங்குகிருர் பாவை. இவ்வேக்கத்தில் சமுதாயத்திற்காகப் பரிவுடன் செயல்படுவதைப பார்க்-கிரோம். மதமாற்றத்தைத் தடுக்க வழி என்ன? வீட்டுக்கொரு டாக்டரையோ, இன்ஜினியரையோ உருவாக்குவது போல வீட்டுக்கொரு விவேகானந்தரை உருவாக்கிஞல் மதமாற்-றங்கள் ஏற்படா; ஆன்மீக வளம் பெறலாம் என்ற அறி-வுரையை உள்ளடக்கியுள்ளது இக்கதை. விவேகாவின் தாய் இவனைப் படிக்கவைத்தது பிரயோஜனமற்ற வாழ்க்கை நடத்துவதறகா? என்று அறியாமையால் கேட்கிருள். இவளைப் போன்ற அஞ்ஞானம் உடையவர்கள் மத்தியில் மெய்ஞானப்பூக்கள் எப்படி மலரும்?

சமுதாயஉணர்வுமிக்க கருப்பொருட்களைக் கையாண்-டதோடு மட்டுமின்றிப் பாவையின் சிறுகதைகள் அமைப்பு முறையிலும் சிறந்து விளங்குகின்றன. சிறுகதைக்குரிய இலக்கணங்கள் பொருத்தமுற அமைந்துள்ளன. உத்திமுறை-களைக் கையாண்டு சிறப்புறக் கதை கூறிச் செல்பவர் பாவை. இவர் கதைகளுக்குத் தலைப்புக் கொடுத்துள்ள திறம்

இவரைச் சிறந்த சிறுகதை ஆசிரியரே என உறுதிப்படுத்து-கின்றது. இவருடைய நடை உணர்ச்சிச் செறிவுடையதாய்ப் படிப்போரைக் கதைகளுடன் ஒன்றச் செய்கின்றது. அஃதோடன்றி இவருடைய மொழியுணர்வையும், சமுதாய உணர்வையும், சமய உணர்வையும் பிரதிபலிக்கின்றன.

சுருங்கக் கூறின் மலேசியப் பெண் எழுத்தாளர்களுள் தரமான எழுத்தாளராக இவரைக் கருதுவது பொருந்து-வதே! பொதுவாக வாசகர்கள் (ஆண்-பெண் என்ற இரு-பாலாரும்) பாவையின் கதைகளை விரும்பிப் படித்தாலும் பெண்கள் மத்தியில் பாவை பெருஞ்செல்வாக்கு உடையவர் என்பது வெள்ளிடைமலை.

## பாக்கியம் முத்து

வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த 'கடாரம்' என்னும் கெடா மாநிலத்திற்கு என்றும் மங்கா இலக்கியப் புகழும் உண்டு. தமிழ் உணர்வு மிக்க எழுத்தாளர்களின் எண்ணிக்கை மற்ற மாநிலங்களில் உள்ள எழுத்தாளர்களின் எண்ணிக்கையினும் அதிகம். தரமிக்க இவ்வெழுத்தாளர்களுள் பாக்கியம்முத்து என்னும் பெண்ணும் ஒருவர். பரிசுகள் பல பெற்ற பெண்ணெழுத்தாளர் இவர். மலேசிய விடுதலைக்குப் பிறகு எழுதத் தொடங்கிய பலருள் இப்பெண் எழுத்தாளர் குறிப்பிடத்தக்கவர்.

சிறுகதை எழுதும் சீரிய பணியில் பாவையர் பங்கு போற்றற்குரியது. விடுதலைக்குப் பிறகு சிறுகதை எழுத்தாளர்களாக நங்கையர் பலரும் மலர்ந்தனர்; பலர் தங்களின் படைப்புக்களைத் தொகுத்து நூலாகவும் வெளியிட்டுள்ளனர். ஒரு சிறுகதைத் தொகுப்பு வெளியிட்டதும் ஓய்ந்து போகும் பெண்ணெழுத்தாளர்கள் மலையகத்தில் பலர் உளர். இதற்கு எழுத்தாளர்களை மட்டும் குறைகூற இயலாது. வாசகர்களின் ஊக்குவிப்பு இன்மையே காரணமாம். எழுத்துத் திறமையிருந்தும் அதனை வெளிக்காட்ட இயலாமல் 'குடத்துள் விளக்காய்' அடங்கிப் போகும் அவலநிலையும் மலையகத் தமிழ் இலக்கிய உலகில் உண்டு. வாய்க்கால் நீரை மடை மாற்றிப் பாய்ச்சுவது போலச் சில எழுத்தாளர்கள் இலக்கியத் துறையை விடுத்து வேறு துறைகளையும் நாடுகின்றனர். இப்படி மடைமாற்றங் கண்ட பெண்ணெழுத்தாளருள் பாக்கியம்முத்துவும் ஒருவர். இவர் 'முரண்பாடுகள்' என்ற சிறுகதைத் தொகுப்பை 1978-இல் வெளியிட்டவர். இச்சிறுகதைத் தொகுப்பு ஒன்றே இவருடைய எழுத்தாற்றலுக்குச் சீரிய சான்று. மலேசிய இலக்கிய உலகில் பெண்ணெழுத்தாளர்கள் சிறுகதைத்துறை வளர்ச்சிக்கு ஆற்றிய சீரிய பங்கிற்குப் பாக்கியம் முத்துவின் இத்தொகுப்பு தக்கதொரு எடுத்துக்காட்டு.

முரண்பாடுகள் என்ற சிறுகதைத் தொகுப்புப் பத்துக் கதைகளைத் தன்னகத்தே கொண்டது. சமுதாயத்தில் காணப்படும் முரண்பாடுகள் எத்துணை எத்துணை! இச்-சமுதாய முரண்பாடுகள் உணர்வு மிக்க ஓர் எழுத்தாளரை எழுதத் தூண்டி அவருடைய கதைகளுக்கும் கருப்பொரு-ளாயின. தன்னுடைய சிறுகதைகளைப் பற்றி நூலாசிரியர் குறிப்பிடும் போது,

> "சமூகத்தின் பலம், பலவீனம் இரண்டுமே ஒன்றுக்கொன்று முரண்பாடாகி ஆத்ம பலி-யீட்டில் இறங்கி விட்டதை நான் வெறுமை-யோடு உணர்ந்து வந்துள்ளேன். அந்தப் பாதிப்புக்களை என்னுள் வாங்கி நான் ஈன்-றெடுத்த குழந்தைகளே இச்சிறுகதைகள்."11

எனக் கூறுகிறார். இந்நூலில் உள்ள சிறுகதைகளுக்குச் சமுதாயமே கருவாகிறது.

### சமுதாயச் சிற்பி

ஓர் எழுத்தாளனைப் பொறியியல் வல்லுநரோடு ஒப்பிடுவர் மேனாட்டுத் திறனியொருவர். பொறியியல் வல்லுநர் மனித சமுதாயத்திற்கு-நாட்டுக்கு நன்மை பயக்கும் திட்டங்களை நிர்மாணித்து, ஆக்ககரமாகச் செயல்படுவர். அன்னார் போன்றே எழுத்தாளரும் சமுதாயச்சிற்பி ஆகிறார். எழுத்துத்திறனும், சீரிய சிந்தனைத்திறனும் சமுதாயத்தை நிர்மாணிக்கும் கருவிகள். இக்கருவிகளைத் தக்கமுறையில் பயன்படுத்துவதே ஓர் எழுத்தாளரின் தனிச் சிறப்பு. புதிய சமுதாயம் படைக்க விழையும் புத்துலகச் சிற்பிகளாம் எழுத்தாளர்கள். சமுதாயத்திலே உள்ள சீர்கேடுகளைக் கண்டு, வருந்தி, அந்நலிவுகளினின்று மனித சமுதாயம் மீள்வதற்கு வழிகாட்டுவர். இது உலகெங்குமுள்ள எழுத்-தாளர்களின் பொது இயல்பு. ஆயின் பாக்கியம் முத்துவுக்கு இத்தகைய நோக்கம் ஏதுமில்லை. இக்கருத்தை அன்னார் சொற்களே உறுதிப்படுத்துகின்றன.

"சாபக்கேட்டிற்கு ஆளானதாகக் கூறிக்கொள்ளும் இந்தச் சமூகத்திற்கு விமோசனம் பெற்றுத் தந்து விடுவதற்காகவோ அல்லது திருந்தவே முடியாததாகக் கருதிக் கொண்டிருக்கும் இந்தச் சமூகத்தைத் திருத்தியே தீருவது என்ற ஒரு சங்கல்பத்தை ஏற்றுக் கொண்டோ நான் கதை எழுத வரவில்லை."12

என்கிறார் திருமதி பாக்கியம் முத்து. அன்னாருடைய கருத்தை மனத்துட்கொண்டு அவருடைய சிறுகதைகளின் நோக்கத்தை நாம் எளிதில் கூறிவிடலாம்.

பொதுவாக எழுத்தாளர்களிடையே காணப்படும் பொதுவியல்பு இவ்வெழுத்தாளரிடம் இல்லை. ஆயின் குறிக்கோள் இல்லாத மனிதனோ அல்லது அவனுடைய படைப்புக்களோ இவ்வுலகில் நிலைத்து நிற்பதில்லை அல்லவா? அவ்வாறாயின் பாக்கியம் முத்துவின் படைப்புக்கள் எவ்வாறு சிறப்பெய்தின? இவ்வினா எழுவது இயற்கையே! சிறுகதை எழுதுவதற்குச் சமூக சீர்திருத்தமே அடிப்படைக் காரணம் என்பதைத் திருமதி பாக்கியம் முத்து வெளிப்படையாகக் கூறவில்லை என்பதற்காக, அவருடைய சிறுகதைகளுக்கு நோக்கமே இல்லை என்று முடிவு செய்வது தவறான முடிவாகும்.

வேற்றுமையில் ஒற்றுமை காண்பது (*Unity in diversity*) விழுமிய பண்பல்லவா? இவ்விழுமிய பண்புதான் பாக்கியம்முத்துவின் படைப்புக்களுக்கு விழுப்பந் தந்துள்ளது. சமுதாய முரண்பாடுகளைக் காட்டுவதோடு அமையாமல், அவருடைய சிறுகதைகளுக்குள் ஒரு புதிய விழிப்புணர்ச்சியையும் திருமதி பாக்கியம்முத்து காட்டியுள்ளார். எனவே இவருடைய சிறுகதைகள் சிறக்கின்றன.

### இரு கோணங்களில் இலக்கியம்

எழுத்தாளர்கள் சமூகப் பிரச்னைகளைக் கருப்பொரு-

ளாக்கிப் படைப்பிலக்கியம் சமைக்க முனைகையில் இரு கோணங்களில் இலக்கியம் படைப்பர். சமூகப் பிரச்னைகளை உள்ளது உள்ளவாறே வெளிப்படையாகக் காட்டும் 'சார்லஸ் டிக்கன்ஸ்' போன்ற துணிவுடையோர் ஒருவகை. மற்றொரு வகையினர் சமூக நலிவுகளைக் கண்டு உளம் நைந்து அவற்றைக் களையத் தீர்வுகளையும் கூறும் அருளுள்ளம் கொண்டோர். நந்தமிழ் எழுத்தாளர்களில் இருவகையினரும் உண்டு. ஜெயகாந்தன் போன்றோர் சமூகச் சீர்கேடுகளை வெளிச்சமிட்டுக் காட்ட, அறிஞர் மு.வரதராசனார், நா.பார்த்தசாரதி, அகிலன் போன்றோர் சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வுகளையும் கூறியுள்ளனர். அது போன்றே சமூக முரண்பாடுகளைக் காட்டுவதோடு நில்லாமல் சமூகச் சீர்கேடுகள் ஒழிந்து புதியதோர் உலகம் பிறவாதா? என்ற ஏக்கத்தையும் இழையோட வைத்துள்ளார் பாக்கியம் முத்து. பொது இயல்புகளுக்குள்ளே எழுத்தாளரின் சிறப்பியல்பைக் காட்டும் வகையில் பாக்கியம் முத்துவின் கதைக்கருக்கள் அமைந்துள்ளன. வேற்றுமையில் ஒற்றுமை காண விழையும் இப்பெண்ணெழுத்தாளரின் பேருள்ளத்தை 'முரண்பாடுகள்' என்னும் சிறுகதைத் தொகுப்பு வெளிப்படுத்துகின்றது.

தனக்கு அறிமுகமான சூழல்களிலிருந்தே கதைக்கருக்களை இவர் தேர்ந்தெடுத்துள்ளார். பெண்கள் எதிர்நோக்கும் பலப்பல சிக்கல்களை வெவ்வேறு கோணங்களில் கண்டும், காட்டியும் உள்ளதை இத்தொகுப்பின் வழி அறிகிறோம். மனைவியைப் பூசைக்குரிய மலராக புனிதமாக மதித்தான் கணவன். அவளிடம் கொண்ட ஆழமான, நிலையான அன்பே அவனுக்குப் பலத்தைத் தருகிறது. ஆயின் கணவனின் தூய அன்பினை உணராமல் அவனை விட்டு விட்டு மற்றொருவனுடன் சென்று வாழுகிறாள் மனைவி. பலவீனம் கொண்ட இம்மனைவியால் குழந்தைகளின் வாழ்வு பாதிக்கப்படுகிறது. பூர்ணிமா அத்தனை தகுதிகளும் வாய்க்கப் பெற்றிருந்தும், அவளுடைய தாய் 'ஓடிப்போன' ஒரே இழி செயலால் அவளுக்குத் திருமணம் கைகூடாமலே போய்விடுகிறது. 'வேனலை நீரென்று நம்பி மோசம் போன'

தாயும் மாற்ருனிடம் அடியும் உதையும் பெற்று அடிமை வாழ்வு வாழ்கிருள். தூயகாதல் ஒருவனைத் தூயவனுக வாழச் செய்கிறது. இழிந்த காமம் (பலவீனம்) கொண்ட மனைவி தானும் இழிவடைந்து குடும்பத்தையும் களங்கப்படுத்துகிருள். வேனல் என்ற முதற்கதை பலம், பலவீனம் என்ற இரண்டுக்கும் இடையே உள்ள முரண்பாடுகளால் குடும்பம் சீர்குலைந்து போவதைக் காட்டுகிறது. இதனுல் ஒரு குடும்பத்தலைவி எடுக்கும் முடிவு அக்குடும்பத்தைச் சொர்க்கமாகவும் நரகமாகவும் மாற்றவல்லது என்ற உண்மையை உணர்கிருேமல்லவா? 'ஆவதும் பெண்ணுலே அழிவதும் பெண்ணுலே' என்ற பழமொழியின் மெய்ம்மையை எதிரொலிக்கிறதல்லவா முதற்கதை! ஒரு தாய் தன் பிள்ளைகளைப் பிரிந்து செல்லவும் இயலுமா? காமத்திற்கு முன் தாய்ப்பாசம் பலமிழந்து போனதா? என்றெல்லாம் சிந்திக்கத் தூண்டும் சிறந்த கதை 'வேனல்'

'பூநாகம்' என்ற இரண்டாவது கதை தமிழ்ப்பண்பாட்டுக்கும், மலேசியத் தமிழர்களிடையே காணப்படும் மேனுட்டு நாகரிக மோகத்திற்கும் உள்ள முரண்பாடுகளைக் கதைக் கருவாகக் கொண்டது. திருமணம் செய்வதற்கு முன்பு ஓர் ஆணும் பெண்ணும் உடலுறவு கொள்வது; அதனுல் பிறமலரை நாடும் 'வண்டுமனம்' ஆடவர்களிடையே வாய்ப்பது; உலகத்தோடு ஒட்ட வாழ்கிருேம் என்ற பெயரில் திருமணத்திற்கு முன்பு தன் மகளை ஆடவனுடன் அனுப்பிவைக்கும் தாய்மார்களின் அவலநிலை ஆகியவற்றைப் பூநாகம் என்ற கதையில் சித்திரித்துள்ளார். பண்பாடு போற்றும் பண்புடைப் பெற்ருேராக கீதாவின் பெற்ருேர் திகழ்கின்றனர். புலிக்குப் பிறந்தது பூனையாவதில்லையே? அதுபோல் கீதாவும் பெற்ருேரின் பண்பாட்டுணர்வை மதிக்கிருள். இக்குடும்பத்திற்கு முற்றிலும் மாருன லெட்சுமியின் குடும்பம் பண்பாட்டுச் சீர்குலைவுக்கு உதாரணம். மேனுட்டு நாகரிக மோகத்துக்கு அடிமை. பூவான மனங்களுக்குள் பூநாகம் குடியேறிய புதுமையைப் பண்பாட்டு உணர்வோடு வெளியிடுவது இக்கதையின் சிறப்பு. நாகரிகம் என்ற மேற்பூச்சினைப் பொருட்படுத்தக்கூடாது;

உண்மையான பண்பாட்டுணர்வுக்கு எவ்வித மேற்பூச்சும் தேவையில்லை; இயற்கையாகவே அது ஒளிரும் ஆற்றலுடையது என்ற அழகிய, அடிப்படை உண்மையை நுட்பமாகக் காட்டியுள்ள தனிச் சிறப்பு வாய்ந்தது இக்கதை. மலேசியத் தமிழர்களிடையே பெருகிவரும் மணவிலக்குகளுக்கும், தற்கொலைகளுக்கும் சாட்டையடி கொடுப்பதாக அமைந்துள்ளது இக்கதை.

மனைவி கணவனைத் தவிர வேறொருவனைக் கனவிலும் கருதாப் பண்புடையவள். ஆனால் கணவன் செல்வச் செழிப்பினால் வேலைக்காரியாக வந்தவளைப் புது வீட்டுக்காரியாக்கித் தன் முதல் மனைவியை விரட்டியவன். மனைவி தன் மக்களை வளர்க்கப் பணிமகளாகப் பல இடங்களில் வேலைபார்த்துப் பாடுபட்டு மக்களை நன்னிலைக்குக் கொணர்கிறாள். நிலையான, உறுதிகொண்ட பெண்மனத்துக்கும், அலைபாயும் ஆண்மனத்துக்கும் ஏற்பட்ட முரண்பாடுகளை அழகுறக் காட்டுகிறது 'இதுகளும் ஒரு ஜென்மங்கள்' என்ற கதை. காம உணர்வு நிறைந்த செல்வச் சீமான்களைக் கண்டு அருவருக்கச் செய்கின்றது இக்கதை.

கோபமும், காமமும் இரு கண்ணாகக் கொண்ட கணவனோடு வாழ்வது எத்துணை கொடுமையானது என்பதனை 'மணவிகாரங்கள்' என்ற கதை பிரதிபலிக்கிறது. தயா குடும்பவாழ்வின் அடிப்படை . உண்மையை எவ்வளவு அழகாகக் கூறுகிறாள்.

> "ஆத்மாக்கள் இணையாத வெறும் உடல்வாழ்வு எத்தனை இதயங்களுக்கு வெறும் சுமையாகிப் போகிறது. காலமெல்லாம் பூத்துக் குலுங்கி, காய்த்துக் கனியாகி, அதனைப் பிறர்க்குத் தந்து தானும் வாழ்கின்ற மாமரத்தின் தியாக வாழ்க்கையைப் போன்றதுதான் இல்லற வாழ்க்கையில் சங்கமிக்கும் ஆத்மாக்களின் இணைப்பு. ஒரு குலைக் கனிக்காக வெட்டி வீசியெறியப்படும் வாழை மரத்தின் வாழ்வுதான்

உடற்பசியைத் தணித்துக் கொள்ள ஏற்கும் இல்லறம்"13

இக்கதை குடும்ப வாழ்வில் உடற்பசியைத் தணித்துக் கொள்ளும் காமத்துக்கும், பண்புகளை வளர்க்கும் பண்பாட்டுப் பள்ளியாய்க் கருதும் பண்பான மனத்துக்கும் ஏற்படும் முரண்பாடுகளைக், குடும்பவாழ்வின் அடிப்படை இரகசியத்தை இனிதே எடுத்தியம்புகின்றது. இக்கதையில் வரும் தயா புரட்சிகரமான எண்ணங்கொண்ட பெண். ஆயின் அவளும் சமுதாய முரண்பாட்டால் முரண்படுகிருள். தாலி புனிதம் வாய்ந்தது; கல்லானுலும் கணவன், புல்லானுலும் புருஷன் என்ற பொன்மொழிகளிலெல்லாம் அவளுக்கு நம்பிக்கை இல்லை. பின் ஏன் அவள் வாழ்கிருள்? தயாவின் வாழ்வுக்கான காரணத்தை அவள் சிந்திக்கத் தொடங்குகிருள் எனக் கதையை முடிப்பதன் வாயிலாக, இப்படி அவலவாழ்வு வாழும் பெண்களைச் சிந்திக்கத் தூண்டுகிருர். சுயநலமே குறியெனக் கொண்ட ஆடவன் வாழும் குடும்பம் அமைதி பெறுவதில்லை என்ற உண்மையை இக்கதை உணர்த்துகின்றதல்லவா? எலியும் பூனையுமாகக் கணவன் மனைவி வாழ்வதால் எள்ளளவும் பயனில்லை. இதனுல் மக்களின் எள்ளலுக்கும், மற்றவர்களின் எள்ளலுக்கும் ஆளாக நேரிடும் என்ற உண்மையைத் தெளிவுறுத்துகின்றது இக்கதை.

பொது வாழ்வையே கருத்தில் கொண்ட - தன் குடும்பத்தைப் பற்றிச் சிறிதும் எண்ணுத கணவன், மனைவியுடன் முரண்பட்டு நிற்பதை 'முரண்பாடுகள்' என்ற கதையில் காண்கிறோம். நடுத்தர வர்க்கத்தில் பெண்கள் படும் வாழ்க்கைத் துயரங்களைப் பிரதிபலிக்கிறது இக்கதை. இக்கதையில் இடம் பெறும் பூமா கணவனேடு முரண்பட்டுப் பின் அடங்கி விடும் நிலையைக் காண்கிறோம்.

மலையகத்தில் தமிழ்ப்பள்ளிகளைப் பற்றிக் கதை எழுதாத எழுத்தாளர்களே இலர்: எழுத்தாளர்களின் எழுத்துப்பசிக்கு இரையாகும் தமிழ்ப்பள்ளிகளில் கொஞ்சமோ

சிக்கல்கள்? இங்குள்ள அவலங்களுக்குத் தமிழர்களே காரணம் என்பது வெள்ளிடைமலே. இவ்வுண்மையைக் கருத்தில் கொண்டு 'அவலங்கள்' என்ற கதையை அழகுற எழுதியுள்ளார் பாக்கியம்முத்து. பள்ளிக்குச் செல்வதாகப் பெற்ருேரிடம் சொல்லிச் சென்ற தமிழ் மாணவன் வேறு எங்கோ காலத்தைக் கழிக்கிருன். பிள்ளையின் படிப்பு நிலவரம் அறியாத வகையில் தன் தந்தையை ஏமாற்றிப் பணம் பெற்றுச் செல்கிருன். அத்தமிழ் மாணவனின் ஆசிரியருக்கும், அம்மாணவனின் தந்தைக்கும் நடக்கும் உரையாடல் 'தமிழ்ப் பெற்ருேரின்' அவலங்களை - பொறுப்பின்மையை வேற்று மொழிப் பள்ளிக்குப் பிள்ளைகளை அனுப்பினுல் பெருமை என்று நினைக்கும் பேதைமையை வெளிச்சமிட்டுக் காட்டுகின்றன. இதனுல் தமிழ்ப் பெற்ருேர்களின் - தமிழ் மாணவர்களின் - தமிழ்ப்பள்ளி ஆசிரியர்களின் பொறுப்புணர்வு என்ன என்பதை நயமாக உணர்த்துகிருர் திருமதி பாக்கியம்முத்து. அறியாமைக்கும் ஏழ்மைக்கும் ஏற்பட்டுள்ள முரண்பாடுகளில் தமிழ்ச் சமுதாயம் சிக்கிச் சீரழிவதைக் கண்டு சமுதாய மேம்பாடு கருதிக் கீழ்க்கண்ட கருத்தை வலியுறுத்துகிருர் பாக்கியம் முத்து.

> "படிப்பு ஒண்ணையே குறிக்கோளா வச்சி படிக்கிற பிள்ளைங்க எந்த பள்ளியில படிச்சாலும் சரி முன்னுக்கு வந்திடலாம். இன்னைக்கு நம்ம நாட்டுக் கல்வி முறை அப்படித்தான் வகுக்கப்பட்டிருக்கு. எந்த மொழிப் பள்ளிங்கிறது முக்கியமில்லை. மாணவர்களோட அக்கறையும் ஆர்வமும், பெற்ருேர்களோட பொறுப்பும் எந்த அளவுங்கிறதுதான் இன்றைக்குள்ள பிரச்னையே"14

இவ்வுண்மையை மலையகத் தமிழர்கள் தங்கள் மனங்களிடைப் பதிப்பரா?

வேலைக்குச் செல்லும் பெண்கள் எதிர்நோக்கும் சிக்கல்களை 'ஒரு பெண் வேலைக்குப் போகிருள்' என்ற கதையில்

திறம்படக் காட்டியுள்ளார். பல ஆண்களுடன் ஒரு பெண் கூச்சமின்றிப் பழகினுள் என்பதற்காக அவளைக் கைவிட்டு வேறொரு பெண்ணை மணக்கத் துணியும் ஆண்களும், 'சோசியலா'கப் பழகினுலும் உடலும் உள்ளமும் ஒருவனுக்கே சொந்தம் என்று நினைக்கும் பெண்களும் முரண்படுவதனை இக்கதை விளக்குகின்றது. 'சோசியலாகப் பழகுவது' ஆண்களுக்குப் பல பெண்களின் தொடர்பை ஏற்படுத்த, அதே பழக்கம் பெண்களுக்கு வந்தால் ஏன் ஏற்பதில்லை? சமுதாய முரண்பாடே - ஆணுக்கொரு நீதி; பெண்ணுக்கொரு நீதி எனக் கருதும் பேதைமையே - காரணம் என்பதை உய்த்துணர வைக்கிறுர். ஒரு தனி மனிதனே எப்படி முரண்படுகிறுன்? உலகிற்காகச் சமஉரிமை பேசுபவன் தன்னளவில் சமஉரிமையை வரவேற்பதில்லை என்ற நிலையைக் காட்டிப் படிப்பினையை உய்த்துணர வைக்கிறுர் ஆசிரியர். வேலைக்குச் செல்லும் பெண்களின் 'சோசியல்' பழக்கத்தினுல் வேலைக்குச் செல்லாமல் வீட்டிலிருக்கும் பெண்களுக்கு வரன் கிடைப்பதிலும் சிக்கல்கள் எழுவதனைக் காட்டியுள்ளார். 'அளவுக்கு மிஞ்சினுல் அமிர்தமும் விடமே' என்ற பழமொழியைக் கருத்தில் கொண்டு படிப்பினை வழங்குகிறுர் ஆசிரியர்.

> "கொதிநீர், சீனி, பால், தூள் ஆகிய நான்கும் கலக்கப்பட்ட பின்னரே சுவையான தேநீர் உருவாவதுபோல ஒரு பெண்ணும் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களும் அமைந்தாலே ஒரு சிறந்த பெண் எனப்படுகிறுள். தேநீரில் பாலோ அல்லது சீனியோ ஏதாவதொன்று குறைந்தாலும் சுவைக்காதது போலவே என் சினேகிதியைப் போன்றவர்களும் தங்கள் தன்மையிலிருந்து ஒன்றை இழந்தாலும் மற்றவர் முன் மதிப்பிழந்து போகின்றனர்"15

இக்கருத்தின் வழியே மரபு வழிப்பட்ட சிந்தனைகளுக்கும் புரட்சிகரமான சிந்தனைகளுக்கும் இடையே உள்ள முரண்-

பாட்டை ஆசிரியரும் கொண்டுள்ளாரோ என்ற ஐயம் எழுகின்றது. தயா, கீதாவின் தாய் ஆகியோருடைய பாத்திரப் படைப்புக்கள் இவ்வையத்தை உறுதிப்படுத்து-கின்றன.

ஒருத்திக்கு மாலையிட்ட பின் மற்றொருத்தியிடம் மனத்தைப் பறிகொடுத்த கணவனின் பலவீனத்தால் அகல்யா என்ற பெண் தம் மூன்று குழந்தைகளோடு, தாலியைக் கழற்றிக் கணவனிடமே தந்துவிட்டு அக்கினி-வேள்வியில் குதிக்கிறாள். இரட்டை வாழ்க்கை வாழும் ஆண் மகனுடன் எந்தத் தமிழ்ப் பெண்ணும் வாழச் சம்மதியாள். இவ்வடிப்படைப் பண்பிலே அகல்யா சிறந்திருப்பினும், இப்பண்பை விடக் கணவனின்றிக் குழந்தைகளோடு வாழ்ந்து விட முடியும் என்ற நெஞ்சுரமே அவளை அக்கினி வேள்விக்கு ஆயத்தப்படுத்துகிறது. இக்கதையில் பெண்கள் சிந்திக்க வேண்டிய ஒரு சீரிய உண்மையையும் கூறுகிறார் ஆசிரியர்.

"ஆண்மனத்தின் அடித்தளத்தில் பொய்யுறக்கம் கொண்டிருக்கும் சபலம், இளமைத் தளதளப்-பில் விழிப்புற்று, மூன்று பிள்ளைகளையும் மனை-வியையும் மறக்க வைத்துவிட்டாலும் அல்லது ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்ளத் தவறி-விட்டாலும் ஒருத்தியின் கணவனைத் தான் அபகரித்துக் கொள்ளும் ஓர் உறுத்தல் கூடவா அந்த இதயத்தில் எழவில்லை. அத்தகைய உறுத்-தல் இருந்திருக்குமேயானால் நான்கு மாதக் கருவை வயிற்றில் சுமந்து அதையே ஒரு சாட்-சிப் பொருளாக்கி வாழ்க்கையில் பங்கு கேட்-கும் அளவுக்கு அவள் துணிந்திருக்க முடி-யுமா?"16

அகல்யாவின் இக்கேள்வி நியாயமானதன்றோ?

வறுமையில் வாடும் தமிழ் மாணவர்களின் நிலை கண்டு

அக்கறை கொள்ளாத பெற்றோர்களை 'மாற்றம்' என்ற சிறுகதையில் குறைகூறி இருப்பினும் தமிழ்ச் சமுதாய மாற்றத்துக்கு, முன்னேற்றத்துக்குத் தமிழ்ப்பள்ளிகளின் தலைமையாசிரியர்கள், பெற்றோர்-ஆசிரியர் சங்கத் தலைவர்கள் ஆகியோர் வழிகோலவேண்டும் என்ற விழைவை அடிப்படையாய்க் கொண்ட கதை 'மாற்றம்'. சித்தார்த்தன் என்ற ஆசிரியர் சமூகநலனில் அக்கறை கொண்ட, உண்மையும் நேர்மையும், பரிவும் பாசமும் கொண்ட ஓர் ஆசிரியர்! தமிழ்ச் சமுதாய மாற்றத்திற்கு வழிகாட்டும் ஒளி விளக்கு! இவரை வேலையை விட்டு நீக்க எண்ணும்,, உண்மையைச் சொன்ன ஒரே பாவத்திற்காகத்,தலைமை ஆசிரியர் செய்த தவறைச் சுட்டிக் காட்டியதற்காகத் தண்டனை கொடுக்க எண்ணும் சுயநலப் புலிகளாம் தலைமை ஆசிரியர்கள் உள்ளவரை தமிழ்ச் சமுதாய மாற்றம் பகற்கனவே!

## தோட்டப்புற இளைஞர்களுக்கு வழிகாட்டி

பாக்கியம் முத்துவின் தொகுப்பிலுள்ள இறுதிக் கதை 'கோபுரக் கலசம்' என்பதாம். கோபுரம் சிறப்பு வாய்ந்தது. அதினுஞ் சிறப்புடையது கோபுரக் கலசம். அதுபோலத் தோட்டப்புறங்களை விட்டுவிட்டு வாழ்க்கையின் முன்னேற்றமே நகர்ப்புறங்களில்தான் அடங்கியுள்ளது என்ற நம்பிக்கை உடைய தோட்டப்புற இளைஞர்களுக்குக் 'கோபுரக் கலசம்' போல் வழிகாட்டிய ஒளிகூட்டிய சிறப்புடையவன் காந்திநாதன். 'இந்தியாவின் முன்னேற்றம் கிராமங்களிலேதான் அடங்கியுள்ளது' என்ற காந்தியக் கொள்கையைக் கடைப்பிடிக்கும் கொள்கையாளன் காந்திநாதன். 'பேராற்றல் மிக்க இளைய தலைமுறைக்கு ஆண்மையும் அறிவும் ஒருங்கே அமையப் பெற்று, அபூர்வமாகக் கிடைக்கப்பெற்று ஒரு தலைவனாக, தொண்டனாக நின்று தானும் இயங்கி, மற்றவர்களையும் இயக்கிக் கொண்டிருக்கும் காந்திநாதன் தோட்டப்புற இளைஞர்களிடையே மலிந்திருக்கும் சீர்கேடுகளைக் களைய வழிகாட்டும் தலைசிறந்த பாத்திரம். கோபுரக் கலசமாக இளையர் ஒளிரவேண்டும் என்னும் பெருநம்பிக்கையில் பிறந்த பண்புநலக் கதையாகும் இக்கதை. நூலிற்கும்

முடிமணியாகத் திகழ்கிறது இக்கதை.

கருப்பொருளை நுட்பமான முறையில் சித்திரித்துக்காட்டும். திருமதி பாக்கியம் முத்து அருமையாகக் கதை கூறிச் செல்லும் ஆற்றலுடையவர். நினைவோட்ட முறையில் கதை கூறுவது; நிகழ்ச்சிகள் வழியே கதையை நடத்திச் செல்வது, கதைமாந்தர் பண்புகளை விளக்கும் பண்புநலக் கதை போன்ற பல உத்திகளால் கதை கூறும் திறம்மிக்கவர். இவருடைய சிறுகதைகள் வாசகர்களைக் கவர்ந்து கதையோடு ஒன்றச் செய்யும் பான்மையின. ஏனெனில் அகநோக்கு நிலை (*Internal Viewpoint*) வழியே பாத்திரங்கள் கதை கூறும் சிறப்பேயாம்.

உணர்ச்சிச் செறிவுடைய மொழிநடை சிறுகதையின் சீவனாகும். இந்நடையில் கைதேர்ந்தவர் பாக்கியம் முத்து. வாசகர் ஒவ்வொருவரும் கதைமாந்தரின் துன்பத்தைத் தன் துன்பமாகக் கருதும் அளவுக்கு மொழிநடை நம்மைக் கவர்ந்திழுக்கிறது. ஆனால் 'அவலங்கள்' என்ற கதையில் மட்டும் கொச்சைத் தன்மை சிறிது விரவியுள்ளது. ஆய்வின் அடிப்படையில் இதற்கொரு அமைதியைக் கூறலாம். 'அவலங்கள்' என்ற கதையில் ஏழை மாணவனின் ஏமாளித் தந்தையாக, படிப்பறிவில்லாத தோட்டப்புறத் தந்தையாக வரும் பாத்திரம் பேசுவதால் கொச்சைத் தன்மையில் பேசவைத்தார் போலும் பாக்கியம் முத்து! ஆயின் தரமான சிறுகதை எழுத்தாளர் கொச்சைத் தன்மையில் ஒரு கதை எழுதினாலும் அதனால் வரும் சோர்வு அல்லது தொய்வு தொற்றுநோயாக மற்றக் கதைகளையும், பிற எழுத்தாளர்களையும் தொற்றிக்கொள்ளும். காலத்தைக் கடந்து தன் படைப்பு வாழவேண்டும் என விழையும் ஒவ்வோர் எழுத்தாளனும் கொச்சை வழக்குகளை அறவே விட்டொழிப்பது நல்லது.

**தனிச் சிறப்பு உருவகங்கள்**

திருமதி பாக்கியம் முத்துவின் மொழிநடைக்கும்,

சிந்தனைத் திறனுக்கும் அவருடைய உவமை, உருவகங்கள் நல்ல சான்றுதாரங்களாம். அவருடைய தலைப்புக்கள் அரிய உருவகங்களாக, குறியீடுகளாக விளங்குவது தனிச் சிறப்புடையதாம். மரபு வழிப்பட்ட வாழ்க்கை, நாகரிக வாழ்க்கை ஆகிய இரண்டுக்குமுள்ள வேறுபாடுகளை மல்லிகை மலர், தாழம்பூ ஆகியவற்றைக் கொண்டு விளக்கியிருப்பது (ப.17); நுனிப்புல் மேய்வது என்ற மரபுத் தொடரை விளக்கி எழுதியுள்ளது (ப.17) முள்ளைப் பரப்பி அதனைத் துணி கொண்டு மூடியது போன்றது இன்றைய வாழ்க்கை (ப.17; காமிராவைக் கையாள்வது போல வாழ்வையும் கையாளவேண்டும் (ப.21) எனப் பல உவமை, உருவகங்களை அடுக்கிக் கொண்டே போகலாம். மேலும் சமுதாய முரண்பாடுகள் தனிமனிதனை, குடும்பத்தை, சமுதாயத்தை, உலகையே பாதிக்கும் இயல்புடையவை என்ற அடிப்படையில் ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு விதமான முரண்பாட்டைக் காட்டுகின்றது. சுருங்கக் கூறின் மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் நல்ல சிறுகதைகளைப் படைக்கும் திறமை பெற்ற எழுத்தாளர்களுள் ஒருவர் பாக்கியம் முத்து என்ற உண்மையை 'முரண்பாடுகள்' என்ற சிறுகதைத் தொகுப்பு வெளிக்காட்டுகின்றது. குடும்பப் பின்னணியில் எழுதும் நங்கையருள் இவருக்குத் தனிச் சிறப்புண்டு.

'ஆத்மாவின் ராகங்கள்' என்பது புகழ்பெற்ற தமிழ் நாவலாசிரியர் நா.பார்த்தசாரதியின் அருமையான புதினம். இப்படைப்பின் பெயரால் கவரப்பட்ட பாக்கியம்முத்து இப்பெயரிலேயே வானம்பாடியில் தொடர்கதை ஒன்றினை வெளியிட்டார்.

தரம்மிக்க எழுத்தாளராம் இவருடைய படைப்புக்களுக்கு மலையகத் தமிழ் இலக்கிய உலகம் என்றென்றும் ஆதரவு வழங்கினுல் இவருடைய இலக்கியப்பணி மேலுஞ் சிறக்க வழியுண்டு!

# நிர்மலா பெருமாள்

மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் தரமான இலக்கியப்படைப்புக்களை உருவாக்கிய, ஆற்றலுடைய பெண்ணெழுத்தாளர்கள் மிகச் சிலரே. இவர்களுள் ஒருவர் திருமதி. நிர்மலா பெருமாள். 'நிர்மல்குமாரி' என்னும் புனைபெயரிலும் சிறுகதைகளை எழுதிவருகிறார். தன்னுடைய எண்ணங்களைத் துணிவுடன் வெளியிடும் அஞ்சாமை மிக்கவர். சமுதாய அவலங்களைக் கண்டு பொங்கியெழும் இவர், அவற்றுக்கான தீர்வுகளையும் காட்டுவர். இவருடைய முதல் சிறுகதைத் தொகுப்பு 'நெருப்புநிலவு' என்னும் பெயர் கொண்டது. இவருடைய எழுத்தாற்றலுக்கு இத்தொகுப்பு சான்றாக அமைகிறது.

நெருப்புநிலவு என்னும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள சிறுகதைகள் சமுதாயச்சிக்கல்களைக் கருவாகக் கொண்டவை. இவை ஆசிரியரின் சமுதாய அக்கறையை வெளிக்காட்டும்.

சமுதாயவளர்ச்சியில் - சமுதாய மாற்றத்தில் இளைஞர்களின் பங்கு தலையாயது என்ற உண்மையை உணர்த்துகிறது முதற்கதை. முருகனுக்கு வெற்றி என்னும் இக்கதையில் ஆலயநிர்வாகத்தில் ஊழல் நிலவுவதை அம்பலப்படுத்துகிறார் ஆசிரியர். இதனை எதிர்த்த இளைஞர்கள் வெற்றி பெறுவதை இக்கதையில் காண்கிறோம். இவ்வெற்றி நேர்மைக்குக் கிடைத்த வெற்றியாகும். சுயநலத்தால் சமுதாயத்திற்குத் தீங்கு விளைவிக்கும் ஆலயநிர்வாகத் தலைவர் போன்றவர்களுக்கு இக்கதை நல்ல படிப்பினை. இளைஞர்கள், பொல்லாங்கு புரிந்த தலைவர் தன்னுடைய தவற்றை உணருமாறு செய்கின்றனர்.

ஆலயம் என்னும் கதை அன்னையர் தினச் சிறப்புக்கதையாகும். தன் குழந்தைகளின் வளமான வாழ்வுக்காகக், கொண்டவனின் கொடுமையையும் சகித்துக்கொண்டு

போராடிய தாயை இக்கதையில் சந்திக்கிறோம். பெரும்பாலும் பெண்ணெழுத்தாளர்களின் படைப்புக்களில் பெண்கள் சிறப்புறச் சித்திரிக்கப்படுவர் என்ற கருத்துக்கு இக்கதை சான்றாகும். தியாகத்தின் வடிவமாக மட்டுமன்றி இக்கதையில் காலத்துக்கேற்பக் கலைகளைக் கற்க வாய்ப்பளிக்கும் தாயையும் காண்கிறோம். பெண்களுக்குத் தற்காப்புக்கலையைக் கற்க உதவும் தாயைப் படைத்துள்ளார் ஆசிரியர். கதையின் கருப்பொருள் பழமையானது; பழக்கப்பட்டது என்று நினைக்க வாய்ப்புண்டு. இலக்கியங்களில் தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை எனத் தாய்மையைப் போற்றிப் பரவினும், நடைமுறை வாழ்க்கையில் அன்னையை ஆலயமாகக் கருதுவோர் எத்தனை பேர்? குறிப்பாக மலேசியத் தமிழ்ச்சமுதாயத்தில் படித்துப் பட்டம் பெற்ற இளைஞர்கள் பலர் தம் முன்னேற்றத்திற்கு ஏணியாக அமைந்த அன்னை தந்தையரைப் புறக்கணித்து அவதியுறச் செய்கின்றனர். இவ்வவலத்தின் கொடுமையை உணர்ந்தே ஆசிரியர் இக்கருப்பொருளுக்கு முக்கியத்துவம் அளிக்கிறார்.

குடும்பத்திற்காக உழைக்கும் கோதை சத்யாவின் வாழ்வில் நிகழும் போராட்டங்களைச் 'சத்தியசோதனை'யில் காண்கிறோம். சத்யாவிற்குக் குடும்பவாழ்க்கை, புறவாழ்க்கை இரண்டிலுமே போராட்டங்களைச் சந்திக்க நேரிடுகிறது. அவளுடைய மனச்சஞ்சலங்களை இக்கதையில் காட்டியுள்ளார்.

பெற்ற பிள்ளை தாயைப் புறக்கணித்துவிடவே ஒரு தாய், தன் பிள்ளைக்குச் சுமையாக விரும்பாமல் சாலை நிர்மாணப்பணியில் சிற்றாள் வேலை பார்க்கிறாள். மருமகளின் வற்புறுத்தலால் தாய் அவ்வேலையைத் தன்னுடைய முதுமைக்காலத்தில் செய்கிறாள். திருமணம் புரிந்ததும் மனைவியின் கட்டுப்பாட்டில் அடங்கிப்போகும் ஆடவர் குலத்தையும், பெண்ணுக்குரிய இரக்க உணர்வுகளே இல்லாத அரக்கியரான மருமக்கள் குலத்தையும், இவர்களால் வயதானகாலத்தில்கூட வேலைசெய்யவேண்டிய தாய்மார்களின் தவிப்பையும் இக்கதை சிறப்புறக் காட்டியுள்ளது.

ஓய்வாக இருக்கவேண்டிய காலத்தில் ஓயாமல் உழைத்த அத்தாயின் பொருட்டு வாசகர் ஒவ்வொருவர் உள்ளமும் தவிக்கின்றது.

விதவைப்பெண் ஒருத்தி சுமங்கலிக்கோலத்துடன் உலவுவதைச் சமுதாயம் எந்தக்கோணத்தில் பார்க்கின்றது என்பதனை 'தாலிக்கு இத்தனை கேள்வியா' என்ற கதையில் ஆதங்கத்தோடு வெளியிடுகிறார் ஆசிரியர். விதவைப்பெண் என்பதனால் கற்பைச் சூறையாடக் காத்திருக்கும் கயவர்கள் மத்தியில் பாதுகாப்பாக இருக்கவேண்டித் தாலியணிவது தவறா? எனப் பழமைவாதிகளைச் சிந்திக்கவைக்கிறார் ஆசிரியர். தாலி என்ற வேலியை வைத்துக்கொண்டு தவறுகள் புரியும் பத்தினிகளையும் இக்கதையில் சாடுகிறார் ஆசிரியர். தாலியைப் பற்றிக் கேள்விகள் கேட்கும் சமுதாயத்தைக் கண்டு,

> "கணவன் இருந்தும் தாலியைக் கழற்றி வைத்துவிட்டுத் தங்களை விலைபேசித் திரியும் ஒரு சில தர்மபத்தினிகளைப் பற்றி இந்தச் சமுதாயம் அலட்டிக் கொள்வதில்லை. ஆனால் ஒரு விதவை, அவள் கணவன் அக்கினி சாட்சியாகக் கட்டிய தாலியைப் புனித சின்னமாக மதித்து, அது தனக்குப் பாதுகாப்புத் தரும் கவசமாக இருக்கவேண்டும் என்பதற்காக, கழுத்தில் அணிந்திருப்பதைப் பொறுத்துக்கொள்ள மாட்டேன் என்கிறது இந்தச் சமுதாயம்."*17'*

என உள்ளம் வெதும்புகிறார். நெருப்புநிலவு என்னும் இச்சிறுகதைத் தொகுப்பில் ஆசிரியரின் மிகச்சிறந்த படைப்பாகக் கலையம்சம் பொருந்திய சிறுகதையாக இக்கதை திகழ்கிறது. பெண்மன உணர்வுகளைச் சித்திரிப்பதில் ஆசிரியர் வல்லவர் என்பதையும், சமுதாயத்தை அவர் எள்ளிநகையாடும் திறத்தையும் இக்கதையில் காண்கிறோம். சான்றாகக் 'கற்பகத்தைப் பற்றிய செய்திகள் அலுவலக வானொலியில் ஒலிபரப்பப்படுவது நின்றுவிட்டது' எனக்

'குத்தலாக' அவர்கூறும் வார்த்தைகள் புறம்பேசுவோரை ஊசியாகக் குத்தும்.

'பட்ட காலிலே படும்; கெட்ட குடியே கெடும்' என்னும் பழமொழியின் விளக்கமாக அமைகிறது துன்பங்கள் உறங்குவதில்லை என்னும் கதை. ராமையா - ரத்தினம்மாள் தம்பதியரின் பெண்பிள்ளைகளுக்கு அடுக்கடுக்காகத் துன்பங்கள் வருகின்றன. பிள்ளைகளின் துன்பங்களினால் வயதான பெற்றோர் மரணத்தைத் தழுவுகின்றனர். சிறகொடிந்த பறவைகளாகத் துன்பத்தைத் தாங்கிக்கொண்டு கண்ணியமாக வாழும் பெண்களை இக்கதையில் காட்டுகிறார்.

'தலைவர் என்ன செய்தார்' என்னும் கதை அரசியலைப் பின்னணியாகக் கொண்டது. தலைவருக்கு மட்டுமே பொறுப்பு இருப்பதாகக் கருதும் தொண்டர்கள் 'தலைவர் என்ன செய்தார்' என்று வினாத் தொடுக்காமல் தாம் என்ன செய்தோம் என்று சிந்திக்கத் தொடங்கவேண்டும்; தலைவரை மதிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். தீய சக்திகளை ஒழிப்பதில் சமுதாய இயக்கங்களும் அவற்றின் தொண்டர்களும் ஒற்றுமையோடு உழைக்கவேண்டும் என்ற உண்மைகளை உணர்த்துகிறது இக்கதை. இப்படிப்பட்ட உண்மைத் தொண்டனே தலைவனாக முடியும் என்ற நம்பிக்கையையும் ஊட்டுகிறது இக்கதை.

ஆசிரியப்பணியின் அருமை பெருமைகளை விளக்குகிறது 'நானும் ஒரு டீச்சர்' என்னும் கதை. நல்ல மாணவர்களை - வருங்கால சமுதாயத்தை உருவாக்கும் ஆசிரியர்கள் எவ்வாறு ஒழுகவேண்டும்; பொதுநல உணர்வு, சமுதாயச்சிந்தனை ஆகியவற்றோடு, 'ஊருக்கு உபதேசம்; உள்ளுக்குள் வனவாசம்' என்னும் போலித்தன்மையின்றிச் செயல்படவேண்டியதன் அவசியத்தை இக்கதை வலியுறுத்துகிறது. ஆசிரியரின் தமிழ்ப்பற்றுக்கும், தமிழ்ச்சமுதாயம் தாய்மொழியைக் கற்கவேண்டியதன் அவசியத்திற்கும் இக்கதை நல்லதோர் எடுத்துக்காட்டாக அமைகிறது.

உதிரிப்பூ ஒன்று உருகுகின்றது என்னும் கதை சித்தியின் கொடுமையைக் கூறுகின்றது. தாழ்வான பகுதியில் உள்ள வீடுகள் பெருமழையில் சிக்கியதால் மகிழ்ச்சியோடு கொண்டாடப்படவேண்டிய தீபத்திருநாள் கொண்டாடப்படாமல் கோலங்கள் கலைந்ததை 'கலைந்த கோலங்கள்' என்ற கதையில் காட்டுகிறார் ஆசிரியர்.

கலையை உயிராக மதிக்கும் பெண்ணுக்குக் கலைஞானமே இல்லாத கணவன் அமைந்த கொடுமையை - பொறாமையால் மனைவியின் கால்களில் எரிதிராவகம் ஊற்றிய கொடுமையை - காதலியை விட்டுவிட்டு மற்றொரு பெண்ணுக்கு மாலையிடும் கோழைகளை - விதவைகளைப் பற்றிய தவறான எண்ணங்களை - உணர்ச்சி வேகத்தில் சீர்திருத்தம் பேசிவிட்டுச் சீர்திருந்தாமல், மற்றவர்களுடைய உணர்வுகளை மதிக்காமல் எத்தித்திரியும் கொடுமையைக் கண்டு நெருப்புநிலவாகக் காய்கிறாள் நளினா. இவள் படைப்பு மிகச்சிறந்த படைப்பு. நெருப்புநிலவு நளினாவைக் குறிக்கும் உருவகம். சிறந்த பண்புநலக்கதையாகும் இது.

பிறந்த குடும்பத்தினரின் வெறுப்பு; காதலித்துத் திருமணம் புரிந்த கணவரின் அலட்சியப்போக்கு இவற்றால் அன்பு, பாசம், அரவணைப்பு இவற்றுக்காக ஏங்கும் பெண்ணொருத்தியின் வாழ்க்கையைக் காட்டுகிறது முடிவில்லா வாழ்க்கை என்னும் கதை.

ஒரு பெண் தனித்து வாழ்வதற்குரிய பாதுகாப்பு குறைந்து வரும் இன்றைய நாளில் பசியைப் போக்கிக்கொள்ளப் பந்தத்தை ஏற்படுத்திக்கொள்கிறாள் கோகிலா. இப்பெண்ணின் கதையைக் கூறுகிறது 'பசி தந்த பந்தம்' என்னும் இக்கதை. கோகிலாவின் செயல் முறையானதே என்பதைச் சமுதாயம் ஏற்கவேண்டும் என்பதற்காக, ஆசிரியர் இதனை நியாயப்படுத்துகிறார்.

"ஒரு பெண் எப்பவுமே கற்புநெறியோடு
கண்ணியமா வாழணும்னுதான் பாடுபடுவா.

அப்படிப்பட்ட பொண்ணுங்களக் களங்கப்படுத்திப் பலிகடாவா ஆக்கி நாசப்படுத்திப் பார்க்கிற நன்றிகெட்ட, கட்டின ஜென்மங்களாலேயே . . . . நடுத்தெருவுக்கு வந்து கடைச்சரக்காகிவிட்ட பல பெண்களுக்கு மத்தியிலே இந்தக் கோகிலா ஏற்றுக்கொண்ட வாழ்வு, எந்த விதத்திலே முறைகேடானதாக இருக்கமுடியும்?"18

ஆசிரியரின் கேள்வி நியாயமானது என்பதனைக் கற்போடு வாழநினைக்கும் ஒவ்வொரு பெண்ணும் ஒப்புவாள்.

சமுதாயத்துக்குத் தொண்டு செய்வது போல நடிக்கும் தலைவர்களை - தொண்டர்களைத் துரோகிப் பயல்கள் என்ற கதையில் காண்கிறோம். சமுதாயத்தின் பிரதிபலிப்பு இக்கதை. இந்நயவஞ்சக - நடிப்புச் சமுதாயத்தில் சில நல்ல உள்ளங்களும் குமுறிக்கொண்டு வாழ்கின்றன என்ற உண்மையையும் இக்கதை கூறுகிறது.

அரசியல், குடும்பம், இளைய சமுதாயம், மொழியுணர்வு, பெண்களின் சிக்கல்கள் எனச் சமுதாயத்தின் பல்வேறு அங்கங்களைத் தன்னுடைய கதைகளில் சித்திரித்துள்ளார் ஆசிரியர். இத்தொகுப்பின் முன்னுரையில் 'அக்கரைப் பார்வையில்' இளசை எஸ். சுந்தரம் குறிப்பிட்டுள்ளது போலக் கதையினூடே ஆசிரியர் பிரச்சாரம் செய்கிறார். தான் சொல்ல எண்ணியதைக் கூறிவிடவேண்டும் என்ற துடிப்பே இதற்குக் காரணம். ஆசிரியரை இனங்கண்டுகொள்ள இப்போக்கு உதவுகிறது.

மலேசியத் தமிழ்ப் பெண்ணெழுத்தாளர்கள் பலரும் ஒரு சிறுகதைத்தொகுப்பு வெளியிட்டதும் ஓய்ந்துவிடுவர்; எழுத்துத்துறையினின்று ஒதுங்கிவிடுவர். இன்னும் சிலர் முற்றாக வனவாசம் மேற்கொள்வர். இதனால் அருகிவரும் பெண்ணெழுத்தாளர்கள் மத்தியில் திருமதி. நிர்மலா பெருமாள் தொடர்ந்து எழுதிவருவது பாராட்டிற்குரியது.

இவருடைய இரண்டாம் சிறுகதைத்தொகுப்பு விரைவில் வெளிவரவுள்ளது. இஃது இவருடைய எழுத்துலகப் பயணத்தின் சாதனையாகும்.

## தேவிநாதன்சோமசன்மா:

மலேசிய நாட்டின் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றவர் கவிஞர் சோமசன்மா. இவருடைய மகள் தேவிநாதன்சோமசன்மா. நேசமலர்கள் என்னும் சிறுகதைத்தொகுப்பு தேவிநாதனின் கைவண்ணத்தில் உருவானது.

பெண்களோடு தொடர்புடைய பிரச்னைகளேயே அதிகமாகக் கையாண்டுள்ளார் ஆசிரியர். பெண்மன உணர்வுகளே அழகாகப் பிரதிபலித்துள்ளார் ஆசிரியர். அழகான பெண்களின் செருக்கு - அகந்தை பல கதைகளில் வெளியிடப்பட்டுள்ளது.

பதினேரு கதைகளேக் கொண்ட இத்தொகுப்பில் ஓரிரு கதைகளே நம் உள்ளத்தைத் தொடுகின்றன. ஆலயமணியின் ஓசையிலே, கைப்பிடித்தபோது என்ற இரு கதைகளும் அவலச்சுவை கொண்டவை; நல்ல கதைகள். எனக்காக யாரோ என்னும் கதையில் பெண்பார்க்கும் படலத்திலேயே நின்றுவிட்ட ஒரு பெண்ணின் உணர்வுகளேச் சித்திரிக்-கின்றது. 'வீட்டிற்கு விருந்து வருவது போல' மாப்பிள்ளேகள் வரும் கொடுமையை உயிர்ப்போடு, உணர்வோடு வெளியிட்-டுள்ளார் ஆசிரியர். ஆண்களின் மனப்போக்கை நயமாகச் சாடுகிருர்.

> "இந்த ஆண்களுக்கு ரசிப்பதற்குக் குட்டைப் பாவாடை, காதலிப்பதற்கு முழுப் பாவாடை, திருமணம் புரிந்துகொள்ளச் சேலே என்பதை"19

மலர் விட்டு மலர் தாவும் வண்டுமனம் படைத்த ஆண்களே ஆசிரியர் சாடியிருப்பது பெண்களின்பால் கொண்ட இரக்-கத்திஞலன்ரேு?

கைப்பிடித்தபோது என்னும் இறுதிக்கதையில் கண-வன் - மனைவி அன்பினே அழகுற வலியுறுத்துவர்.

"காதலித்துக் கைப்பிடித்தால் மட்டும் போதாது. கைப்பிடித்த பின்னும் காதலிக்க-வேண்டும். ஆம்! எந்த ஒரு மனிதனும் தனது மனைவியிடம் அன்பு செலுத்தத் தவறினுல் அவள் தவறிவிடுவாள்."20

பெண்களைப் பலவீனமானவர்கள் என்று சமுதாயம் கூறுகிறது. ஆயின் பெண்கள் வைராக்கியமுடையவர்கள் என்பதை வைராக்கியம் என்ற கதையில் கூறுகிறுர். பெண் திருமணமானபின் பிறந்த வீட்டு உதவியை நாடுவது மதிப்-புடைய செயலன்று என்ற உண்மையையும் இக்கதையின் மூலம் பெண்ணுலகிற்குக் கூறியுள்ளார் ஆசிரியர்.

இந்நாட்டில் பெண்கள் எழுத்துத்துறையில் ஈடுபடா-மைக்குரிய காரணங்களுள் ஒன்றைக் கதையாக்கியுள்ளார் ஆசிரியர். நேர்பாதை என்னும் கதையால் எழுத்துத்துறை-யில் நேரிழையார் எதிர்நோக்கும் சிக்கல்களைக் காட்டுகிறுர் ஆசிரியர். கதையெழுதும் பெண்களுக்குக் காதல் கடிதம் எழுதும் இளையரின் மனப்போக்கையும் இக்கதை சித்திரிக்-கிறது. எழுத்தாளர்களைப் பற்றிச் சமுதாயம் என்ன நினைக்-கிறது என்பதற்குப் பிரபாகரன் சான்று:

"இந்த எழுத்தாளர்களே இப்படித்தானு? இவள் எழுதிய கதையை நம்பி இவளிடம் வாழ்வுப் பிச்சை கேட்க எண்ணிவந்தேன். சொல்வேறு - செயல்வேறு. எழுத்தில் எழுதுவதை உண்மை-யில் நடத்திக்காட்ட முடியாதவர்கள் எதற்காக மக்களை ஏமாற்ற நல்லவர்கள் போல் இப்படி-யெல்லாம் எழுதவேண்டும்?"21

எழுத்தாளன் ஊருக்கு உபதேசிப்பான்; தன் வாழ்க்கையில் அதனைப் பின்பற்றமாட்டான் என்ற சமுதாயக்கணிப்பு இங்கு ஒலிக்கின்றதல்லவா?

பாத்திரங்களே கதைகூறும் உத்தியை அகநோக்குநிலை என்பர். இவ்வுத்தி வாசகர்களோடு பாத்திரத்திற்கு நெருக்கமான உறவை ஏற்படுத்தும். இதனுல் பாத்திரங்களின் உணர்வுகளை - பிரச்னைகளை வாசகர்கள் தம்முடையதாகவே உணர்வர். இவ்வுத்தியை எனக்காக யாரோ, எங்கே நிம்மதி என்னும் இரு கதைகளில் பயன்படுத்தியுள்ளார்.

பெண்தெய்வம் கதை நிதானமாகப் படித்துப் புரிந்து-கொள்ளவேண்டிய கதை. பெயர் மாருட்டம், ஆள் மாருட்டம் கதைக்குச் சிக்கலானதைப் போல வாசகர் புரிந்து-கொள்வதற்கும் சிக்கலாக அமையலாம்.

'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்' என்ற பழமொழி போல எழுத்தாற்றல் மிக்க குடும்பத்திலே பிறந்த காரணத்தால் இவருடைய கதைகளைச் சுவைக்க முடிகிறது.

மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் சில பெண்ணெழுத்தாளர்கள் தங்கள் சிறுகதைகளைத் தொகுத்து நூலாக வெளியிட்டுள்ளனர். இவர்களுள் த.மு. அன்னமேரி, விமலா நாயர், கமலாட்சி ஆறுமுகம் ஆகியோரும் அடங்குவர். விரிவஞ்சி இவை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை.

பத்திரிகைகளோடும், பரிசுகளோடும் தம் எழுத்துப்பணியை வரையறுத்துக்கொண்ட சில தரமான எழுத்தாளர்களும் உள்ளனர். பினங்கு ஜனகாசுந்தரம், பினங்கு எஸ். கமலா, பினங்கு எஸ். பத்மாதேவி, ச. சுந்தராம்பாள், வே. ராஜேஸ்வரி, தீனரட்சகி, ஜானகிகண்ணன் போன்ருேரைக் குறிப்பிடலாம். இவர்களுடைய எழுத்துப்படிவங்கள் நூல் வடிவு பெறின் இலக்கிய உலகம் பயனடையும்.

*நாவல்துறை:*

இந்நாட்டில் பெரும்பாலான நாவல்கள் குறுநாவல்-களாகும். பினங்கு எஸ். கமலா, ந. மகேசுவரி, கம்பார் எஸ். வேலுமதி ஆகிய மூவருடைய குறுநாவல்களே அச்சேறியுள.

**தொடர்கதை:**

ந. மகேசுவரி, பாவை, ராஜேஸ்வரி, தீனரட்சகி ஆகி-யோர் பல தொடர்கதைகள் எழுதியுள்ளனர். இவை அச்-சேறவில்லை என்பது வருந்துதற்குரியதே.

**கவிதைத்துறை:**

மறைந்த திருமதி உஷாநாயருக்குப் பிறகு திருமதி ஜெயபத்மினி முருகையன், வே. ராஜேஸ்வரி ஆகியோர் கவிதைத்துறையில் சில கவிதைகளை வெளியிட்டுள்ளனர். வே. ராஜேஸ்வரி புதுக்கவிதைத்துறையில் ஈடுபாடு மிக்கவர். 'நிழலைச் சுமக்கும் வெளிச்சங்கள்' என்னும் புதுக்கவிதைத் தொகுப்பில் சில கவிதைகள் 'ராதா' என்னும் பெண்மணி-யால் எழுதப்பட்டவை. திருமதி பாவை புதுக்கவிதைத் துறையில் நாட்டஞ் செலுத்தி வருகிறார்.

சிறுவர் இலக்கியம், நாடகம் போன்ற துறைகளிலும் பெண்கள் எழுதியுள்ளனர். இவற்றுள் ந.மு. தேவி, ந.மகேசு-வரி ஆகிய இருவரே குறிப்பிடத்தக்கவர். நாடகத்துறையில் நாடகங்களை எழுதிப் பொருள் சேர்த்தோர் அதிகம். தர-மான நாடக ஆசிரியர் யாருமிலர்.

இந்நாட்டு இலக்கிய வளர்ச்சியில் பெண்களின் பங்கு பிற எழுத்தாளர்களோடு ஒப்புநோக்குகையில் மிகக் குறைவே.

## மேற்கோள் விளக்கம்

1. நூலாசிரியரின் கட்டுரை, மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் மகேசுவரியின் பங்கு, தமிழ் ஓசை, 2-7-89.
2. ந.மகேசுவரி, தாய்மைக்கு ஒரு தவம், முன்னுரை.
3. திருவள்ளுவர், திருக்குறள் - 57.
4. ந.மகேசுவரி, புதிய வாரிசு, ப-36.
5. இரா. தண்டாயுதம், ஓர் இலக்கிய ஆய்வு, ப-56.
6. பழமொழித்திரட்டு, கழக வெளியீடு.
7. பாவை, ஞானப்பூக்கள், முன்னுரை.
8. புதுமைப்பித்தன், தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள் என்ற நூலில் மேற்கோளாகக் கையாளப்பட்டுள்ளது.
9. பாவை, ஞானப்பூக்கள், முன்னுரை, ப-30.
10. பாக்கியம்முத்து, முரண்பாடுகள், முன்னுரை.
11. மேலது.
12. மேலது, ப-26.
13. மேலது, ப-50.
14. மேலது, ப-58.
15. மேலது, ப-66.
16. நிர்மலா பெருமாள், நெருப்பு நிலவு, ப-52.
17. மேலது, ப-106.
18. தேவிநாதன் சோமசன்மா, நேசமலர்கள், ப-15.
19. மேலது, ப-80.
20. மேலது, ப-41.



## நூலாசிரியர் அறிமுகம்

முனைவர் திருவாட்டி இலக்குமி மீனாட்சிசுந்தரம் அவர்கள் மலாயாப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகப் பணிபுரிந்து வருபவர். இம்மங்கைநல்லாரின் தாயகம் தமிழகம். அருந்தமிழ் வளர்த்த அழகப்பர் கலைக் கல்லூரியிலும், பைந்தமிழ் வளர்த்த பச்சையப்பன் கல்லூரியிலும் தமிழ்க்கல்வி கற்றவர். தமிழுணர்வும் தமிழ்த்திறமும் கொண்ட இவர் கலைமணி கொத்தமங்கலம் சுப்புவின் புதினங்கள், மிதிலைப்பட்டிக் கவிராயர்கள் என்னும் இரு நூல்களைத் தமிழகத்தில் வெளியிட்டவர். மாண்பார் தமிழ், மலையகத்திலும் செழித்து வளரவேண்டும் என்னும் நன்னோக்குடன் இலக்கிய அரும்புகள் என்னும் இந்நூலை மலையகத்தில் வெளியிட்டுள்ளார். இந்நாட்டு இலக்கிய வளர்ச்சியில் இந்நூலின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். எழுத்தாற்றல்வல்ல இவர் சோர்விலாச் சொல்லாற்றலும் மிக்கவர். இவரின் தமிழ்ப்பணி தொடர்வதாக!


JAYA BAKTI
جاي بکتي ஜெயபக்தி


28 & 30, Wisma Jaya Bakti, Jalan Cenderuh 2,
Batu 4, Jalan Ipoh, 51200 Kuala Lumpur.
TEL: 6219399 (5 LINES) FAX: 6219585

ISBN : 967-900-323-X